பதவுரை.

| | |
|---|---|
| ये | எவ்வுருத்திரர்கள் |
| पृथिव्यां | மண்ணுலகில் இருக்கின்றார்களோ, அவர்களுள் |
| येषां | எவர்களுக்கு |
| अन्नं | உணவுப்பொருள் |
| इषवः | அம்புகளோ, |
| तेभ्यः रुद्रेभ्यः | அவர்களின் பொருட்டு |
| दश प्राचीः | கிழக்கு முகமாய் பத்து விரல்கள் நிற்கும்படி கை குவித்து |
| नमः | வணங்குகின்றேன். |
| दश दक्षिणा नमः | மற்றும், பத்துவிரல்களும் தெற்கு முகமாய் நிற்கும்படியும் கைகுவித்து வணங்குகின்றேன் |
| दश प्रतीचीः नमः | பத்துவிரல்களும் மேற்கில் நிற்கும்படியாகவும் கை குவித்து வணங்குகின்றேன் |
| दश उदीचीः नमः | பத்துவிரல்களும் வடக்கில் நிற்குமாறும் கை குவித்து வணங்குகின்றேன் |
| दश ऊर्ध्वाः नमः | பத்துவிரல்களும் மேலே நிற்கும் வண்ணமும் கைகுவித்து வணங்குகின்றேன் |
| ते | அவ்வுருத்திரர்கள் |
| नः | எம்மைச் |
| मृडयन्तु | சுகப்படுத்துவார்களாக. |
| यं | எவனை |
| द्विष्मः | யாம் வெறுக்கின்றோமோ, |
| यश्च | எவன் |
| नः | எம்மை |
| द्वेष्टि | வெறுக்கின்றானோ, |
| तं | அவனை |
| वः | (உருத்திரர்காள்!) உங்களுடைய |
| जंभे | அகன்றவாயிற் |
| दधामि | போட்டுவிடுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

பூமியிலிருந்து கொண்டு, பத்தியமிலாத உணவருந்தல், விருப்பால் மிக அருந்தல், அருந்தத்தகாததை யருந்தல் முதலியவைகளின் வாயிலாகத் துன்

புறுத்துகின்றார்களோ, அவர்களின் பொருட்டு வணக்கம். அவர்கள், எமது பகைவரை நீக்கி எமக்குச் சுகந் தருவார்களாக என்பதாம்.

அன்னமுண்டும், அன்னமுண்ணாதும், அன்னத்தைத் திருடியும், மற்றும் பலவகையாக அன்ன நிமித்தம் துன்பப்படுத்துகின்றவர்கள் என்பது கருத்து. ஜம்பே = பல்லில்.

இம் மந்திரத்தால், வேட்போன் வலம் வந்து முன்போல் நின்றுகொண்டு முகத்திற்குச் சமமாய் மூங்கிலைப் பிடித்துக்கொண்டு தாரையாகப் பாலை விடும்போது 'ஸ்வாஹா' என்பதுடன் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதை யுணர்க.

---

## ஐந்தாம் விநியோகம்

### இரண்டாவது ஹோமம்

### இரண்டாவது எசுர் மந்திரம்.

அந்தரிக்ஷத்திலுள்ள உருத்திரர்களைப் போற்றல்.

नमो॑ रु॒द्रेभ्यो॒ ये॑ऽन्तरि॑क्षे॒ ये॒षां॒ वात॒ इष॑व॒स्तेभ्यो॒ दश॒ प्राची॒र्दश॑ दक्षि॒णा
दश॑ प्र॒तीची॒र्दशोदी॑ची॒र्दशो॒र्ध्वास्तेभ्यो॒ नम॒स्ते नो॑ मृडयन्तु॒ ते यं द्वि॒ष्मो
यश्च॑ नो॒ द्वेष्टि॒ तं वो॒ जम्भे॑ दधामि ॥

#### பதவுரை.

| | |
|---|---|
| ये अन्तरिक्षे | பூமிக்கும் வானுக்கும் நடுவில் (அந்தரிக்க வுலகில்) எவ்வுருத்திரர்களிருக்கின்றார்களோ, அவர்களுள் |
| येषां | எவர்கட்கு |
| वातः | வாயுக்கள் |
| इषवः | அம்புகளோ, |

#### சாயணபாடியக் கருத்து.

அவர்களின் பொருட்டு, என்பது முதலியவைகளை முன்போற் சேர்த்துப் பொருள் கொள்க. புயற்காற்று முதலிய வாயுக்களால் துன்புறுத்துகின்ற உருத்திரர்கள் என்பதாம்.

இம் மந்திரத்தால் முன்போல் இரண்டாவது (2) ஹோமஞ் செய்தல் வேண்டும் என்க.

---

ஆறும் விநியோகம்.

மூன்றுவது ஹோமம்

மூன்றுவது எசுர் மந்திரம்.

வானுலகிலுள்ள உருத்திரர்களைப் போற்றல்.

नमो॑ रु॒द्रेभ्यो॒ ये दि॒वि येषां॑ व॒र्षमिष॑वः तेभ्यो॒ दश॒ प्राची॒र्दश॑ दक्षि॒णा दश॑ प्र॒तीची॒र्दशोदी॑ची॒र्दशो॒र्ध्वास्तेभ्यो॒ नम॒स्ते नो॑ मृडयन्तु॒ ते यं द्वि॒ष्मो यश्च॑ नो॒ द्वेष्टि॒ तं वो॒ जम्भे॑ दधामि ॥

पदवुரை.

| | |
|---|---|
| ये दिवि (स्थिताः) | வானுலகில் எவ்வுருத்திரர்களிருக்கின்றார்களோ, அவர்களுள் |
| येषां | எவர்கட்கு |
| वर्षं | மழைகள் |
| इषवः | அம்புகளோ, |

சாயணபாடியக் கருத்து.

'அவர்களின் பொருட்டு' என்பது முதலியவைகளைச் சேர்த்துப் பொருள் கொள்ளல் முன் போன்றது. மழையின்மையாலும், மிகு மழையாலும் துன்புறுத்துகின்ற உருத்திரர்கட்கு வணக்கம் என்பதாம்.

இம் மந்திரத்தால் முன்போல் மூன்றுவது ஹோமஞ் செய்தல் வேண்டும். இவைகட்கு வமை வருதல் இல்லை, மூன்றிற்கும் 'ருத்ரேப்ய இதம்' என்று தியாகங்கள் செய்தல் வேண்டும்.

இத்துடன் பின் செய்யும் மூன்று 'சித்பக்னிஹோமங்களும்' முடிந்து விட்டன.

பிறகு, வேட்போன் இம் மூன்று எசுர் மந்திரங்களை, வேள்வித் தலைவன் ஓதும்படி செய்வித்தல் வேண்டும்.

அதன் பின், பால் விட்ட மூங்கிலையும் எருக்கம் இலையையும், பசுமாடுகள் நடமாடாத விடத்திற் போட்டு விடல் வேண்டும். பிறகு, இருவரும் கையில் தண்ணீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

உருத்திராத்தியாயம் ஐந்தாவது பிரபாடகம் முடிந்தது.

## பரிசேடம்.

வேட்போன், உலகத் தீயில், காட்டுக் கோதுமைப் பொங்கல் செய்து கா-5, பிர-5, அநு-7, 'यो रुद्रो अग्नौ' என்பது முதலிய மந்திரத்தால், முன் சத ருத்திரீய ஹோமங்கள் செய்த செங்கலின்மீது போட்டுவிட்டு, கையில் நீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேள்வித்தலைவன், மூன்று அம்புகளுடன் ஒரு வில்லையும் வேட்போனிடங் கொடுத்தல் வேண்டும். அவன், அதை வாங்கிக்கொண்டு மகாக்கினி சயனத்தின் மேற்கில் கிழக்கு முகமாய் வில்லில் அம்பைவைத்துத் தொடுப்பவன் போன்று நிற்கவேண்டும். வேள்வித்தலைவன், சயனத்திற்குக் கிழக்கே மேற்கு முகமாய் நின்றுகொண்டு, அவ் வில்லையும் சயனத்தையும் பார்த்துக்கொண்டு, மேற்படி ஐந்தாங் காண்ட மந்திரமாகிய 'यत्ते रुद्रपुरः' என்பது முதலிய மந்திரத்தால் கை குவித்துக்கொண்டு போற்றல் வேண்டும்.

பிறகு வேட்போன், வட பக்கச் சிறகின் வட பக்கத்தில் தெற்கு முகமாய் நின்றுகொண்டும், வேள்வித்தலைவன் தெற்குச் சிறகின் தெற்குப் பக்கத்தில் வடக்கு முகமாக நின்றுகொண்டும் முன்போல், 'यत्ते रुद्र दक्षिणा' என்பது முகலிய முந்திய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், கிழக்கில் மேற்கு முகமாகவும், வேள்வித்தலைவன் அப்பிரதக்ஷிணமாய் வந்து மேற்கில் கிழக்கு முகமாகவும் முன்போல் நின்றுகொண்டு, 'यत्ते रुद्र पश्चात्' என்பது முகலிய முந்திய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே கை குவித்துக்கொண்டு போற்றுதல் வேண்டும்.

பிறகு, வேட்போன் தெற்குச் சிறகிற்குத் தென் பக்கமாய் வடக்கு முகமாகவும், வேள்வித்தலைவன், வடக்குச் சிறகிற்கு வட பக்கமாய்த் தெற்கு முகமாகவும் முன்போலவே நின்று கொண்டு, 'यत्ते रुद्रोत्तरात्' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே கை குவித்துக்கொண்டு போற்றுதல் வேண்டும்.

அதன் பிறகு, இருவரும் அப்பிரதட்சிணமாகவே வந்து கிழக்கில் மேற்கு முகமாக வேட்போனும், மேற்கில் கிழக்கு முகமாக வேள்வித்தலைவனும் முன்போன்றே நின்றுகொண்டு, 'यत्ते रुद्रोपरि' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முன்போலவே கை குவித்துக்கொண்டு போற்றல் வேண்டும்.

மற்றும், இவ்வைந்து மந்திரங்களை மாத்திரம் வேள்வித்தலைவன் ஓதல் வேண்டும்; வேட்போன் ஓதுதல் இல்லை.

பரிசேடம் முடிந்தது

ஐந்தாம் பிரபாடகம் முற்றிற்று.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## நான்காங் காண்டத்தில் ஆறும் பிரபாடகம்.

## அக்கினி சயன சமஸ்காரம்.

### விடயச் சுருக்கம்.

प्रपाठके पञ्चमेहि चितिसंपूर्त्यनन्तरम् ।
वर्णितो रुद्रहोमोऽथ षष्ठे वाच्योऽग्निसंस्कृतिः ॥ १ ॥
परिषेचन मारभ्य संस्कारा ये चिकीर्षिताः ।
ते पञ्चस्वनुवाकेषु प्रोक्ताः शेषोऽश्वमेधगः ॥ २ ॥

ஐந்தாம் பிரபாடகத்தில், மகாக்கினிசயன முடிவில் செய்ய வேண்டிய உருத்திர ஹோமங்கள் முடிந்தன. ஆறும் பிரபாடகத்தில் அக்கினி சமஸ்காரஞ் சொல்ல வேண்டுவதில், ஐந்தநுவாகங்களால் பரிஷேசனந் தொடங்கிச் செய்ய வேண்டிய சமஸ்காரங்கள் கூறி முடிந்தன; எஞ்சிய அநுவாகங்களால் ஆசுவமேதங் கூறப்படுகின்றது என்பது.

---

### முதலநுவாக விடயச் சுருக்கம்.

..........................अश्मेति परिषिञ्चति ।
अश्मंस्ते प्रतिपर्येति समुद्रेत्यग्निमष्टभिः ॥
विकर्षेदित्यपां द्वाभ्यामारोहति चितिं नृषत् ।
व्याघारः पञ्चभिर्येदे द्वाभ्यामग्निमवोक्षति ॥
प्राणदा अवरुह्याग्निस्तिग्मेनेत्याहुतिद्वयम् ।
प्रथमेत्वनुवाकेऽस्मिन्मन्त्रा द्वाविंशतिरीरिताः ॥

நீரைத் தாரையாய்விடுதல், அப்பிரதட்சிணமாய் வருதல், தவளையாற் றேய்த்தல், சிதியில் ஏறுதல், வியாகார ஹோமங்கள் செய்தல், தயிருந் தேனுந் தெளித்தல், இறங்குதல், இரண்டு ஆகுதி செய்தல் என்பது.

## நான்காங் காண்டம் ஆருவது பிரபாடகம்

### முதல் அநுவாகம்.

நான்கு பஞ்சாதிக்குமேல் நாற்பத்து நான்கு பதங்களைக் கொண்டது.

---

பரிஷேசனம் (நீரைத் தெளித்தல்) விகர்ஷணம் (தவளையைக் கொண்டு தேய்த்தல்) என்பது முதலிய சமற்காரங்களைக் கூறுமந்திரங்கள்.

अश्मन्नूर्जं पर्वते शिश्रियाणां वाते पर्जन्ये वरुणस्य शुष्मे ।
अद्भ्य ओषधीभ्यो वनस्पतिभ्योऽधिसंभृतान्तान्न इषमूर्जन्धत्त
मरुतस्सꣳरराणाः । अश्मꣳस्ते क्षुदमुन्ते शुगृच्छतु यन्द्विष्मः ।
समुद्रस्यत्वाऽवाकयाऽग्ने परिव्ययामसि । पावको अस्मभ्यꣳ शिवो
भव । हिमस्यत्वा जरायुणाऽग्ने परिव्ययामसि । पावको अस्मभ्यꣳ
शिवो भव । उप ॥ १ ॥ ज्मन्नुपवेतसेऽवत्तरन्नदीष्वा । अग्ने
पित्तमपामसि । मण्डूकिताभिरागहि सेमन्नो यज्ञम् । पावकवर्णꣳ
शिवङ्कृधि । पावक आचितयन्त्या कृपा । क्षामन् रुरुच उषसो न
भानुना । तूर्वन्नयामन्नेतशस्य नूरण आयो घृणे । नततृषाणो
अजरः । अग्ने पावकरोचिषा मन्द्रया देवजिह्वया । आदेवान् ॥२॥
वक्षियक्षिच । सनः पावकदीदिवोऽग्ने देवाꣳ इहावह । उपयज्ञꣳ
हविश्च नः । अपामिदन्न्ययनꣳ समुद्रस्य निवेशनम् । अन्यन्ते
अस्मत्तपन्तु हेतयः पावको अस्मभ्यꣳ शिवो भव । नमस्ते हरसे
शोचिषे नमस्ते अस्त्वर्चिषे । अन्यन्ते अस्मत्तपन्तु हेतयः पावको
अस्मभ्यꣳ शिवो भव । नृषदे वट् ॥ ३ ॥ अप्सुष देवड्वनस
देवड्बर्हिष देवट्सुवर्विदे वट् । ये देवा देवानां यज्ञिया यज्ञि-
यानाꣳ संवत्सरीण मुपभागमासते । अहुता दोहविषो यज्ञे अस्मिन्

தெளித்தல்)

त्स्वयञ्जुहुध्वं मधुनो घृतस्यं । ये देवा देवेष्वधिदेवत्वमायन् ये ब्रह्मणः पुर एतारो अस्य । येभ्योनर्ते पर्वते धामकिञ्चननते दिवो न पृथिव्या अधिस्नुषु । प्राणदाः ॥ ४ ॥ अपानदा व्यानदाश्च- क्षुर्दावर्चोदा वरिवोदाः । अन्यनेते अस्मत्तपन्तु हेतयः पावको अस्मभ्यꣳ शिवो भव । अग्निस्तिग्मेन शोचिषा यꣳसद्विश्वन्न्य- त्रिणम् । अग्निर्नो वꣳसते रयिम् । सैनानीकेन सुविदत्रो अस्मे यष्टा देवाꣳ आयजिष्ठस्स्वस्ति । अदब्धो गोपा उतनः परस्पा अग्ने- द्युमदुतरेवद्दिदीहि ॥ ५ ॥

முதல் விநியோகம்.

நீரைத் தாரையாய் விடல்

மந்திரம் :

अश्मन्नूर्जं पर्वते शिश्रियाणां वाते पर्जन्ये वरुणस्य शुष्मे । अद्भ्य ओषधीभ्यो वनस्पतिभ्योऽधिसंभृतान्ताम् इषमूर्जन्धत्त मरुतस्सꣳरराणाः ।

உரை.

நன்கொடையாளர்களான மருத்துக்களே ! நீங்கள், கல்லிலும், மலையிலும் பெருங் காற்றிலும், மழையிலும், (கரியமேகத்திலும்) வருணனுடைய வன்மையிலும் இருப்பதும், அங்ஙனமே, நீரிலிருந்தும், கொடி செடிகளிலிருந்தும், நெல் கோதுமைகளிலிருந்தும், புரசைமுதலிய வனஸ்பதிகளிலிருந்தும் நன்கு தேடப் பெற்றதுமாகிய அத்தகைய வன்மைக்கு நிமித்தமாகிய உணவுப் பொருளை எமக்குக் கொடுப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வேட்போன் ஒரு குடத்தில் நீரை எடுத்துக்கொண்டு மகாக்கினிசயனத்தை மும்முறை வலமாக வருங்கால் அந்நீரைத் தாரையாய் விட்டுக்கொண்டு வரல் வேண்டு மென்பதாம்.

இரண்டாவது விநியோகம்.

மகாக்கினி சயனத்தை இடமாகச் சுற்றுதல்.

மந்திரம் :

अश्मꣳस्ते क्षुदमुंते शुगृच्छतु यं द्विष्मः ।

உரை

செங்கலடுக்காகிய அக்கினியே! உனது பசிப்பிணியும், உனது வெப்பமும், எப் பகைவனை யாம் வெறுக்கின்றோமோ, அத்தகைய இப்பகைவனை அடைக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன் அக் குடத்தை வைத்துவிட்டு, மகாக்கினி சயனத்தை மும்முறை அப்பிரதட்சிணஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, 'இப்பகைவனை' என்னுமிடத்தில் பகைவனுடைய பெயரைச் சொல்லிக் கொள்ளல் வேண்டும்; இன்றெனில் இப் பாவியை என்று சொல்லல் வேண்டும் என்பதை யுணர்க.

இனி, வேலம்பாசியையும், வேதசு என்னும் நீர் நொச்சி மரத்தின் கொம்பையும் ஒரு தவளையையுஞ் சேர்த்து ஒரு நீண்ட மூங்கிலிற் கட்டிக்கொள்ளல் வேண்டும்.

---

மூன்றாவது விநியோகம்

எட்டு மந்திரங்களை ஓதி தவளையால் உரஞ்சுதலில்

முதல் மந்திரம்

समुद्रस्यत्वाऽवाकयाऽग्ने परिव्ययामसि । पावको अस्मभ्यꣳ शिवो भव ।

உரை

மகாக்கினிசயனத்தீயே! உன்னை, கடலிலுள்ள வேலம்பாசியால் மேல்புறம் முழுவதையும் நன்கு உரஞ்சுகின்றேன்; நீ, எமக்கு, புநிதப்படுத்துவோனும் பொறுமையுடையோனும் ஆவாயாக என்பது.

இரண்டாவது மந்திரம்

हिमस्यत्वा जरायुणाऽग्ने परिव्ययामसि । पावको अस्मभ्यꣳ शिवो भव ।

உரை

அக்கினியே! உன்னை, சீதளத்தன்மையின் உற்பத்திக்குக் காரணமாகிய வேலம்பாசியால் என்பது விசேடம், மற்றவை முன்போனறன என்பது.

மூன்றாவது மந்திரம்

उपज्मन्नुप वेतसेऽवत्तरं नदीष्वा । अग्नेपित्त मपामसि ।

உரை

அக்கினியே! நீ, பூமியிலிருக்கின்றாய். வேதசு என்னும் ஒருவகைக் கொடியிலிருக்கின்றாய். ஆற்று நீரிலும் உள்ளவாறு பாதுகாப்புத்தன்மையில் இருக்கின்றாய். நீரின் ஒளியாயுமிருக்கின்றாய் என்பது.

நான்காவது மந்திரம்

**मण्डूकिताभिरागहिसेमन्नो यज्ञम् । पाकवर्णं शिवङ्कृधि ।**

உரை

தவளைக்குலமே ! நீ பிறகு கூறப்படும் இருக்கு மந்திரங்களுடன் வருவீர்களாக. அத்தகைய நீங்கள், இங்குச் செயப்படும் எமது வேள்வியை, அக்கினி போன்ற ஒளியுடையதும், பயனை யளிப்பதாற் சாந்தமுடையதுமாகச் செய்வீர்களாக என்பது.

ஐந்தாவது மந்திரம்

**पावक आचितयन्त्या कृपा । क्षामन्रुरुच उषसो न भानुना ।**

உரை

தவளையே! நீ, இவ்வக்கினியை யுணரும் வன்மையோடு கூடியதாய் இங்கு வருவாயாக; நீ வரில், இவ்வக்கினி, உஷாக்கால வெளிச்சத்தால், பூமியில் பொருள்கள் விளங்குவதுபோன்று விளக்கமுடையதாகும் என்பது.

ஆறாவது மந்திரம்

**तूर्वन्नयामन्नेतशस्य नूरण आयो घृणे । नततृषाणो अजरः ।**

உரை

மிகுந்த வேகமுடைய குதிரை, போரில், பிறருடைய சைன்யவன்மையை ஒழிப்பதுபோன்று நாற்புறமுஞ் சூழ்ந்து எரியும் இவ்வக்கினி, கிழப்பருவமுடையதும், இச்சை யுடையதுமன்று. அதாவது எப்போதுந் திருப்தி யுடையது என்பது.

ஏழாவது மந்திரம்

**अग्ने पावक रोचिषा मन्द्रया देवजिह्वया । आदेवान् वक्षियक्षिच ।**

உரை

அக்கினியே ! சோதகனும், பிரகாசகனுமாகிய நீ, விளக்கமுடையதும், மிருதுமாகிய நாவால் தேவர்களை வரவழைப்பாயாக. வேள்வியையுஞ் செய்வாயாக என்பது.

எட்டாவது மந்திரம்

**सनः पावक दीदिवोऽग्ने देवाँ इहावह । उपयज्ञँ हविश्च नः ।**

உரை

பரிசுத்தப்படுத்துவதும் பிரகாசமுடையதுமாகிய அக்கினியே ! நீ, எம்பொருட்டு இவ்வேள்விக்கு தேவர்களை வரவழைப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்வெட்டு மந்திரங்களாலும், வேட்போன், அம் மூங்கிற் கழியின் அடியைப் பிடித்துக்கொண்டு, தவளையின், கண் மூக்குக்கள் தேய்ந்துபோமாறு மகாக்கினிசயனத்தின்மீது நன்றாய்த் தேய்த்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, அம் மூங்கிற் கழியை குப்பைக்குழியிற் போட்டுவிட்டு, கையில் தண்ணீரைத் தொட்டுக்கொள்ளல் வேண்டும்.

இனி, சூத்திரத்தைத்தழுவி, 'பிரஸ்தோதா' என்பவன் மகாக்கினிசயனத்திற்குத் தெற்காகவே சென்று, கருடசயனத்தின் தலைக்குக் கிழக்குப்புறம் மேற்குமுகமாக நின்றுகொண்டு, 'अग्न आयूंषि' என்பது முதலிய மூன்று இருக்குக்களால் ஆர்ச்சிக காயத்திரியால் சயனத்தின் தலையைப் போற்றல்வேண்டும்.

பிறகு, தெற்குச் சிறகிற்குத் தெற்கில் வடக்கு முகமாக நின்றுகொண்டு ரிஷி, தேவதை, சந்தங்களுடன் 'अभित्वा शूरनोनुमः' என்பது முதலிய 'ரதந்தரம்' என்னும் மூன்றால் தெற்குச் சிறகைப் போற்றல் வேண்டும்.

மற்றும், வாலிற்கும் மேற்காகவே சென்று வடக்குச் சிறகிற்கும் வடக்கில் தெற்கு முகமாய் நின்று கொண்டு, ரிஷி, தேவதை, சந்தங்களுடன், 'त्वामिद्धि हवामहे' என்பது முதலிய பிருகத் சாமம் என்னும் மூன்றால் வடக்குச் சிறகைப் போற்றல் வேண்டும்.

மற்றும், வாலிற்கு மேற்கில் கிழக்குமுகமாக நின்றுகொண்டு, ரிஷி தேவதை, சந்தங்களுடன், 'वासन्ताः' என்பது முதலிய 'ऋतुस्था यज्ञा यज्ञीयं' என்னும் ஒரு இருக்கை மும்முறை ஓதி வாலைப் போற்றல் வேண்டும்.

மற்றும், 'அபிகட்சம்' என்னும் தெற்கு வாலின் சந்தின் அருகில், கிழக்கு முகமாய் நின்றுகொண்டு, ரிஷி, தேவதை, சந்தங்களுடன், 'कया नश्चित्रः' என்பது முதலிய 'வாமதேய்வம்' என்னும் மூன்றால் தெற்கு வாலின் சந்தைப் போற்றல் வேண்டும்.

மற்றும், அவ்வாறே, வடக்கு வாலின் சந்திக்கருகில் கிழக்கு முகமாய் நின்றுகொண்டு, ரிஷி, தேவதை, சந்தங்களுடன், 'இமா:' என்பது முதலிய பிரஜாபதேர் ஹ்ருதயம், என்னும் ஒரு இருக்கை மும்முறை ஓதி வடக்கு வாலின் சந்தைப் போற்றல் வேண்டும்.

அதன் பிறகு, 'அத்வர்யுபதம்' என்னும் வேட்போன் ஏறும் வழியாகிய ஐந்தாம் வரிசையின் ஐந்தாவது கல்லை, சைதம், என்னுஞ் சாமத்தாற் போற்றல் வேண்டும்.

மற்றும், வேட்போன், ஸ்துதஸ்யஸ்துதம், என்பது முதலிய மந்திரத்தை வேள்வித்தலைவன் ஓதும்படி செய்வித்தல் வேண்டும்.

மீண்டும், இருக்கோதுவோர்கள், மகாக்கினி சயனத்திற்கு மேற்கில், ஆசுவலாயன சூத்திரப்படி வாக்கு நியமத்துடன் நிரஸந, உபவேஸநம் (தருப்பை

யாசனத்தில் ஒரு தருப்பையை எடுத்து வெளியில் எறிந்து விட்டு அதில் உட்காருதல்) செய்து முடிந்தபிறகு, 'அக்கினிரஸ்மி' என்பது முதலிய மந்திரத்தை முடிவில் பிரணவத்துடன் மும்முறை இரைந்து ஓதல் வேண்டும் வியாகிருதி (ஓம் பூர்புவஸ்வ:) என்னும் மந்திரத்தால் வாக்கு மௌனத்தை விடல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'शस्त्रस्य शस्त्र' என்பது முதலிய மந்திரத்தை வேள்வித்தலைவன் ஓதும்படி செய்தல் வேண்டும்.

சஞ்சிதகருமம் என்னுஞ் சமற்காரக் கிரியைகள் முடிந்தன.

---

## பிரவர்க்கிய உத்வாசனம்.

பிறகு, சோமயாகத்திற் சொல்லியபடியே, நடுவில் வைத்திருக்கின்ற இயற்கைச் சுக்கான் கல்லுக்கு வடக்கில், பிரவர்க்கிய சாமான்களை எடுத்து வைப்பது முதல், மீண்டும் வந்து ஆகவனீயத்தைப் போற்றும் வரை செய்து விட்டு, சுருவில் ஐந்து முறை நெய்யெடுத்துக்கொண்டு, 'स्वयं कृण्वानः, त्वचस्तन्तुः' என்னும் பிராமண மந்திரங்களிரண்டாலும், 'अतिसर्गं वदतः, आवर्तमानः, प्रजां ददातु' என்னும் மூன்று சூக்கிர மந்திரங்களாலும், அங்வாரோஹம் எனப்படும் ஐந்து ஹோமங்களை காலமுகீபத்திற் செய்தல் வேண்டும்

வேள்வித்தலைவன், முதலாவது இரண்டு ஹோமங்கட்கு 'अग्नये तन्तुमत इदं' எனவும், இரண்டாவது மூன்று ஹோமங்கட்கும், முறையே 'मरुद्भ्य इदं, संवत्सराय परमेष्ठिन इदं, परिवत्सरायधात्रइद' எனவும் தியாகங்கள் செய்தல் வேண்டும்.

மற்றும், வேட்போன், சுருவில் ஐந்து முறை நெய்யெடுத்துக்கொண்டு, கருமான் தோலால் செய்த செருப்பை, 'சிதேத்வா' என்று வலதுகாலிலும், 'அநுசிதேத்வா' என்று இடதுகாலிலும் அணிந்துகொள்ளல் வேண்டும். வேள்வித்தலைவனும் இவ்வாறே அணிந்துகொள்ளல் வேண்டும்.

---

### நான்காம் விநியோகம்

சயனத்தின் மீதேறுதலில் முதல் மந்திரம்

**अपामिदं न्ययनꣳ समुद्रस्य निवेशनम् । अन्यन्ते असमत्तपन्तु हेतयः पावको अस्मभ्यꣳ शिवो भव ।**

உரை

இந்த மகாக்கினிசயனத் தீயானது, வேள்வி வாயிலாக நீரை யடைவதற்குரிய இடமாம். இதனால், நீர் மிகுதியாயிருத்தலால் கடலுக்கும் வீடெனவும்

படும் அத் தன்மைய வடிவுடைய அக்கினியே! உனது சைன்யங்களென்னுஞ் சுவாலைகள் என்னில் வேறாகிய பகைவனை எரித்துவிடுக; எம்பொருட்டு, பரிசுத்தங்களும் சாந்தமுடையவைகளும் ஆகுக என்பது.



இரண்டாம் மந்திரம்.

**नमस्ते हरसे शोचिषे नमस्ते अस्त्वर्चिषे । अन्यन्ते अस्मत्तपन्तु हेतयः पावको अस्मभ्यꣳ शिवो भव ।**

உரை.

அக்கினியே! இரசங்களை வற்றச் செய்கின்ற உனது ஒளிக்கு வணக்கம். அன்றியும், பொருளை விளக்குகின்ற ஒளிக்கும் வணக்கம். ஏனையவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், இவ்விரண்டு மந்திரங்களாலும் மகாக்கினிசயனத்தின்மீது ஏறுதல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு வேள்விக்கலைவனும், 'पृथिवी माक्रमिषं' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரங்கள் மூன்றாலும் மகாக்கினி சயனத்தின்மீது ஏறுதல் வேண்டும் என்பதையுணர்க.



ஐந்தாம் விநியோகம்

வ்யாகாரம் (தாரையாய்ச் செய்யும் ஹோமம்) ஐந்தனுள்

முதல் வியாகார ஹோமம்

**नृषदे वट् ।**

உரை

மனிதர் உடம்பினுள், உண்ட வுணவு பரிணமித்தற்குக் காரணமாந் தன்மையா (சாடராக்கினி வடிவா) ல், இருக்கின்ற அக்கினிக்கு அவி அர்ப்பிக்கப் படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன், சுருவில் எடுத்துக்கொண்டு வந்திருக்கின்ற நெய்யை, நடுவில் வைத்திருக்கும் இயற்கைச் சுக்கான் கல்லிலிருந்து தெற்கு அம்சம் (தோள்) வரை தாரையாய் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

ஆறும் விநியோகம்

இரண்டாவது வியாகார ஹோமம்

மந்திரம் :

अप्सुषदे वट् ।

உரை.

*வடவானலமாகக் கடலுள் இருக்கின்ற அக்கினிக்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால் வடக்குச் சுரோணியிலிருந்து சுரோணி = வாற் சந்து இயற்கைச் சுக்கான் கல்வரை தாரையாய் நெய்யை ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.*

---

ஏழாவது விநியோகம்

மூன்றுவது வியாகார ஹோமம்

மந்திரம் :

वनसदे वट् ।

உரை.

*தாவானலமாக வனத்தினுள் இருக்கின்ற அக்கினியே! உனக்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், தெற்குச் சுரோணி முதல் இயற்கைச் சுக்கான் கல்வரை தாரையாய் நெய்யை ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.*

---

எட்டாம் விநியோகம்.

நான்காவது வியாகார ஹோமம்.

மந்திரம் ;

बर्हिषदे वट् ।

உரை.

*ஆகவனீயம் முதலிய அக்கினிகளாக வேள்வியில் இருக்கின்ற அக்கினிக்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், இயற்கைச் சுக்கான் கல்லிலிருந்து வடக்கு சுரோணி வரை நெய்யைத் தாரையாய் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.*

ஒன்பதாம் விநியோகம்.

ஐந்தாவது வியாகார ஹோமம்

மந்திரம் :

**सुवर्विदे वट् ।**

உரை

இரவி வடிவாகச் சுவர்க்கத்திலிருக்கின்ற அக்கினிக்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இயற்கைச் சுக்கான் கல்லின்மீது நடுவில் நெய்யைத் தாரையாய் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இவ் வைந்து ஹோமங்கட்கும் பொன் வைத்தல் உண்டு, 'சுவாஹா' என்பது இல்லை.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று இவைகட்கு ஐந்து முறை தியாகங்கள் செய்தல் வேண்டும்.

---

பத்தாம் விநியோகம்.

தயிருந் தேனுந் தெளித்தலில் முதல் மந்திரம்

மந்திரம் :

**येदेवा देवेष्वधिदेवत्वमायन्ये ब्रह्मणः पुरएतारो अस्य ।**

உரை.

வேள்வியாற் பூசிக்கப்படும் இந்திரன் முதலிய தேவர்களின் சம்பந்த முடையவைகளும், ஒரு வருடத்தில் முடியும் மகாக்கினி சயன பாகத்தை அருந்துகின்றவர்களாந் தன்மையால் சுவாஹா காரத்தினுற் செய்யும் ஆகுதிகளினும் மாறுன ஆகுதியை யுடையவர்களுமான பிராணன்களே! நீங்கள், எம்மால் ஆகுதி செய்யப்பெற்ற இனிய சுவையுடைய நெய்யின் பாகத்தை, ஸ்வாஹாகாரமின்றி நேரே தாமே ஏற்றுக் கொள்வீர்களாக என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

மந்திரம்:

**येभ्यो नर्ते पवते धामकिञ्चन नतेदिवो नपृथिव्या अधिस्नुषु ।**

உரை.

எப் பிராணன்கள், இந்திரன் முதலிய தேவர்கட்கும் அதிட்டானத் தன்மையை யடைந்தனவோ, இங்கு அடுக்கியுள்ள அக்கினிக்கு முன் செல்

கின்றனவோ, அதாவது அக்கினியைத் தாங்குகின்றனவோ, எவைகளின்றி வீடுகள் புநிதமாகாதோ, அத்தகைய பிராணன்கள் என்னுந் தேவர்கள் வானில் இருக்கமாட்டார்கள்; மண்ணிலும் இருக்கார்கள்; மற்றே, மலைச்சிகரங் கட்கொப்பான கண் முதலிய கோளகங்களில் இருக்கின்றார்கள் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும் தயிரையுந் தேனையுங் கலந்து தெளித்தல் வேண்டு மென்பதாம்.



### பதினோராவது விநியோகம்.

கீழே யிறங்குதல்

மந்திரம் :

**प्राणदा अपानदा व्यानदाश्चक्षुर्दा वर्चोदा वरिवोदा : । अन्यन्ते अस्मत्तपन्तु हेतय :पावको अस्मभ्यꣳ शिवो भव ।**

### உரை.

இவ்வக்கினி எசமானனுக்குப் பிராணனைக் கொடுக்கின்றது, அபானனைக் கொடுக்கின்றது, வியானனைக் கொடுக்கின்றது, கண்ணைக் கொடுக்கின்றது, அழகைக் கொடுக்கின்றது, பூசையைக் கொடுக்கின்றது, இதனுடைய சுவாலை யென்னும் ஆயுதங்கள் என்னிலும் வேறான பகைவனைச்சுடுக. எமக்கு மங்கள மாகுக. மற்றது முன்போல் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், மகாக்கினி சயனத்திலிருந்து கீழே இறங்கிவிடல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், மந்திரமின்றியே கீழே இறங்கிவிடல் வேண்டும்.

பிறகு, இருவரும் மந்திரமின்றி, செருப்பைக் கழற்றிவிடல் வேண்டும்; கழற்றிவிட்டுச் சாலாமுகீயத்தை, அதாவது பழைய ஆகவனீயத் தீயை அடைதல் வேண்டும்.



### பன்னிரண்டாவது விநியோகம்

ஹோமஞ் செய்தல்

முதல் மந்திரம்

மந்திரம் :

**अग्निस्तिग्मेन शोचिषायꣳ सद्विश्वं न्यत्रिणं । अग्निर्नो वꣳसते रयिम् ।**

உரை.

இவ்வக்கினி, ஒளி மிகுந்த சுவாலையால் இராக்கதர் முதலான எல்லாப் பகைவர்களையும் நாசஞ் செய்க. தீமையையும் ஒழிக்குக. மற்றும், எமக்கு, தனத்தை தேட விரும்புக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

மந்திரம் :

**सैनाऽनीकेन सुविदत्रो अस्मे यष्टा देवाꣳ आयजिष्ठस्वस्ति । अदब्धो गोपा उत नः परस्पा अग्ने द्युमदुतरेवद्दिदीहि ।**

உரை.

இந்தச் சுவாலைக் கூட்டத்தில் நன்கு உணரப்படுகின்றவனும், எம்பொருட்டுத் தேவர்களைக் குறித்து வேட்கின்றவனும், முட்டின்றி யாகத்தை முடிக்கின்றவனும், ஒருவராலுந் துன்புறுத்தப்படாதவனும், மந்திரத்தைப் பரிபாலிக்கின்றவனும், எம்மையும் இனிது பாதுகாக்கின்றவனுமாகிய அக்கினியே ! நீ, ஒளியுடையவனும், தனமுடையவனுமாய் வீடு நில முதலானவற்றை விளக்குவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களிரண்டாலும், வேட்போன் ஒருமுறை நெய் யெடுத்துக் கொண்டு, சுவாஹா என்னுஞ் சொல்லுடன் சாலாமுகீயத் தீயில் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், ' அக்னயே அநீகவத இதம் ' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

முதலாவது அநுவாகம் முற்றிற்று.

---

## இரண்டாம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

**यद्दमा चक्षुषो द्वाभ्यां सूक्ताभ्यामाहुतिद्वयम् ।**
**समुद्रेति जले होमो मन्त्रास्सप्तदशेरिताः ॥ १ ॥**

இரண்டு சூக்தங்களால் இரண்டு ஹோமங்கள் செய்தல், சமுத்திர நீரில் ஹோமஞ் செய்தல் என்பது.

---

நான்காங் காண்டம் ஆறும் பிரபாடகம்.

இரண்டாம அநுவாகம்.

ஆறு பஞ்சாதிகட்கு மேல் ஒன்பது பதங்களைக் கொண்டது.

ஹோமங்களைக் கூறுமந்திரங்கள்.

य इमा विश्वा भुवनानि जुह्व दृषिर्होता निषसादापितानः। स आशिषा द्रविणमिच्छमानः परमच्छदोवर आविवेश। विश्वकर्मा मनसायद्विहायाधाता विधाता परमोतसन्दृक्। तेषामिष्टानि समिषामदन्ति यत्र सप्तर्षीन्पर एकमाहुः। योनः पिता जनिता यो विधाता योनस्सतो अभ्यासज्जजान॥ १॥ यो देवानान्नामधा एक एवतꣳ संप्रश्नं भुवना यन्त्यन्या। तआऽयजन्त द्रविणꣳ समस्मा ऋषयः पूर्वे जरितारोनभूना। असूर्तासूर्ता रजसो विमाने ये भूतानि समकृण्वन्निमानि। नतं विदाथय इदञ्जजानान्यद्युष्माकमन्तरं भवाति। नीहारेण प्रावृता जल्प्याचाऽसुतृप उक्थशासश्चरन्ति। परो दिवापर एना॥ २॥ पृथिव्या परो देवेभिरसुरैर्गुहा यत्। कꣳस्विद्गर्भं प्रथमन्दध्र आपो यत्र देवास्समगच्छन्त विश्वे। तमिद्गर्भं प्रथमन्दध्र आपो यत्र देवास्समगच्छन्त विश्वे। अजस्य नाभावध्येकमर्पितं यस्मिन्निदं विश्वं भुवनमधिश्रितम् विश्वकर्माह्य जनिष्टदेव आदिद्गन्धर्वो अभवद्द्वितीयः। तृतीयः पिता जनितौषधीनाम्॥ ३॥ अपाङ्गर्भं व्यदधात्पुरुत्रा। चक्षुषः पिता मनसाहि धीरो घृतमेने अजनन्नम्नमाने। यदेदन्ता अददृꣳहन्त पूर्व आदिद्द्यावा पृथिवी अप्रथेताम्। विश्वतश्चक्षुरुत विश्वतो मुखो

विश्वतो हस्त उत विश्वतस्पात् । संबाहुभ्यान्नमति संपतत्रैर्द्यावा पृथिवी जनयन्देवएकः। किꣳस्विदासीदधिष्ठानमारम्भणङ्कतमत्स्वित्किमासीत् । यदीभूमिञ्जनयन् ॥ ४ ॥ विश्वकर्मा विद्यामौर्णोन्महिना विश्वचक्षाः । किꣳस्विद्वनङ्क उसवृक्ष आसीद्यतो द्यावा पृथिवी निष्टतक्षुः। मनीषिणो मनसा पृच्छते दुतद्यदध्यतिष्ठद्भुवनानि धारयन् । याते धामानि परमाणि याऽवमाया मध्यमा विश्वकर्मन्नुतेमा । शिक्षा सखिभ्यो हविषि स्वधावस्स्वयं यजस्व तनुवञ्जुषाणः । वाचस्पतिं विश्वकर्माणमूतये ॥ ५ ॥ मनोयुजं वाजे अद्याहुवेम । सनोनेदिष्ठा हवनानि जोषते विश्वशम्भूरवसे साधुकर्मा । विश्वकर्मन् हविषा वावृधानस्स्वयं यजस्व तनुवञ्जुषाणः । मुह्यन्त्वन्ये अभितस्सपत्ना इहास्माकं मघवा सूरिरस्तु । विश्वकर्मन् हविषा वर्धनेन त्रातारमिन्द्रमकृणोरवध्यम् । तस्मै विशस्समनमन्त पूर्वीरयमुग्रो विहव्यो यथाऽसत् । समुद्राय वयुनाय सिन्धूनां पतये नमः । नदीनाꣳ सर्वासां पित्रे जुहुता विश्वकर्मणे विश्वाऽहाऽमर्त्यꣳ हविः ॥ ६ ॥

*முதலாவது அநுவாகத்தில் மகாக்கினி சயனத்தைச் சுற்றிலும் நீரைத் தெளித்தல் கூறப்பட்டது. இதில், இரண்டு சூக்தங்களால் ஹோமங்கள் கூறப்படுகின்றன.*

---

முதற் சூக்தத்தில் முதலாவது இருக்கு

முதலாவது ஹோமம்

மந்திரம் :

**यइमा विश्वा भुवनानि जुह्वदृषिर्होता निषसादापितानः । स आशिषाद्रविणमिच्छमानः परमच्छदो वर आविवेश ।**

உரை.

எப் பரமேசுரன், பிரளயகாலத்தில், பூமி முதலிய உலகனைத்தையும் ஆகுதி செய்வது போல் தன்னிடத்தில் ஒடுக்கிக் கொள்கின்றானோ, மற்றும், எல்லா முணர்கின்றவனும் சங்காரமாகிய ஹோமஞ் செய்கின்றவனுமாய் எமக்குப் பிதாவாயுமிருக்கின்றானோ, அதாவது பிரளயகாலத்தில் எல்லாவற்றையுந் தன்னுளடக்கிக் கொண்டு தான் மாத்திரமாய் நிற்கின்றானோ, அப் பரமேசுரன், தனத்தால் உபலக்ஷிதமாகக் கொள்ளப்பெற்ற உலக போகங்களை யடைய விரும்பியவனாய் தனது உண்மை வடிவை மறைத்துக்கொண்டு தன்னாலாக்கப் பெற்ற உடம்பின் நடுவிலிருக்கின்ற உள்ளக் கமலத்தில் நுழைந்துகொண்டிருக்கின்றனன் என்பது.

---

இரண்டாவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

**विश्वकर्मा मनसा यद्विहाया धाता विधाता परमोत सन्दृक्। तेषामिष्टानि समिषामदन्ति यत्र सप्तर्षीन्पर एकमाहुः ।**

உரை.

படைத்தளித்தழிக்குஞ் செயலையுடைய விசுவகருமன் என்னும் பரமேசுரன், தனது திருவுளத் தெண்ணுதல் மாத்திரத்தானே முத்தொழிலையுஞ் செய்கின்றான் வேறு கருவி முதலியன வேண்டிலன், இச்செயல்களால், பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் பெயர்களையும் பெறுகின்றனன். மற்றும், இவன் எல்லா முணர்ந்தவன், மரீசி முதலிய ஏழுரிஷிகளும் பல்வகையாகக் காணப்படுகின்ற பரமேசுரனை, படைப்பிற்குமுன் ஒருவனாகக் கூறுகின்றார்கள். அத்தகைய பரமேசுரன் அவர்கட்கு வேண்டியவற்றைத் தேடுகின்றான். அதனால் அம் மகரிஷி முதலானோர் களிப்படைகின்றனர் என்பது.

---

மூன்றாவது இருக்கு மந்திரம்.

மந்திரம்:

**योनः पिता जनिता यो विधाता योनस्सतो अभ्यासज्जजान। यो देवानां नामधा एक एव तꣳ सम्प्रश्नं भुवनायन्त्यन्या ।**

உரை.

எம்மைப் பரிபாலிக்கின்றவனும், எம்மை யுண்டாக்குகின்றவனும், விரிப்பதிலென்! உலகைத் தோற்றுவிக்கும் பரமேசுரன், உண்டாகி எமக்கு, உண்மையாகிய போக்கியப் பொருள்களையும் தனது உண்மை வடிவிலிருந்தே உண்டாக்கினன். மற்றும், எப் பரமேசுரன் தானே பல்வேறு வகைப்பட்ட

தேவதைகளின் பெயரை யேற்றுக் கொள்ளினும், அதாவது பல தேவர்களாய்த் தோற்றினும் உண்மையில் ஒருவனாகவே இருக்கின்றானே, அத்தகைய பரமேசுரனை, உண்டான எல்லாப் புவனங்களும், ஈசுரன் எவன்! புவனங்கள் எவைகள்! என்னும் வினாவெழும்படி கலந்து கொள்ளுகின்றன; அதாவது அவனுடன் ஒன்றாகி விடுகின்றன என்பது.

---

நான்காவது இருக்கு மந்திரம்.

மந்திரம்:

**त आयजन्त द्रविणꣳ समस्मा ऋषयः पूर्वे जरितारो न भूना। असूर्ते सूर्ते रजसो विमाने ये भूतानि समकृण्वन्निमानि।**

உரை.

முற் கூறிய விசுவகருமன் என்னும் பரமேசுரனால் படைப்பின் முதலில் உண்டாக்கப்பட்டவர்களும், கட்புலப்படாதவைகளை யுணர்கின்றவர்களும் தமது மகிமையிற் சிறிதுங் குறையாதவர்களுமான (தேவர்கள்) உயிருள்ளவர்களும், தத்தமது செயலில் ஏவப்பட்டவர்களுமான பிராணிகளை உண்டாக்கினார்கள் என்பது.

---

ஐந்தாவது இருக்கு மந்திரம்.

மந்திரம்:

**न तं विदाथ य इदं जजानान्यद्युष्माकमन्तरं भवाति। नीहारेण प्रावृता जल्प्या चाऽसुतृप उक्थशासश्चरन्ति।**

உரை.

விசுவகருமனாகிய எப் பரமேசுரன் இவ்வுலகை உண்டாக்கினனோ, அப் பரமேசுரனை, படைக்கப்பட்ட சீவர்காள்! நீவிர் அறியமாட்டீர்கள். யான் தேவதத்தன் யக்ஞதத்தன், நான் சீவன் என்றிவ்வாறு அறிகின்றோமென் பீரேல்! அத்தகைய பரமேசுரன் உங்களுடைய உணர்ச்சிக்கு விடயமாகுஞ் சீவனிலும் வேறாயிருக்கின்றான். அப்பரமேசுரன் எமது வடிவினன் என்று அறியாததென்னை எனின்? மூடு பனிபோல், மெய்யும், பொய்யுமாகாத அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றீர்களாதலினென்க. அறியாதது மாத்திரமா? அன்று, மற்றோ, நான் தேவன், நான் மனிதன் இது எனது வீடு நிலம் என்றிவ்வாறு வீண் வார்த்தையுமாடுகின்றீர்கள். அஃதன்றியும் உயிரோம்பலையே மேற்கொண் டிருக்கின்றீர்கள். இதனோடமையாது, பரவுலகினும் போகத்தைத் தேடிக் கொள்வதற்கு வேள்விகளில் சஸ்திரம் என்னும் ஒருவகைத் தோத்திரங்களையும் ஓதுகின்றீர்கள். இதனால் உங்கட்கு மெய்யுணர்வு இல்லை யென்பது திரண்ட பொருளாம் என்பது.

ஆருவது இருக்கு மந்திரம்.

மந்திரம்:

**परो दिवा पर एनापृथिव्या परो देवेभिरसुरैर्गुहायत्। कंस्विद्गर्भं प्रथमन्दध्र आपो यत्र देवास्समगच्छन्त विश्वे।**

உரை.

உண்மையிற் பரமேசுரன் உறைபு மிடமாகிய உள்ளக்குகையானது விண்ணுலகினும் வேறு, மண்ணுலகினும் வேறு, தேவர்கட்கும் அசுரர்கட்கும் வேறு. வேறென்பது உலகிற்குவேருய் மிகத்தூரமாய் ஆசிரியன் நூல்களாலறியத்தக்கதென்பதாம். மற்றும், எக் கருப்பத்தில் தேவர்களனைவரும் இருக்கின்றார்களோ, அத்தகைய தண்ணீராகிய கருப்பத்தை முதலில் அடைந்தனன். நீராலுண்டாகிய கருப்பத்தில், தேவர் மனிதர் முதலான பிராணிகளனைத்தும் இருக்கின்றன வென்பது.

இது நூல்களில் வெளிப்படை. அத்தகைய கருப்பமும் இன்னதென்று உணரப்படாதது. உலகிற்கு ஆதாரமானது தூலமாயிருந்தும் அறியப்படாதபோது மிக நுண்ணிய கருப்பம் அறியப்படல் எவ்வணம்? என்க.

ஏழாவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

**तमिद्गर्भं प्रथमन्दध्र आपो यत्र देवास्समगच्छन्त विश्वे। अजस्य नाभावध्येकमर्पितं यस्मिन्निदं विश्वं भुवनमधिश्रितम्।**

உரை.

எல்லாத் தேவர்களையும் உட்கொண்ட பிரமாண்டமாகிய கருப்பத்தைத் தாங்கிய அப் பரமான்மா எத்தகைய தெனின்! பிறப்பிலாத பரமேசுரனுடைய நாபியின் நடுவில், அதாவது உருவ நடுவில், இந்த எல்லாப் புவனங்களும் அடங்கிக் கிடக்கும் விதையை ஊன்றுகின்றது என்பது.

இதையே, 'முதலில் நீரை உண்டாக்கி அதில் வீரியத்தை விட்டது, அது அண்டமாயிற்று' என மிருதியுங் கூறுகின்றது.

எட்டாவது இருக்கு மந்திரம்.

மந்திரம்:

**विश्वकर्माह्यजनिष्टदेव आदिद्गन्धर्वो अभवद्द्वितीयः। तृतीयः पिता जनितौषधीनामपां गर्भं व्यदधात्पुरुत्रा।**

உரை.

அவ் வண்டத்தினுள், தேவ விலங்கு முதலான பல்வேறு வகையான உலகங்களைப் படைப்பவனும், சத்திய வுலகில் வசிக்கின்றவனுமாகிய பிரம தேவன் தோன்றினன். இரண்டாவது கந்தருவர்கள் தோன்றினார்கள். மூன்றுவது, கொடி செடிகளுக்குப் பிதாவாகிய சோமன் உண்டாயினன். பரமேசுரன் அத்தகைய பிரமாண்டமென்னும் கருப்பத்தை பல்வகையாகப் பெரிதாக்கினன் என்பது.

சாயணபாடியக் கருத்து

வேட்போன், சுருவில் பதினாறுமுறை நெய் யெடுத்துக்கொண்டு இவ் வெட்டு மந்திரங்களின் முடிவில் சுவாஹா என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு சுருவினுள்ள நெய்யில் பாதியை ஓமஞ் செய்துவிடல் வேண்டு மென்பதாம்.

முதற் சூக்தம் முற்றும்.

---

இரண்டாவது சூக்தத்தில் முதலாவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

**चक्षुष : पिता मनसाहि धीरो घृतमेने अजनन्नम्नमाने। यदेदन्ता अदहं हन्तपूर्वे आदिद्यावापृथिवीअप्रथेताम् ।**

உரை.

எல்லாப் பிராணிகளையும் உண்டாக்குகின்றவைகளும், உறுதி யுடையவைகளும், தமது விருப்பால் நெய்போல் உயிர்களுக்குப் போக சாதனங்களுமான மண்ணையும் விண்ணையும், ஒன்றற்கொன்று உதவியுடையவைகளாகப் படைத்தனன். இவைகள் முதலில் உண்டானதால் கண் முதலான பிராணன்கள் வலுவடைந்தன. அதன் பிறகே, மண்ணும் விண்ணும் விரிவாயின என்பது.

---

இரண்டாவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

**विश्वतश्चक्षुरुतविश्वतो मुखो विश्वतो हस्तउतविश्वतस्पात् । संबाहुभ्यां नमतिसं पतत्रैर्द्यावा पृथिवी जनयन्देव एकः ।**

உரை

மண் விண் என்பவைகளை உண்டாக்குவதற்குமுன், பரமேசுரன், எங்குங் கண்களை யுடையவனும், எங்கும் முகங்களை யுடையவனும், எங்கும்

கைகளை யுடையவனுமாக விளங்கினன். அத்தகைய பரமேசுரன் ஒருவனே, மண் விண்ணையுடைய இரண்டு கைகள் போன்ற தர்ம அதர்மங்களால் உலகனைத்தையும் சுவாதீனம் பண்ணிக் கொள்ளுகின்றனன். அங்ஙனமே, முதற் காரணங்களும் அநித்தியங்களுமான பஞ்ச பூதங்களாலும் சுவாதீனம் பண்ணிக் கொள்ளுகின்றனன் என்பது.

---

### மூன்றாவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

**किं॑ स्विदासीदधिष्ठानमारम्भणंकतमत्स्वित्किमासीत् । यदीभूमिं
जनयन्विश्वकर्मा विद्यामौर्णोन्महिना विश्वचक्षाः ।**

#### உரை.

மண்ணையும் விண்ணையும் உண்டாக்கும்போது, பரமேசுரன் எதை ஆதாரமாகக் கொண்டு செய்தனன்? எதையுமில்லை. உண்டாக்குவதற்கு எதுதான் முதற் காரணமாக இருந்தது? எதுவுமில்லை. மற்றோ, நிமித்த காரணமும் எதுவுமில்லை. எல்லாவற்றையு முணர்கின்றவனும், உலகத் தொழிலைச் செய்கின்றவனுமாகிய பரமேசுரன் மண்ணையும் விண்ணையும் படைக்கும்போது அவனுடைய மகிமையே (அருட்சத்தியே) சாதனமாம்; பிறிதொன்றுமில்லை. இதனால் நினைக்க முடியாத சத்தியை யுடையவன் பரமேசுரன் என்பது கொள்ளக் கிடக்கின்றது.

---

### நான்காவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

**किं॑ स्विद्वनङ्कउसवृक्ष आसीद्यतोद्यावापृथिवीनिष्टतक्षु :। मनीषिणो मन
सापृच्छतेदुतद्यदध्यतिष्ठद् भुवनानि धारयन् ।**

#### உரை.

உலகமென்னும் மண் விண்ணாகிய வீட்டைக் கட்டுதற் பொருட்டு மரம் வெட்டுவதற்கு வனம் எது? வாச்சியால் வெட்டும் மரந்தான் யாது? அறிவாளர்காள்? இவ் வனைத்தும் இவ்வாறு வினாவுந் தன்மை யுடையனவேயாம். ஆதலின் இதை நன்கு உய்த்து நோக்குவீர்களாக. மற்றும், பரமேசுரன் மண்ணையும் விண்ணையும் எதன்மேல் வைத்துக் கொண்டு செய்தனன் என்பது எல்லா வகையானும் எழும்வினாவாம். இதனால் ஒன்றையும் வேண்டாமலே தானே எல்லாவற்றையும் பரமேசுரன் செய்தருளுகின்றனன் என்பது பெற்றாம். இதன் விரிவைப் பிராமணத்திற் காண்க.

ஐந்தாவது இருக்கு மந்திரம்.

மந்திரம்:

**यातेधामानि परमाणि याऽवमा यामध्यमा विश्वकर्मन्नुतेमा। शिक्षासखिभ्यो हविषि स्वधावस्स्वयं यजस्वतनुवंजुषाणः।**

உரை.

விசுவகருமனே! (பிரமனே!) உன்னுடைய சிறந்த இடங்களையும், தாழ்ந்த இடங்களையும், நண்பன் போன்று மிகப்பிரியமான அவிகளைக் கொடுத்தலே நிமித்தமாகக் கொண்டவைகளால் எமக்கு உபதேசிப்பாயாக. மற்றும், 'சுவதா' என்னுஞ் சொல்லால் உபலக்கணமாயுணரப்பெற்ற விசுவகருமனே! நீ, எசமானனுடைய உடம்பிலிருந்து கொண்டு அநுபவிப்போனைத் தானாகவே வேட்பாயாக. உனது அருளின்றி வேட்போர் ஒருவரும் இலர் என்பது.

ஆறாவது இருக்கு மந்திரம்

மந்திரம் :

**वाचस्पतिं विश्वकर्माणमूतये मनोयुजंवाजे अद्याहुवेम। सनोनेदिष्ठाहव नानिजोषतेविश्वशं भूरवसेसाधु कर्मा।**

உரை

மந்திரமாகிய வாக்கைப் பரிபாலிக்கின்ற விசுவகருமனாகிய பரமேசுரனை, அன்னமாகிய நிமித்தம் பற்றி அதை அருந்துதற் பொருட்டு இங்கு அழைக்கின்றோம். எல்லா வுலகங்களிலும் சுகத்தைப் பாலிக்கின்றவனும், எமக் கநுகூலமாகிய செயலையுடையவனுமாகிய அப் பரமேசுரன், எமக்கருகிலுள்ள அவிகளை, எம்மைப் பாதுகாத்தற் பொருட்டு அருந்துகின்றான் என்பது.

ஏழாவது இருக்கு மந்திரம்

மந்திரம் :

**विश्वकर्मन्हविषावावृधा न स्स्वयंयजस्व तनुवंजुषाणः। मुह्यन्त्वन्ये अभितस्सपत्ना इहाऽस्माकं मघवासूरिरस्तु।**

உரை.

விசுவகருமனே! எமது அவிகளால் வளர்ந்த உடம்பையுடைய நீ, தானாகவே வேட்பாயாக. எனக்கு வேறான பகைவர்கள் இக்கருமத்தில் மயக்கமுடையவர்களாகுக. எங்கட்கு, உணவுப் பொருளுடனும், வித்தையுடனுங் கூடிய புதல்வனுண்டாகுக என்பது.

எட்டாவது இருக்கு மந்திரம்

மந்திரம் :

**विश्वकर्म न्हविषावर्धनेनत्रातारमिन्द्रमकृणोरवध्यम् । तस्मैविशस्समनमन्त पूर्वीरयमुग्रोविहव्योयथाऽसत् ।**

உரை

*விசுவருமனே ! எமது அவியால் நீ வளர்ச்சி யடைந்தனை. மற்றும், பிறரைப் பாதுகாக்கும் இவ் வெசமானனை எவராலுங் கொல்ல முடியாதவனுகச் செய்வாயாக. விருத்தியடைந்த பிரசைகள் அவ்வெசமானனுக்கு உள்ளடங்கி யிருப்பவர்களாகுக. இவ்வெசமானனை, பேராற்றலுடையோனுயும், எவராலும் அடக்க முடியாதவனுயுமிருந்து பலவகை வேள்வி செய்தற்கு உரியனுகச் செய்வாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரங்களுடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு ஓதி, முன் மீந்துள்ள பாதி நெய்யையும் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.*

*வேள்வித்தலைவன், இவ்விரண்டு ஹோமங்கட்கும் 'விசுவகருமணே இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.*

இரண்டாவது சூக்தம் முற்றும்

---

மூன்ருவது விநியோகம்

நீரிற் பயமுடையவன் செய்யும் நீர் ஓமம்

மந்திரம் :

**समुद्रायवयुनाय सिन्धूनांपतये नमः । नदीनाꣳ सर्वासांपित्रेजुहुता विश्वकर्मणेविश्वाहामर्त्यꣳहविः ।**

உரை

*விசுவகருமனுடைய வடிவானதும், அழகுடையதும், ஓடுநதிகளை நிறையச் செய்வதும், இது விசுவகருமாவினுல் எல்லாம் நதிகளும் உண்டாக்கப் படுதலால் என்க, அத்தகைய விசுவகருமாவின் பொருட்டு, வேள்விச் செயலாளர்காள் ! நீவிர், எப்போதும் கேடுறுத அவிகளை ஓமஞ் செய்வீர்களாக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்துடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, நீரினுற் பயத்தை யடையில், அந் நீரில் இரண்டு கை நிறைய நீரை எடுத்துக் கொண்டு அந் நீரிலேயே அதை ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.*

இது இங்குச் சம்பந்தமின்றிக் கூறப்பட்டிருக்கிறது என்பதை யுணர்க.

இரண்டாவது அநுவாகம் முற்றிற்று.

மூன்றும் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

उत्त्रिभिः समिधोदद्यादुदुत्वोद्यच्छतेऽनलम् ।
पञ्चेति पञ्चभिर्हृत्वा विद्वाभ्यामश्मनः स्थितिः ॥ १ ॥
इन्द्रं चतुर्भिरापुच्छात् गच्छेत्पञ्चदशेरिताः ।

மூன்று சமித்துக்களை வைத்தல், அக்கினியை எடுத்துக்கொள்ளல், ஐந்து மந்திரங்களால் அக்கினியைக் கொண்டு போதல், வெள்ளைக் கல்லை வைத்தல், நான்கு மந்திரங்களால் மகாக்கினிசயனத்தை அடைதல் என்பது.

நான்காங் காண்டம் ஆரும் பிரபாடகம்.

மூன்றும் அநுவாகம்.

நான்கு பஞ்சாதிகட்கு மேல் இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

அக்கினிப் பிரணயனத்தைக் கூறு மந்திரங்கள்.

उदेनमुत्तरान्नयाऽग्ने घृतेनाऽहुत । रायस्पोषेण सꣳसृजप्रजया च धनेनच । इन्द्रेमं प्रतरां कृधि सजातानामसद्वशी । समेनं वर्चसा सृज देवेभ्यो भागधा असत् । यस्य कुर्मो हविर्गृहे तमग्ने वर्धयात्वम् । तस्मै देवा अधिब्रवन्नयञ्च ब्रह्मणस्पतिः । उदुत्वा विश्वे देवाः ॥ १ ॥ अग्ने भरन्तु चित्तिभिः । सनोभव शिवतमस्सुप्रतीको विभावसुः । पञ्चदिशो दैवीर्यज्ञमवन्तु देवीरपामतिन्दुर्मतिं बाधमानाः । रायस्पोषे यज्ञपतिं मा भजन्तीः । रायस्पोषे अधि यज्ञो अस्थात्समिद्धे अग्नावधिमा महानः । उक्थपत्र ईड्यो गृभीतस्तप्तं घर्मं परिगृह्या यजन्त । ऊर्जा यद्यज्ञमशमन्तदेवा दैव्याय

கொண்டுபோதல்)

यत्रेजोष्ट्र । देवश्रीश्श्रीमंणाश्शतपंयाः ॥ २ ॥ परिगृह्यंदेवा यज्ञ-
मायन् । सूर्यरश्मिर्हरिकेशः पुरस्तात्सविता ज्योति रुदयाँ
अजस्रम् । तस्य पूषा प्रसवे याति देवस्संपश्यन्विश्वा भुवनानि गोपाः।
देवादेवेभ्यो अध्वर्यन्तो अस्थुर्वीत श्शमित्रे शमिता यजध्यै ।
तुरीयो यज्ञो यत्रहव्यमेति ततः पावका आशिषो नो जुषन्ताम् ।
विमानं एष दिवोमध्य आस्त आपप्रिवान्रोदसी अन्तरिक्षं । सविश्वा-
चीरभि ॥ ३ ॥ चष्ट घृताचीरन्तरा पूर्वमपरञ्चकेतुम् । उक्षासमुद्रो
अरुणस्सुपर्णः पूर्वस्य योनिं पितुरा विवेश । मध्ये दिवो निहितः
पृश्निरश्मा विचक्रमे रजसः पात्यन्तौ । इन्द्रं विश्वा अवीवृधन्त्समुद्र
व्यचसंगिरः। रथीतं रथीनां वाजानां सत्पतिं पतिं । सुम्नहूर्यज्ञो
देवाँ आचवक्षद्यक्षदग्निर्देवो देवाँ आचवक्षत् । वाजस्य माप्रसवे-
नोद्ग्राभेणोदग्रभीत् । अथा सपत्नाँ इन्द्रो मे निग्राभेणाऽधराँ
अकः । उद्ग्राभञ्च निग्राभंच ब्रह्मदेवा अवीवृधन् । अथासपत्ना-
निन्द्राग्नीमे विषूचीनान्व्यस्यताम् ॥ ४ ॥

இரண்டாவது அநுவாகத்தில் விசுவகருமாவின் ஹோம கருமங்கள் கூறப்பட்டன. இதில் அக்கினியைக் கொண்டுபோதல் கூறப்படுகின்றது.

---

சமித்துக்களை வைப்பதில்

முதலாவது மந்திரம்

மந்திரம் :

इदेनमुत्तरान्नयाऽग्ने घृतेनाऽहुत । रायस्पोषेण सँ सृजप्रजयाच धनेनच ।

உரை.

நெய்யால் ஓமஞ் செய்யப்பெற்ற அக்கினியே! நீ, வேள்வித்தலைவனை, சிறந்த ஐசுவரிய முடையவனுகச் செய்வாயாக. அதாவது, அவனுக்கு தனம், பிரசை, பிள்ளை, பேரன்மார்கள் பசு முதலான ஐசுவரியங்களைக் கொடுப்பாயாகஎன்பது.

### இரண்டாவது மந்திரம்.

மந்திரம்:

**इन्द्रेमं प्रतरां कृधि सजातानामसद्वशी । समेनं वर्चसा सृज देवेभ्यो भागधा असत् ।**

### உரை.

சிறந்த ஐசுவரியத்தையுடைய அக்கினியே! நீ, வேள்வித்தலைவனை மிக வுயர்ந்தவனாகச் செய்வாயாக அதாவது, கூடப்பிறந்தார்களான சுற்றத்தார்களை தன் வசப்படுக்கும் வன்மையையும், அழகுடைமையையும், தேவர்கட்கு வேள்வியில் அவிர்ப்பாகங் கொடுக்குந் தன்மையையும் அளிப்பாயாக என்பது.

---

### மூன்றுவது மந்திரம்

மந்திரம்:

**यस्य कुर्मो हविर्गृहे तमग्ने वर्धया त्वम् । तस्मै देवा अधिब्रवन्नयं च ब्रह्मणस्पतिः ।**

### உரை.

அக்கினியே! நீ, எவ் வேள்வித்தலைவன் வீட்டில் வேள்விச் செயலாளர்களான நாங்கள் அவி செய்கின்றோமோ, அவ் வேள்வித்தலைவனை வளர்ப்பாயாக. இவ் வேள்வித்தலைவன் எல்லாரினும் மிகச் சிறந்தவன் என்று தேவர்களிடத்திற் சொல்வாயாக. இவ் வேள்வித்தலைவன் வைதிக கருமத்தைப் பரிபாலிப்போனாகுக என்பது

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் மூன்றாலும், முதல் நாள் இரவில் நெய்யில் ஊறவைத்திருந்த அத்திமரச் சமித்துகள் மூன்றையும், வேட்போன், சாலாமுகீயத் தீயிற் போட்டு விடல் வேண்டும் இதற்குத் தியாகம் இல்லை என்பதாம்.

ஈண்டுச் சூத்திரங்களைத் தழுவி முன்னர், பசுபந்தத்தில் அக்கினிப் பிரணயனஞ்செய்தது (அக்கினியைக்கொண்டு போனது) போல், கிரியைகளைச் செய்யத் தொடங்கிக் கொண்டு ஆகவனீயத்திற் சமித்துக்களை வைத்து நன்றாய் எரியவிட்டு ‘अग्नये प्रणीयमानायानुब्रूहि’ என்று, ஹோதாவை (இருக்கோதுவோனை) ஏவல் வேண்டும். ஹோதா, முன்போலவே. அக்கினிப் பிரணயனத்திற்குரிய மந்திரங்களை ஓதல் வேண்டும். பிறகு, வேட்போன் ஒரு மண் தட்டில் மணலைப் போட்டு வைத்துக்கொள்ளல் வேண்டும்.

கொண்டு போதல்)

## இரண்டாம் விநியோகம்.

அக்கினியை எடுத்தல்

மந்திரம் :

**उदुत्वाविश्वेदेवा अग्नेभरन्तु चित्तिभिः। सनोभव शिवतमस्सुप्रतीको विभावसुः।**

உரை.

*அக்கினியே! உன்னை, எல்லாத் தேவர்களும், மேலெழும் இந்திரிய விருத்திகளான பிராணன்களால், மேலே தாங்கிக் கொள்வார்களாக. அத்தகைய நீ, எமக்கு, மிகச் சாந்த முடையதும், மலர்ந்த முக முடையதும், வாழ்விப்பது மாவாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், வேட்போன், மற்றொரு மண் அகலில், எரிந்து கொண்டிருக்குந் தீயில் சிறிது எடுத்து வைத்துக் கொண்டு, அம் மண் தட்டை மணலுள்ள மற்றொரு மண் தட்டின்மேல் வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.*

*பிறகு, சூத்திரப்படி, 'யத்தேபாவக' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால் சாலாமுகீயத்தீயில் 'உத்யதம்' என்னும் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும்.*

*வேள்வித் தலைவன், 'அபாதானபூதாய அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.*

---

## மூன்றும் விநியோகம்

அக்கினியை எடுத்துக் கொண்டு போகவேண்டிய ஐந்து மந்திரங்களுள்

முதல் மந்திரம்

மந்திரம் :

**पञ्चदिशो देवीर्यज्ञमवन्तु देवीरपामतिन्दुर्मतिं बाधमानाः। रायस्पोषे यज्ञपतिमा भजन्तीः।**

உரை.

*கிழக்கு முதலான ஐந்து திக்குக்களும் இந்திரிய முதலான தேவ சம்பந்த முடையவைகளாகவும், தாமும் தேவதைகளாகவும், எமது கெட்டபுத்தியைப் போக்குகின்றவைகளாகவும், தனஞ் சேர்ப்பதில் வேள்வித் தலைவனை எவ்வாற்றானும் பாதுகாக்கின்றவைகளுமாயிருந்து இவ் வேள்வியைப் பாதுகாப்பனவாகுக என்பது.*

இரண்டாம் மந்திரம்

மந்திரம் :

**रायस्पोषे अधियज्ञो अस्थात्समिद्धे अग्नावधि मामहानः। उक्थपत्र ईड्यो गृभीतस्तप्तं घर्मंपरि गृह्याऽयजन्त ।**

உரை.

நன்கு வளர்க்கப் பெற்ற தீயில் மீண்டும் மீண்டும் பூசிக்கப் பெற்றதும், '*சஸ்திரம்*' என்னும் ஒருவகைத் துதி விசேடத்தையே வாகனமாகக் கொண்டதும், துதிக்கப் பெற்றதும், வேள்விச் செயலாளர்களாலும், வேள்வித் தலைவனாலுங் கவர்ந்து கொண்டதுமாகிய இந்த யக்ஞம், நிறைந்த ஐசுவரியத்திலிருந்து கொண்டு தனத்தைப் புஷ்டிப்படுத்துகின்றது என்பது. கவர்ந்து கொள்ளல் = சூடாக்கப்பட்ட கர்மம் என்னும் அவியை ஏற்று எப்போதும் வேட்கின்ற தன்மையாம்.

---

மூன்றும் மந்திரம்.

மந்திரம் :

**ऊर्जाय यज्ञ मशमन्तदेवा दैव्यायधर्त्रे जोष्ट्रे। देवश्रीश्श्रीमणाश्शतपयाः परिगृह्यदेवा यज्ञमायन्।**

உரை

தேவர்கட்கு இனிமை செய்வதும், வேள்வி வாயிலாக உலகத்தைத் தாங்குவதும், எம்மாற் கொடுக்கப் பெற்ற அவியை யுண்பதுமாகிய அக்கினியின் பொருட்டு, வேள்விச் செயலாளர்களும் வேட்போனும், எப்போது அவிகளென்னும் உணவுப் பொருள்களால் களிப்புண்டாதற்குக் காரணத்தைச் செய்கின்றார்களோ, அக்காலத்தில், அவியால் தேவர்களையே பற்றி நிற்பதும், வேள்வித் தலைவனுக்கு அருள்புரிய வேண்டு மென்னுந் திருவுள்ள முடையதுமாயிருக்கின்றது அவ் வக்கினி. அத்தகைய அக்கினியை ஏற்றுக் கொண்டு, வேள்விச் செயலாளர்களும் வேட்போனும் இந்த யக்ஞத்தை அநுட்டிக்கின்றார்கள் என்பது.

---

நான்காவது மந்திரம்

மந்திரம் :

**सूर्यरश्मिर्हरिकेशः पुरस्तात्सविता ज्योतिरुदयाँ अजस्रं। तस्यपूषाप्रसवं यातिदेवस्संपश्यन्विश्वा भुवनानि गोपाः।**

உரை

பொன் போன்ற கேசங்களென்னுஞ் சுவாலைகளையுடைய அக்கினி, இரவியின் கிரண வடிவங்களாகி, உயிர்களை, அவரவர்களின் செயல்களிற் செலுத்து

கொண்டு போதல்)

கின்ற சூரிய மண்டலமாயிருந்து கிழக்கில் நாடோறும் எழுகின்றது. அவ்வாறு எழுவதால், பாதுகாக்கின்ற போஷகதேவன் எல்லா வுலகங்களையும் பார்த்து ஏவுகின்றான் என்பதாம்.

---

ஐந்தாவது மந்திரம்

மந்திரம்:

**देवादेवेभ्यो अध्वर्यन्तो अस्थुर्वीतꣳ शमित्रेशमितायजध्यै । तुरीयोयज्ञोयत्र हव्यमेतिततः पावका आशिषोनो जुषन्तां ।**

உரை

வேள்விச் செயலாளர்களும் வேட்போனும், அவிகளை ஏற்றுக் கொள்ளுந் தேவர்கட்கு யாகஞ் செய்துகொண்டு இருக்கின்றார்கள். அதாவது உபாகரணம் வரை (கடாவைக் கல்லாலங்கிளையால் தொடுதல் வரை) பசு கருமங்களைச் செய்கின்றார்கள். அதற்குமேல், சாமித்திரத்தில், பசுவைக் கொன்று சமைக்குஞ் சாலையில் அவி செய்கின்றார்கள். அதற்குமேல், யாகத்தின் பொருட்டு சமஸ்காரஞ் செய்கின்றார்கள். அதற்குமேல் அவிர்ப்பாகங் கொடுக்கின்றார்கள். தேவதை, அவிகளை ஏற்றுக்கொள்கின்றது. இவ்வாறு நால்வகையான பாகுபாடுகளையுடைய யாகத்தில், ஆகவனீயம் முதலான அக்கினிகள் யாம் விரும்பிய பயன்களைத் தேடுவனவாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இந்த ஐந்து மந்திரங்களாலும், அக்கினியை எடுத்துக்கொண்டு வேட்போன் ஆக்னீத்ர மண்டபத்தை அடைதல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, மேலேவரும் நான்காவது அநுவாகமாகிய 'आशुश्शिशानः' என்பது முதலான பத்து மந்திரங்களையும் ஓதிக்கொண்டு பிரமன், வேட்போனுடன் கூடவே வேட்போனுக்குத் தெற்குப் பக்கமாகப் போதல் வேண்டும்.

இம் மந்திரங்களை, மைத்திரா வருணன், அல்லது, பிரதிப்பிரஸ்தாதா ஓதிக்கொண்டும் முன்போல் போகலாம்.

---

நான்காம் விநியோகம்

ஒரு வெள்ளைக் கல்லை எடுத்தலில்

முதல் மந்திரம்

மந்திரம் :

**विमान एषदिवोमध्य आस्त आपप्रिवात्रोदसी अन्तरिक्षं । सविश्वाचीरभिचष्टेघृताची रन्तरापूर्वमपरञ्च केतुम् ।**

உரை.

மண்ணையும் சுவர்க்கத்தையும் அந்தரிக்கத்தையும் பூரணமாக்கும் இந்த வெள்ளைக்கல், உலகை பல்வேறு வகைகளாய்ப் படைப்பதாகி, ஆக்னீத்ரன் என்பவனுடைய இடத்திலுள்ள வெளிக்கு நடுவில் இருக்கின்றது. இவ்வாறு பரமேசுரவடிவாகத் துதிக்கப் பெற்ற கல், திக்குக்களை நன்கு விளக்குகின்றது. நெய் தரும் பாற் பசுக்களையும் விளக்குகின்றது. பிரமாண்டத்தில், இது முன் பின் என்பதற்குக் குறியாகிய இரவியையும் விளக்குகின்றது என்பது.

---

இரண்டாவது மந்திரம்

மந்திரம் :

उक्षासमुद्रो अरुणस्सुपर्णः पूर्वस्ययोनिंपितुराविवेश । मध्येदिवोनिहितः
पृश्निरश्माविचक्रमेरजसः पात्यन्तौ ।

உரை

இந்த வெள்ளைக் கல், வேள்வி வாயிலாகப் பயன்களை நிறையக் கொடுக்குந் தன்மையால் மேகமாகவும், பெரும் பயனைத் தருவதால் கடலாகவும், எல்லாப் பிரகாசமாக உபசரிக்கப்படுதலின் இரவியாகவும், சுவர்க்கத்தைக் குறித்து மேலெழும்புவதால் பறவையாகவும் இருக்கின்றது. அத்தகைய இக்கல், கிழக்கிலிருக்கின்ற ஆகவனீயத்திற்குக் காரணமாகிய ஆக்னீத்ரனையடைந்தது. இந்த வெள்ளைக் கல், வானிற்கு நடுவில் வைக்கப்பட்டு விரும்பும் உலகின் தோற்றத்தையும் ஒடுக்கத்தையும், பரமேசுரனாக இருந்து பரிபாலிக்கின்றது என்பது.

இம் மந்திரங்களிரண்டாலும், ஒரு வெள்ளைக் கல்லை யெடுத்து ஆக்னீத்ர மண்டபத்தின் நடுவில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

இக் கல், பிறகு உபதானஞ் செய்யப்படுவதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

அக்கினியை எடுத்துக்கொண்டு கருட சயனத்தின் வால்வரை செல்ல வேண்டியதற்குரிய நான்கு மந்திரங்களுள்

முதல் மந்திம்

மந்திரம் :

इन्द्रंविश्वा अवीवृधन्त्समुद्रंव्यचसंगिरः । रथीतमꣳ रथीनां वाजानाꣳ
सत्पतिं पतिं ।

உரை

கடல் போல் விரிந்திருக்கின்றவனும், தேர்களையுடைய அரசன் மந்திரி முதலானோர்களுக்குள் அதிசயமாகிய தேரையுடையவனும், உணவுப் பொருள்

களைப் பாதுகாக்கின்றவனும், நன்னெறியிலுள்ள வேள்வித் தலைவர்களைப் பரிபாலிக்கின்றவனும், மிகுந்த ஐசுவரிய முடையவனுமாகிய அக்கினிதேவனை, எல்லாத் துதிவாக்குக்களும் வளர்க்கின்றன என்பது.

இரண்டாம் மந்திரம்.

மந்திரம் :

सुसंहूर्यज्ञोदेवाꣳ आचवक्षद्यक्षदग्निर्देवो देवाꣳ आचवक्षत् ।

உரை

மிகுந்த ஐசுவரியத்துடன் கூடிய அக்கினி, உணவுப் பொருள்களை யுண்டாக்கு நிமித்தமாகிய மேலே கவரும் வன்மையால் வேள்வித் தலைவனாகிய என்னை மேலோனாக்கிற்று. பிறகு, பெரும் ஐசுவரியத்துடன் கூடிய இவ்வக்கினி, கீழே கவரும் வன்மையால் எனது பகைவரைக் கீழாக்கிவிடுக என்பது.

மூன்றாம் மந்திரம்

மந்திரம் :

वाजस्य मा प्रसवेनोद्ग्राभेणोदग्रभीत् । अथासपत्नाꣳइन्द्रोमे निग्राभे
णाऽधराꣳ अकः ।

உரை

மிகுந்த ஐசுவரியத்தையுடைய இவ்வக்கினி, உணவுப் பொருள்களை யுண்டாக்கும் நிமித்தமாகிய மேம்பட்ட வன்மையால் எசமானனாகிய என்னை மேம்பாடு அடையும்படி செய்வித்தது. பிறகு, மிகுந்த ஐசுவரியத்தோடு கூடிய இவ்வக்கினி, தாழ்த்தும் வன்மையால் எனது பகைவர்களைத் தாழ்த்துவதாகுக என்பது.

நான்காவது மந்திரம்

மந்திரம் :

उद्ग्राभंचनिग्राभंच ब्रह्मदेवा अवीवृधन् । अथासपत्नानिन्द्राग्नीमे विषूची
नान्व्यस्यताम् ।

உரை

தேவர்கள் எல்லாரும், பிரமன் தலைமையைக் கொண்ட எனது மேம்பாட்டையும், பகைவரின் தாழ்மையையும் வளர்த்து விட்டார்கள். பிறகு, இந்திராக்கினிகள் எங்கும் ஓட்டமெடுக்கின்ற எனது பகைவர்களை நாசஞ் செய்வார்களாக என்பது.

இந் நான்கு மந்திரங்களாலும், வேட்போன், அவ் வக்கினியை எடுத்துக் கொண்டு கருட சயனத்தின் வால் வரை போதல் வேண்டு மென்பதாம்.

மூன்றாம் அநுவாகம் முடிந்தது.

நான்காம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

आशुरित्यप्रतिरथं होताऽन्वाह दशर्चकम् ।
उद्धर्षेतिविकल्पार्था मन्त्राः पञ्चदशेरिताः ॥ १ ॥

பத்து மந்திரங்களை ஹோதா ஓதுதல், விகல்ப மந்திரங்கள் என் து.

நான்காங் காண்டம் ஆறுவது பிரபாடகம்

நான்காம் அநுவாகம்.

நான்கு பஞ்சாதிகட்குமேல் நாற்பது பதங்களைக் கொண்டது.

அப்பிரதிரதம் என்னுஞ் சூக்த மந்திரங்கள்

आशुश्शिशानो वृषभो नयुध्मो घनाघनः क्षोभणश्चर्षणीनाम् । संक्रन्दनोऽनिमिष एकवीरश्शतꣳ सेना अजयत्साकमिन्द्रः । संक्रन्दनेना निमिषेण जिष्णुना युत्कारेण दुश्च्यवनेन धृष्णुना । तदिन्द्रेण जयत तत्सहध्वंयुधो नर इषु हस्तेन वृष्णा । स इषु हस्तैस्सनिषङ्गिभिर्वशी सꣳस्रष्टासयुध इन्द्रो गणेन । सꣳ सृष्टजित्सोमपा बाहुशर्ध्यूर्ध्वधन्वा प्रतिहिताभिरस्ता । बृहस्पते परिदीय ॥ १ ॥ रथेन रक्षोहाऽमित्राꣳ अपबाधमानः । प्रभञ्जन्त्सेनाः प्रमृणो युधाजयन्नस्माकमेध्यविता रथानाम् । गोत्रभिदङ्गो विदं वज्रबाहुञ्जयन्तमज्मप्रमृणन्तमोजसा । इमꣳ संजाता अनुवीरयध्वमिन्द्रꣳ सखायोऽनुसꣳरभध्वम् । बलविज्ञायस्स्थविरः प्रवीरस्सहस्वान् वाजी सहमान उग्रः । अभिवीरो अभिसत्वा सहोजा जैत्रमिन्द्र रथमातिष्ठगोवित् । अभिगोत्राणि सहसा गाहमानोऽदायः ॥ २ ॥ वीरश्शतमन्युरिन्द्रः । दुश्च्यवनः पृतनाषाडयुध्योऽस्माकꣳ सेना अवतु प्रयुत्सु । इन्द्र

आसान्नेता बृहस्पतिर्दक्षिणायज्ञः पुर एतुसोमः । देवसेनानामभिभञ्जनीनाञ्जयन्तीनां मरुतोयन्त्वग्रं । इन्द्रस्य वृष्णो वरुणस्य राज्ञ आदित्यानां मरुता॰ शर्धउग्रम् । महामनसां भुवनच्यवानां घोषो देवानाञ्जयतामुदस्थात् । अस्माकमिन्द्रस्समृतेषु ध्वजेष्वस्माकं या इषवस्ता जयन्तु ॥ ३ ॥ अस्माकं वीरा उत्तरे भवन्त्वस्मानुदेवा अवताहवेषु । उद्धर्षय मघवन्नायुधान्युत्सत्वनां मामकानां महा॰सि । उद्वृत्रहन्वाजिनां वाजिनान्युद्रथानां जयतामेतु घोषः । उपप्रेतु जयता नरस्स्थिरावस्सन्तु बाहवः । इन्द्रोवश्शर्मयच्छत्वनाधृष्या यथाऽसथ । अवसृष्टापरापत शरव्ये ब्रह्मस॰शिता । गच्छाऽमित्रान्प्र ॥ ४ ॥ विशमैषां कश्चनोच्छिषः । मर्माणिते वर्मभिश्छादयामि सोमस्त्वा राजाऽमृतेनाऽभिवस्ताम् । उरोर्वरीयो वरिवस्ते अस्तु जयन्तन्त्वा मनुमदन्तु देवाः । यत्र बाणास्संपतन्ति कुमारा विशिखा इव । इन्द्रोनस्तत्र वृत्रहा विश्वाहा शर्म यच्छतु ॥ ५ ॥

*மூன்றுவது அநுவாகத்தில் அக்கினியை எடுத்துக் கொண்டு செல்லுதல் கூறப்பட்டது. இதில், எடுத்துக்கொண்டு செல்லும்போது பின்தொடர்ந்து செல்கின்ற, பிரமன், மைத்திராவருணன், பிரதிப்பிரஸ்தா என்பவர்களுள் யாராகினும் ஒருவன் ஓதவேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

---

முதலாவது மந்திரம்

**மந்திரம் :**

आशुश्शिशानो वृषभो नयुध्मो घनाघन : क्षोभणश्चर्षणीनाम् । संक्रन्दनोऽनिमिष एकवीरश्शत॰ सेना अजयत्साकमिन्द्रः ।

**உரை.**

*விரைவிற் காரியங்களைச் செய்கின்றவனும், இடபம் மற்றொரு இடபத்துடன் போரிடக் களிப்புறுவது போல் பகைவர்களை அதிசயமாகக் கொல்கின்றவனும், பிறர் சேனையிலுள்ள மனிதர்களைப் பயமுறுத்துகின்றவனும்,*

பிறர் கேட்டுப்பயமுறும்படியான ஒலியை யுடையவனும், ஒரு கணப்போதுகூட ஏமாந்திராதவனும், பிறருடைய உதவியின்றி வெல்லும் ஆற்றலுடையவனுமாகிய இந்திரன், நூற்றுக் கணக்கான பிற சேனைகளுடன் போரிட்டு வென்றவன் என்பது,

## இரண்டாவது மந்திரம்.

மந்திரம் :

**सङ्क्रन्दनेनाऽनिमिषेण जिष्णुना युत्कारेण दुश्च्यवनेन धृष्णुना। तदिन्द्रेण जयत तत्सहध्वं युधो नर इषु हस्तेन वृष्णा।**

### உரை.

போரிடுவதற்குவிரும்பும்மனிதர்களே! நீவிர், ஒருகணப்போதுகூடஏமாந்து போகாதவனும், அதாவது எப்போதும் கண் விழித்துக் கொண்டிருக்கின்றவனும், வெற்றியையே மேற்கொண்டோனும், போரிடுகின்றவனும், பிறரால் தாழ்த்தப்படாதவனும், பயமற்றவனும், அம்பைக் கையிலேந்திக் கொண்டிருக்கின்றவனும், வேண்டியவற்றை வழங்குகின்றவனுமாகிய இந்திரனுடைய அநுக்கிரகத்தைப் பெற்றவர்களாய் பிறருடைய வன்மையை வெற்றி கொள்வீர்களாக. அதாவது பிறரை நாசஞ் செய்வீர்களாக என்பது.

## மூன்றாவது மந்திரம்

மந்திரம் :

**स इषु हस्तैस्सनिषङ्गिभिर्वशी सꣳस्रष्टासयुध इन्द्रो गणेन। सꣳसृष्टजित्सोमपा बाहुशर्ध्यूर्ध्वधन्वा प्रतिहिताभिरस्ता।**

### உரை.

கையில் அம்புகளையுடைய காலாட்களுடன் கூடிய இந்திரன், பிறருடைய வன்மையை வசப்படுத்திக் கொள்கின்றான். கையில் வாளையுடையவர்களுடன் கூடிய இந்திரன் பிறரை வசப்படுத்திக் கொள்கின்றான். அல்லது, பிறருடைய சைன்யத்திலுள்ள அம்புகள் கத்திகளுடன் கூட அவர்களையும் வசப்படுத்திக் கொள்கின்றான் எனினும் அமையும் பிறருடைய காலாட்களுடன் கலந்து கொள்கின்றான். கலந்துகொண்டு எல்லாரையும் வெல்கின்றான். வேள்வித்தலைவர்களையுடைய யாகத்தில் சோமரச மருந்துகின்றான் ஆகலின் இடைவிடாது தநுவை மேலே யெடுத்துக்கொண்டு நின்று அதிலிருந்து விடுவிக்கப்பட்ட அம்புகளால் பகைவரை நாசப்படுத்துகின்றான் என்பது.

தொண்டுபோதல்)

நான்காவது மந்திரம்.

மந்திரம் :

बृहस्पते परिदीयारथेन रक्षोहाऽमित्रा॰ं अपबाधमानः । प्रभञ्जन्सेनाः प्रमृणो युधाजयन्नस्माकमेध्यविताऽरथानाम् ।

உரை

பெரும் பேச்சாளியாகிய இந்திர! நீ, தேரில் எங்குஞ் செல்வாயாக, மற்றும், நீ எத்தன்மையனெனின்? இராக்கதர்களைக் கொல்கின்றவன். பகைவர்களைக் கொல்கின்றவன். பிறருடைய சேனைகளை அழிப்பவன். போர்களிலெல்லாம் வெற்றி கொள்கின்றவன். அத்தகையனாகிய நீ எமது தேரைப் பாதுகாக்கின்றவனாவாயாக என்பது.

---

ஐந்தாவது மந்திரம்.

மந்திரம் :

गोत्रभिदङ्गोविदं वज्रबाहुञ्जयन्तमज्म प्रमृणन्तमोजसा । इम॰ं सजाता अनु वीरयध्वमिन्द्र॰ं सखायोऽनुस॰ंरभध्वम् ।

உரை

ஒத்த பிறப்புடைய எமது சுற்றத்தார்களே! நீங்கள், முதலில் வீரனாகிய இந்திரனைப் பின்பற்றிக்கொண்டு வீரமுடையோராகுவீர்களாக. உதவிச் செயலாளர்களே! நீங்களும், மலையின் சிறகை அறுத்தவனும், பூமியை யடைந்தவனும், வச்சிராயுதத்தைக் கையில் ஏந்தியவனும், பகைவர்கட்குப் பூமி யில்லாதொழியும்படி வெற்றிகோள்கின்றவனும், வன்மையால் நன்கு பகைவரைக் கொல்கின்றவனுமாகிய இந்திரனை முன்னே வைத்துக்கொண்டு போரைத் தொடங்குவீர்களாக என்பது.

---

ஆறாவது மந்திரம்

மந்திரம் :

बलविज्ञायस्स्थविरः प्रवीरस्सहस्वान् वाजीसहमान उग्रः । अभिवीरो अभिसत्वा सहोजा जैत्रमिन्द्र रथमातिष्ठगोवित् ।

உரை.

பிறருடைய வலியை யுணர்கின்றவனும், பழையோனும், மிகச்சூரனும், வன்மையுடையவனும், உணவுகளையுடையவனும் பிறரையடக்குகின்றவனும், போர்களில் உக்கிரமுடையவனும், காலாட்கள் தன்னைச் சூழவிருக்கின்றவனும்,

நாற்புறமும் ஏவலாளர்களை யுடையவனும், மிகுந்த வலிமை யுடையவனும், பூமியைப் பெறுகின்றவனுமாகிய இந்திரனே! நீ, வெற்றிச்சீலமுடைய தேரில் ஏறுவாயாக என்பது.

ஏழாவது மந்திரம்

மந்திரம் :

अभिगोत्राणि सहसा गाहमानोऽदायो वीरश्शतमन्युरिन्द्रः । दुश्च्यवनः पृतनाषाडयुध्योऽस्माकꣳसेना अवतु प्रयुत्सु ।

உரை.

நாற்புறத்துமுள்ள போர்ப்பூமிகளை மிக விரைவில் தாண்டிச் செல்கின்றவனும், நூற்றுக்கணக்கான கோபங்களையுடையவனும், வீழ்த்தப்படாதவனும், பிறருடைய சேனைகளை அடக்குகின்றவனும், பிறரால் போர் தொடுக்கப்பெறு தவனுமாகிய இவ்விந்திரன் எமது சேனைகளைப் பாதுகாப்பானாக என்பது.

எட்டாவது மந்திரம்

மந்திரம் :

इन्द्र आसान्नेता बृहस्पतिर्दक्षिणायज्ञः पुरएतुसोमः । देवसेनानामभिभञ्ज तीनाञ्जयन्तीनां मरुतोयन्त्वग्रे ।

உரை.

எமது அநுக்கிரகத்தின் பொருட்டு பகைவர்மேற் செல்கின்ற சைன்யங்களை இந்திரன் நடாத்துவானாக. பிருகற்பதி, தக்ஷிணாதேவி, யக்ஞம், சோமம் என்னும் இவைகளுள் ஒவ்வொன்று முன்செல்க. மற்றும், பிறருடைய வன்மையை யுணர்கின்றவைகளும், வெற்றியுடையவைகளும், இவைகளின் சம்பந்தமுடையவைகளுமான சைன்யங்களுக்கு முன்னே மருத்துக்கள் செல்வார்களாக என்பது.

ஒன்பதாவது மந்திரம்.

மந்திரம் :

इन्द्रस्य वृष्णो वरुणस्य राज्ञ आदित्यानां मरुताꣳशर्धउग्रम् । महामनसां भुवनच्यवानां घोषो देवानाञ्जयतामुदस्थात् ।

உரை.

வேண்டியவற்றை வழங்கும் இந்திரனுடைய இராச்சியத்தை ஆளும் வருணனுடைய ஆற்றல், போரில் மிக உக்கிரமாகுக. போர்களில் உறுதியான

மனமுடையவர்களும், பகைவரை புவனங்களிலிருந்து தள்ளிவிடும் வன்மை யுடையவர்களும், வெற்றியுடையவர்களுமான தேவர்களின் பேரொலி எழுந்து விட்டது என்பது.

---

### பத்தாவது மந்திரம்.

மந்திரம் :

**अस्माकमिन्द्रस्समृतेषुध्वजेष्वस्माकं या इषवस्ता जयन्तु । अस्माकं वीरा उत्तरे भवन्त्वस्मानुदेवा अवताहवेषु ।**

#### உரை.

பிறருடைய சைன்யங்கள் போரிடுவதற்கு வந்தபோது எம்மை இந்திரன் பாதுகாப்பானாக அப்போது, எம்மால் விடப்பட்ட அம்புகள் பிறருடைய சைன்யங்களை நாசப்படுத்துக. வீரர்களும், சூரர்களுமான எமது காலாட்கள், பிறருடைய காலாட்களினும் மேம்பட்டவைகளாகுக. தேவர்கள், போரில் எம்மையே பாதுகாப்பார்களாக என்பது.

#### சாயணபாடியக் கருத்து

வேட்போன், அக்கினியை எடுத்துக் கொண்டு ஆக்னீத்ர மண்டபத்திற் குப் போகும்போது, பிரமன், மைத்திராவருணன், பிரதிப் பிரஸ்தாதா என்னும் மூவருள் ஒருவர் இப் பத்து மந்திரங்களையும் ஓதிக்கொண்டு வேட்போனுக்குத் தென்புறமாகப் பின்தொடர்ந்து செல்லல் வேண்டும். இவ் விநியோகம் முன் விநியோகிக்கப்பட்டது.

---

### முன் விநியோகத்திற்கே விகற்பமான மந்திரங்கள் ஐந்தனுள் முதலாவது மந்திரம்

மந்திரம் :

**उद्धर्षयमघवन्नायुधान्युत्सत्वनां मामकानां महाꣳसि । उद्वृत्रहन्वाजिनां वाजिनान्युद्रथानां जयतामेतु घोषः ।**

#### உரை

இந்திர! எமது ஆயுதங்களை, பிறருடைய ஆயுதங்களிலிருந்து மேம்பாடு டையவைகளாகச் செய்து எமக்குக் களிப்புண்டாக்குவாயாக. எமது பிரசை களின் அறிவுகளை வளர்த்து அவைகள் களிப்படையுமாறு செய்வாயாக. விருத் திரனைக் கொன்றோய்! எமது குதிரைகள் வேகமாய் ஓடும்படி செய்து களிப் புண்டாக்குவாயாக. வெற்றியுடைய எமது தேர், பேரொலி செய்து கொண்டு போமாறு செய்வாயாக என்பது.

இரண்டாவது இருக்கு மந்திரம்.

மந்திரம் :

उपप्रेत जयता नरस्स्थिरावस्सन्तु बाहवः । इन्द्रोवश्शर्मयच्छत्वनाधृष्या यथाऽसथ ।

உரை.

எமது மனிதர்களே! நீங்கள், பிறருடைய சைன்யத்திற்கருகில் நன்கு செல்வீர்களாக; அதினின்றும் வெற்றி யடைவீர்களாக. உங்களுடைய கைகள் தமது ஆயுதங்களால் வெட்டுவதில் உறுதி யுடையவைகளாகுக. நீங்கள் எவராலுந் தாழ்த்தப்படாமலிருக்கும்படி இந்திரன் உங்கட்கு இனியவைகளைச் செய்வானாக என்பது.

மூன்றாவது மந்திரம்.

மந்திரம் :

अवसृष्टापरापत शरव्ये ब्रह्मसꣳशिता । गच्छाऽमित्रान्प्रविशमैषां कञ्चनोच्छिषः ।

உரை.

கொல்லும் பாணமே! பிரமனாற் கூரியதாக்கப்பட்ட நீ, எம்மால் விடப்பட்டு, பிறருடைய சைன்யத்தில் விழுவாயாக; விழுந்து, சத்துருவை யடைவாயாக; சத்துருவை யடைந்து உடம்பின் நடுவில் நுழைவாயாக. நுழைந்து ஒருவரையும் விடாதே. அதாவது எல்லாரையும் வெல்வாயாக என்பதாம்.

நான்காவது மந்திரம்.

மந்திரம் :

मर्माणिते वर्मभिश्छादयामि सोमस्त्वा राजाऽमृतेनाऽभिवस्ताम् ।
उरोर्वरीयो वरिवस्ते अस्तु जयन्तन्त्वा मनुमदन्तु देवाः ।

உரை.

வேள்வித் தலைவ! உனது மர்மஸ்தானங்களை, கவசத்தால் மறைக்கின்றேன். சோமராசன், உன்னை, இறப்பைப் போக்கும் யாதானுமொரு கவசத்தால் முழுதும் மறைத்து விடுவானாக. உன்னுடைய தனம் பிறரை நோக்க மிகதியாயிருக்குக. வெற்றியடையும் உன்னை, தேவர்கள் களிப்படையச் செய்வார்களாக என்பது.

கொண்டுபோதல்)

ஐந்தாவது மந்திரம்

மந்திரம் :

**यत्र बाणास्संपतन्ति कुमारा विशिखा इव । इन्द्रोनस्तत्र वृत्रहा विश्वाहा शर्म यच्छतु ।**

**உரை.**

எப் போரில், பிறரால் விடப்பட்ட அம்புகள், தலையிலிருந்து கழிக்கப் பட்ட மயிர்கள் நாற்புறமும் விழுவது போல் வந்து விழுகின்றனவோ, அப் போரில், இந்திரன், பகைவரை விசேடமாய்க் கொல்லுகின்றவனாய் எமக்குச் சுகத்தைக் கொடுப்பானாக என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரங்கள் ஐந்தையும் முன் விநியோகத்தில் ஓதினும் ஓதலாம் என் பதாம். இச் சூக்தம், தேவாசுரப் போரில், பிறருடைய தேர் இல்லாது வெல் வதற்கு நிமித்தமானதால் 'அப்பிரதிரதசூக்தம்' என்னும் நான்காவது அநுவாகமாம்.

நான்காவது அநுவாகம் முற்றிற்று.

---

## ஐந்தாவது அநுவாகம்.

விடயச் சுருக்கம்

प्राचीति पञ्चभिः साग्निरारोहेन्निर्मितां चितिम् ।
पूर्णामौदुम्बरीं दध्ना जुहोत्येते ऋचौ तदा ॥ १ ॥
याज्यानुवाक्ये नक्तेति सुपर्णोऽस्यादिभिस्त्रिभिः ।
स्वयमातृण्णकायां तमुख्याग्निं स्थापयेत्ततः ॥ २ ॥
प्रेद्ध औदुम्बरीं दध्यादिद्धे वैकङ्कतीं तथा ।
शमीमयींतु तां सेति सप्ताऽऽज्यं हूयते स्रुचा ॥ ३ ॥
मारुतेषु तु यागेषु प्रोक्ताः पञ्चमरुद्गणाः ।
ईदृङ्चेत्यादयः शेषो मितासश्चेत्युदीरिताः ॥ ४ ॥
अनुवाके पञ्चमेऽस्मिन्नुक्ता एकोनविंशतिः ।

அக்கினியுடன் மகாசயனத்தின் மேல் ஏறுதல், அத்திமரச் சுருக்கால் தயிரை ஹோமஞ் செய்தல், சுக்கான் கல்லின் மேல் அக்கினியை வைத்தல், அத்திச் சமித்தை அக்கினியில் வைத்தல், சொத்தைக்களாச் சமித்தை வைத் தல், வன்னிச் சமித்தை வைத்தல், சுருவால் பூர்ணாஹுதி ஹோமஞ் செய்தல், ஐந்து மந்திரங்களால் மாருத புரோடாசங்களை ஹோமஞ் செய்தல் என்பது.

## நான்காங் காண்டம் ஆறும் பிரபாடகம்.

### ஐந்தாம் அநுவாகம்.

ஆறு பஞ்சாதிக்குமேல் பதினறு பதங்களைக் கொண்டது.

---

அக்கினிஸ்தாபன மந்திரங்கள்.

प्राचीमनुप्रदिशं प्रेहि विद्वानग्नेरग्ने पुरो अग्निर्भवेह । विश्वा
आशा दीद्यानो विभाह्यूर्जं नो धेहि द्विपदे चतुष्पदे । क्रमध्वमग्निना-
नाकमुख्यꣳ हस्तेषु बिभ्रतः । दिवः पृष्ठꣳ सुवर्गत्वा मिश्रा देवेभि-
राध्वम् । पृथिव्या अहमुदन्तरिक्षमाऽरुहमन्तरिक्षाद्दिवमाऽरुहम् ।
दिवो नाकस्य पृष्ठात्सुवर्ज्योतिरगाम् ॥ १ ॥ अहम् । सुवर्यन्तो-
नापेक्षन्त आद्याꣳ रोहन्ति रोदसी । यज्ञं ये विश्वतो धारꣳ सु
विद्वाꣳसो वितेनिरे । अग्ने प्रेहि प्रथमो देवयतां चक्षुर्देवानामुतम-
र्त्यानाम् । इयक्षमाणा भृगुभिस्सजोषास्सुवर्यन्तु यजमानास्स्वस्ति ।
नक्तोषासा समनसा विरूपे धापयेते शिशुमेकꣳ समीची । द्यावा-
क्षामा रुक्मो अन्तर्विभाति देवा अग्निं धारयन्द्रविणोदाः । अग्ने
सहस्राक्ष ॥ २ ॥ शतमूर्धञ्छतं ते प्राणास्सहस्रमपानाः । त्वꣳ
साहस्रस्य राय ईशिषे तस्मै ते विधेम वाजाय स्वाहा । सुपर्णोऽसि
गरुत्मान्पृथिव्याꣳ सीद पृष्ठे पृथिव्यास्सीद भासाऽन्तरिक्षमा पृण-
ज्योतिषा दिवमुत्तभान तेजसा दिश उद्दृꣳह । आजुह्वानस्सु
प्रतीकः पुरस्तादग्ने स्वां योनिमासीद साध्या । अस्मिन्त्सधस्थे
अध्युत्तरस्मिन्विश्वे देवाः ॥ ३ ॥ यजमानश्च सीदत । प्रेद्धो अग्ने
दीदिहि पुरो नोऽजस्रया सूर्म्या यविष्ठ । त्वाꣳ शश्वन्त उपयन्ति

வைத்தல்)

वाजाः । विधेमते परमे जन्मन्नग्ने विधेमस्तोमैरवरे सधस्थे ।
यस्माद्योनेरुदारिथा यजेतं प्रत्वेहवीꣳषि जुहुरे समिद्धे । ताꣳ
सवितुर्वरेण्यस्य चित्रामाऽहं वृणे सुमतिं विश्वजन्याम् । यामस्य
कण्वो अदुहत्प्रपीनाꣳ सहस्रधाराम् ॥ ४ ॥ पयसा महीङ्गाम् ।
सप्तते अग्ने समिधस्सप्तजिह्वास्सप्तर्षयस्सप्तधामप्रियाणि । सप्त-
होत्रास्सप्तधात्वा यजन्ति सप्तयोनीरापृणस्वाघृतेन । ईदृङ्चान्या-
दृङ्चैतादृङ्च प्रतिदृङ्चमितश्च संमितश्च सभराः । शुक्रज्योतिश्च
चित्रज्योतिश्च सत्यज्योतिश्च ज्योतिष्माꣳश्च सत्यश्चर्तपाश्चा-
त्यꣳहाः ॥ ५ ॥ ऋतजिच्च सत्यजिच्च सेनजिच्च सुषेणश्चान्त्य-
मित्रश्च दूरे अमित्रश्च गणः । ऋतश्च सत्यश्च ध्रुवश्च धरुणश्च धर्ताच
विधर्ताच विधारयः । ईदृक्षास एतादृक्षास ऊषुणस्सदृक्षासः प्रति-
सदृक्षास एतन । मितासश्च संमितासश्चन ऊतयेस भरसो मरुतो
यज्ञे अस्मिन्निन्द्रन्दैवीर्विशो मरुतोऽनुवर्त्मानो यथेन्द्रन्दैवीर्विशो
मरुतोऽनुवर्त्मान एवमिमं यजमानन्दैवांश्च विशो मानुषीश्चानु-
वर्त्मानो भवन्तु ॥ ६ ॥

*நான்காம் அநுவாகத்தில், அக்கினிப் பிரணயனத்திற்கு அங்கமாகிய அப்பிரதிரத சூக்தம் கூறப்பட்டது. இதில், மகாக்கினி சயனத்தின் மீது அக்கினியை வைத்தல் கூறப்படுகின்றது.*

---

சயனத்தின் மேல் ஏறுதற்குரிய ஐந்து மந்திரங்களுள்

முதலாவது மந்திரம்

மந்திரம் :

प्राचीमनुप्रदिशं प्रेहि विद्वानग्नेरग्ने पुरो अग्निर्भवेह । विश्वा आशा दीद्यानो
विभाह्यूर्जन्नो धेहिद्विपदे चतुष्पदे ।

உரை

இப்போது எடுத்துக்கொண்டு வந்திருக்கின்ற அக்கினியே! வித்வானாகிய நீ, சிறந்த கிழக்குக் திக்கை யுணர்ந்து சிறப்புண்டாமாறு செல்வாயாக. மற்றும் நீ, செங்கல் அடுக்குக்களாலாய சயன வடிவ அக்கினிக்குக் கிழக்குத் திசையில் இருக்கின்றவனுவாயாக. அல்லது, முன் செல்லும் அக்கினியாகுவாய். எல்லாத் திக்குக்களையும் விளக்கிக்கொண்டு நீயும் விளங்குவாயாக. பிறகு எமக்கு, இருகால் நடைகளையும், நாற்கால் நடைகளையும், உணவுப் பொருளையுந் தேடி வைப்பாயாக என்பது.

---

இரண்டாவது மந்திரம்

மந்திரம் :

क्रमध्वमग्निनानाकमुख्यꣳ हस्तेषु बिभ्रतः । दिवः पृष्ठꣳ सुवर्गत्वामिश्रा देवेभिराध्वम् ।

உரை

வேள்விச் செயலாளர்களே! வேள்வித் தலைவ! நீவிர், சுவர்க்கத்திற்குச் சாதனமும், உகாவில் முன்னர் உண்டானதுமாகிய அக்கினியை, கையில் எடுத்துக்கொண்டு அவ்வக்கினியுடன் கூடவே மகாக்கினி சயனத்தின் மீது கால் எடுத்து வைப்பீர்களாக. பிறகு, வானுக்கு மேலே இருக்கின்ற சுவர்க்க லோகத்தை யடைந்து தேவர்களுடன் ஒன்றுபட்டிருப்பீர்களாக என்பது.

---

மூன்றாவது மந்திரம்

மந்திரம் :

पृथिव्या अहमुदन्तरिक्षमाऽरुहमन्तरिक्षाद्दिवमाऽरुहम् । दिवो नाकस्य पृष्ठात्सुवर्ज्योतिरगामहम् ।

உரை.

வேள்வித் தலைவனாகிய யான், மண்ணிலிருந்து எழுந்து அந்தரிட்சத்தில் ஏறிக்கொண்டிருக்கின்றேன். அவ் வந்தரிட்சத்திலிருந்து எழுந்து வானுலகில் ஏறிக்கொண்டிருக்கின்றேன். அங்கிருந்து, வானுலகைச் சேர்ந்ததும் துன்பமற்றதாகிய யாதொரு இடமுண்டோ, அதற்கு மேலே யிருக்கின்ற ஆதித்ய மண்டலத்தை யடைகின்றேன், அல்லது, அடைவேன் என்பது.

---

வைத்தல்)

நான்காவது மந்திரம்

மந்திரம் :

सुवर्यन्तोनाऽपेक्षन्त आद्याꣳरोहन्ति रोदसी । यज्ञं ये विश्वतो धारꣳ सुविद्वाꣳसो वितेनिरे ।

உரை

கர்மாநுட்டான முறையை உள்ளவாறு உணர்ந்தவர்களும், உலகைத் தாங்கும் அக்கினியை விரிவாய் அநுட்டிக்கின்றவர்களுமான வேள்வித் தலைவர்கள் அந்தரிட்சத்தில் ஏறுகின்றார்கள். அங்ஙனமே, மண் விண்களிலும் ஏறுகின்றார்கள். பிறகு, சுவர்க்கத்திலுள்ள ஆதித்திய மண்டிலத்தை யடைகின்றார்கள், அதன் பிறகு ஒன்றையும் விரும்பிலர் என்பது.

ஐந்தாவது மந்திரம்

மந்திரம் :

अग्ने प्रेहि प्रथमो देवयताञ्चक्षुर्देवाना मुतमर्त्यानाम् । इयक्षमाणा भृगुभिः स्सजोषास्सुवर्यन्तु यजमानास्स्वस्ति ।

உரை

அக்கினியே! நீ, தேவர்கட்கும், மக்கட்கும் கண்போன்றிருக்கின்றாய்; ஆதலின், வேள்வித் தலைவனுடைய உதவியின் பொருட்டு முன்னர்ச் செல்வாயாக. வேட்க விரும்பின வேள்வித் தலைவர்கள், கர்மாநுட்டானத்தையே மேற்கொண்ட பிருகு முனிவர் போன்று பிரியமுடையவர்களாகி நற்கருமச் செயலுடையவர்களாவார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் ஐந்தையும் ஓதிக்கொண்டு வேட்போன் கொண்டுவந்த அக்கினியோடு கூடவே மகாக்கினி சயனத்தின் மீது ஏறல் வேண்டும். சூத்திரப்படி, ஏறியவுடன் அவ் வக்கினியைப் பிரதிப் பிரஸ்தாதாவினிடத்திற் கொடுத்து விடல் வேண்டும் என்பதையு முணர்க.

இரண்டாம் விநியோகம்.

தயிர் ஹோமம்

முதல் மந்திரம்

மந்திரம் :

नक्तोषासा समनसा विरूपे धापयेते शिशुमेकꣳ समीची । द्यावाक्षामा रुक्मो अन्तर्विभाति देवा अग्निन्धारयन्द्रविणोदाः ।

உரை.

ஒன்றற்கொன்று உதவி யுடையவைகளும், மாறுபட்ட வடிவங்களை யுடையவைகளும், ஒத்த மதியை யுடையவைகளுமான இரவு பகல்கள், அக்கினி யென்னும் ஒரு குழந்தையை, வேள்வித்தலைவன் தாங்குமாறு செய்கின்றன. அக்கினி, மண் விண் என்னும் இரண்டிற்கும் நடுவில் (அந்தரிக்கத்தில்) நன்கு விளங்குகின்றது. பிராணன்கள், வேள்வி வாயிலாக தனத்தைக் கொடுக்கின்றன. அத்தகைய வேள்வித்தலைவனுடைய பிராணன்கள் இவ்வக்கினியைத் தாங்குகின்றன என்பது.

இரண்டாவது மந்திரம்.

மந்திரம் :

अग्ने सहस्राक्षशतमूर्धञ्छतन्ते प्राणास्सहस्रमपानाः । त्व९ँ साहस्रस्य राय ईशिषे तस्मै ते विधेमवाजाय स्वाहा ।

உரை.

அக்கினியே! நீ, ஆயிரக்கணக்கான கண்களையுடையவன், உனக்கு நூற்றுக்கணக்கான தலைகள். உனக்கு, பிராணன்களும், அபானன்களும் ஆயிரக்கணக்கானவைகள். நீ ஆயிரக்கணக்கான தனங்கட்குத் தலைவன். உணவு சித்தியாதற்பொருட்டு அவியால் அத்தகைய உன்னை வழிபடுகின்றோம். இந்த அவி, உனக்கு அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ் விரண்டு மந்திரங்களாலும், வேட்போன், ஒரு அத்திமரத்தாற் செய்த சுருக்கில் தயிரை நிறைய எடுத்துக்கொண்டு, இயற்கைச் சுக்கான் கல்லின்மீது ஹோமஞ் செய்தல் வேண்டும்.

இவ் விரண்டு மந்திரங்களையும் இடையில் நிறுத்தாமல் ஓதல் வேண்டுமென்பதையு முணர்க.

வேள்வித் தலைவன் 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அங்ஙனமே, மீண்டும், இந்த இரண்டு மந்திரங்களுள் முதலாவது மந்திரத்தால் வெள்ளைக் கன்றுள்ள கறுப்புப் பசுவின்பாலால் முன்போலவே வேட்போன் மற்றொரு ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

அதன் பிறகு, இருக்கோதுவோன், முன்னரே தொடங்கி ஓதிக்கொண்டு வரும் இருக்கு மந்திரத்தில், 'ஊர்ஜுவந்தம்' என்பதை ஓதும்போது, வேட்போன் 'விபீவாயுரஸி' என்பது முதலிய மூன்று மந்திரங்களாலும், பரிதிக்

வைத்கல்)
(விறகுக)ளைப் போடுதல் முதல், அக்னே: பஸ்மாஸ்யக்னே: புரீஷ மஸி, என்னும் மந்திரத்தால் சம்பாரங்க (தீப் பற்றுவதற்குரிய குச்சு முதலானவைக)ளை வைக்கும் வரை, பசு யாகத்திற் செய்தது போலவே செய்து கொள்ளல் வேண்டும்.

வேட்போன், முன், பிரதிப்பிரஸ்தாதாவினிடத்திற் கொடுத்திருந்த அக்கினியை வாங்கிக் கொள்ளல் வேண்டும்.

---

மூன்றும் விநியோகம்
அக்கினியைவைத்தலில்
முதல் மந்திரம்

மந்திரம் :

**सुपर्णोऽसि गरुत्मान्पृथिव्याᳯसीद पृष्ठे पृथिव्यास्सीद ।**

உரை

அக்கினியே! நீ, கருடப்பறவை வடிவாக இருக்கின்றாய். ஆதலின், செங்கலடுக்காகிய பூமியின்மீது உட்காருவாயாக. அதிலும் பூமியில் அமர்வாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

மந்திரம் :

**भासाऽन्तरिक्षमापृणज्योतिषा दिव मुत्तभान तेजसा दिश उद्दृᳯह ।**

உரை.

அக்கினியே! நீ தனது ஒளியால் அந்தரிட்சத்தை நிறையச் செய்வாயாக, தனது வலியால் வானுலகை மேலே நிறுவுவாயாக. அவ்வாறே தனது ஒளியால் கிழக்கு முதலான திசைகளை நன்கு உறுதிப்படுத்துவாயாக என்பது.

---

மூன்றும் மந்திரம்.

மந்திரம் :

**आजुह्वानस्सुप्रतीकः पुरस्तादग्ने स्वां योनिमासीदसाध्या । अस्मिन्त्सधस्थे अध्युत्तरस्मिन्विश्वे देवा यजमानश्चसीदत ।**

உரை

அக்கினியே! நீ, அழைக்கப் பெற்றோனும், மலர்ந்த முக முடையவனுமிருந்து, கிழக்கிலிருக்கின்ற நல்ல உனது இடத்தில் வந்து உட்காருவாயாக. விசுவ தேவர்களே! நீங்களும், வேள்வித்தலைவனும், முன்னே யுள்ளதும், அக்

கினியுடன் இருப்பதற்கு உரியதுமாகிய சிறந்த இடத்தில் உட்காருவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மூன்று மந்திரங்களாலும், வேட்போன் அவ் வக்கினியை இயற்கைச் சுக்கான் கல்லின்மீது வைத்தல் வேண்டு மென்பதாம்.

பிறகு, சூத்திரப்படி, 'அக்னே : புரீஷமஸி' என்று, முன் கொண்டுவந்த மணலை வடக்கிற் போட்டு விடல் வேண்டும்.

அதன் பிறகு, 'மனுஷ்வத்வா' என்பது முதலிய மந்திரத்தால் அவ் வக்கினியை விறகு வைத்து நன்றாய் எரியும்படி செய்தல் வேண்டும்.

---

நான்காம் விநியோகம்

அத்திச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

प्रेद्धो अग्ने दीदिहि पुरो नोऽजस्रया सूर्म्या यविष्ठ। त्वाꣳ शश्वन्त
उपयन्ति वाजाः।

உரை

அக்கினியே! முன்னரும் நன்றாய் வளர்க்கப்பெற்ற நீ, எதிரில் எரியும் இருப்புத்தூண் போன்ற சுவாலையால் மீண்டும் வளர்ந்தெழுவாயாக. கட்டிளமையுடைய அக்கினியே! உன்னை, எப்போதுமுள்ள உணவுகள் அடைவனவாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் ஒரு அத்திச் சமித்தை அக்கியில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

சோத்தைக் களாச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

विधेमते परमे जन्मन्नग्ने विधेमस्तोमैरवरे सधस्थे। यस्माद्योनेरुदारिथायजेतं
प्रत्वेहवीꣳषि जुहुरे समिद्धे।

உரை

அக்கினியே! உன்னுடைய மேம்பட்ட பிறப்பில் ஞானத்தால் வழிபடுகின்றோம். எம்மோடுகூட இருக்கத்தக்க தாழ்ந்த பிறப்பில், அதாவது பூமியிலுள்ள பிறப்பில் துதிகளால் வழிபடுகின்றோம். நீ வெளித் தோன்றிய செங்க

வைத்தல்)

லடுக்காகிய காரணத்தை (யோனியை)ப் பூசிச்கின்றேன். நன்றாப் வளர்க்கப் பெற்ற உன்பால், வேள்விச் செயலாளர்கள் அவிகளை நன்கு ஓமஞ் செய்கின்றார்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் சொத்தைக்களாச் சமித்தை அத் தீயில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம்.

வன்னிச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

**ताꣳसवितुर्वरेण्यस्य चित्रामाऽहं वृणेसुमतिं विश्वजन्याम्। यामस्य कण्वो अदुहत्प्रपीनाꣳ सहस्रधारां पयसा महीङ्गाम्।**

உரை.

முன்பொரு காலத்தில், கண்ணுவமகரிஷி, எவ் வக்கினியினுடைய அநுக்கிரக புத்தியை, ஆயிரக்கணக்கான தாரைகளையுடைய காமதேனுவை உலகர் கறப்பதுபோல் கறந்தன (பெற்றன) ரோ, எல்லாராலும் போற்றத்தக்க அத்தகைய அக்கினியின் அநுக்கிரக புத்தியை யான் வேண்டுகின்றேன். அப் புத்தி, எத்தகையதெனின்? தான் விரும்பிய பல்வகைப் பயன்களையுங் கொடுக்கத் தக்கதும், உலகை யுண்டாக்கும் ஆற்றலை யுடையதுமாம் என்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வன்னிச் சமித்தை, அத் தீயில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

பிறகு, சூத்திரங்களைத் தழுவி, 'சித்திம் ஜுஹோமி' என்பது முதலிய மந்திரத்தால் நெய்யால் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன் 'விச்வகர்மண இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், வேட்போன், 'அக்னேதமத்ய' என்பது முதலிய மந்திரத்தால் மற்றொரு நெய்யோமமுஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன் 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன் பன்னிருமுறை நெய் யெடுத்துச் சுருவிற் போட்டுக் கொள்ளல் வேண்டும்.

ஏழாவது விநியோகம்
பூரணுகுதியைச் செய்தல்

மந்திரம் :

**सप्तते अग्ने समिधस्सप्तजिह्वास्सप्तर्षयस्सप्तधामप्रियाणि । सप्तहोत्रास्सप्त धात्वा यजन्ति सप्तयोनीरापृणस्वाघृतेन ।**

**உரை.**

அக்கினியே! உனக்கு, அரசு, அத்தி, புரசு, வன்னி, சொத்தைக்களா, இடி விழுந்த மரம், தாமரையிலே என்னும் எழுவகைச் சமித்துக்களாம். அங்ஙனமே, காளி, கராளி, மனோசவா, சுலோகிதா, சுதூம்ரவர்ணு, ஸ்புல்லிங்கி, விசுவருசீதேவி, லேலாயமாணு என ஏழுவகை நாவுகளாம். அங்ஙனமே இருடிகளும், மந்திரங்களும் எழுவகைகளாம். உனது இடங்களும், ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணக்கினி, சப்யம் (சபை) அவசத்யம், (மடைபள்ளி) பிராசஹிதம், ஆக்னீத்ரம் என எழுவகைப்படும். அங்ஙனமே, ஹோதா, பிரசாஸ்தா, பிராமணுச்சம்ஸி, போதா, நேஷ்டா, ஆக்னீத்ரன், அச்சாவாகன் என எழுவகை ஹோதா முதலானோர்களாவர். மற்றும், உன்னை, எழுவகையாக வேள்வியிற் பூசை செய்கின்றார்கள். அவையாவன :—அக்கினிஷ்டோமம், அத்யக்னிட்டோமம், உக்த்யம், சோடசி, அதிராத்ரம், அப்தோர்யாமம், வாசபேயம் என்பன. இத் தன்மைகள் வாய்ந்த நீ, ஆகவனீய முதலான ஏழிடங்களையும் நெய்யாற் பூரணமாக்கிக் கொள்வாயாக என்பது

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்துடன் 'சுவாஹா' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு அத்தீயில் பூரணுகுதி செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித் தலைவன் 'அக்னயே சப்தவத இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, சூத்திரங்களைத் தழுவி, வேட்போன், திக்குக்களில் இருக்கின்ற அக்கினியையும், தன்னுள்ளிருக்கும் அக்கினியையும் இவ்வக்கினியுடன் சேர்த்து ஒன்றுபடுத்தியதாகப் பாவித்தல் வேண்டும்.

மற்றும், 'அக்கினிர்யக்ஞும்' என்பது முதலிய பசு வேள்வி சம்பந்தமாகிய நான்கு சூத்திர மந்திரங்களால், 'அதிமுத்தி' என்னும் நான்கு ஹோமங்களைச் செய்துவிட்டு, சோமயாகத்திற் செய்ததுபோல், மரக்கத்தியை எடுப்பது முதல், சௌமிக தந்திரமாகிய தருப்பையைப் பரப்பல், வேதிகளைப் புரோட்சணஞ் செய்தல் வரை செய்து முடித்துவிட்டு, மேல்வரும் வைசுவாநரேஷ்டியைச் செய்தல் வேண்டும்.

## வைசுவாநரேஷ்டி.

இது பெரும்பான்மையும் தரிசபூரணமாத வேள்வியைப் போலவே செய்ய வேண்டியது. ஆனாலும் சில வேறுபாடு உண்டு அதை மாத்திரம் இங்குக் காட்டுவாம்:— தருப்பை கொண்டுவருதல் தரிச பூரணமாத வேள்வியிற் போலவேயாம். ஆனல் இதில் விரதம் இல்லை.

சமித்துக்களை வெட்டிக்கொண்டு அவற்றைப் போற்றுங்கால், 'ततस्त्वा मेको-नविꣳशतिधा' அதாவது பத்தொன்பது வகையான உன்னை, என்று யூகித்துக் கொண்டு போற்றுதல் வேண்டும். ஏனெனின்? இதில் சாமதேனிகள் 15, பரிதி-3, தக்ஷிண ஆகாரசமித்து-1, என்னும் இப்பத்தொன்பது சமித்துக் களேயாமாதலின் என்க. இதில் உத்தராகார சமித்து அநுயாஜ சமித்து என்னும் இரண்டு சமித்துக்களும் இல்லை.

மற்றும், வேதத்தையும், உபவேஷத்தையும் செய்த பிறகு, பிரிஸ்தரணஞ் (தருப்பையை விரித்தல்) செய்யும்போது பழைய காருகபத்தியத்திற்குப் பரப்பு தல் இல்லை.

பாத்திரங்களை வைக்கும்போதும், பழைய ஆகவனீயத்திற்கும் மகாக்கினி சயனத்திற்கும் வடக்கில் தருப்பைகளைப் பரப்பி விட்டு, பழைய ஆகவனீயத் திற்கு வடக்கில் அறுபத்தொரு கபாலங்களையும், இரண்டு முறங்களையும் வைத்துவிட்டு ஏனையவைகளை தரிச பூரண மாதத்தில் வைப்பது போல் வைத்தல் வேண்டும்.

பிறகு, கிழக்கில், அதாவது மகாக்கினி சயனத்திற்கு வடக்கில், சுருவ முதலானவைகளை வைத்துக்கொண்டு வருங்கால், பிராசித்ரஹரணம், இடா பாத்திரம், பிரணீதா, அந்வாஹார்யஸ்தாலி என்பவைகளை வைத்தல் கூடாது.

பிறகு, பவித்திரத்தைச் செய்து கொண்டு, புரோடாசத்தின் பொருட்டு நெல் எடுக்கும்போது, 'देवस्यत्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां अग्नये वैश्वानरायजुष्टं निर्वपामि' என்று மூன்று முறையும், 'यच्छन्तां पञ्च' என்று ஒரு முறையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

அதன்பிறகு, மற்றொரு முறத்தில், மாருததேவதைகளின் பொருட்டு, நான்கு நான்காக ஏழுமுறை நெல் எடுத்துக்கொள்ளல் வேண்டும். அதாவது இருபத்தெட்டுமுறை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

பிறகு, அவியை வைக்கும்போது 'अग्नेवैश्वानरहव्यꣳ रक्षस्व' என்று, வேதியில் வைத்தல் வேண்டும்.

இவ்வாறே எல்லாக் கருமங்களையும் மருத்துத் தேவதையின் அவிக்கும் மந்திரமின்றிச் செய்துகொண்டு வரல் வேண்டும்.

பிறகு, நெல்லின் சுணைகளுடன் இருக்கும் அக்கினி ஹோத்ர ஹவணி என்னும் ஒரு பாத்திர விசேடத்தில் நீரை எடுத்து உத்பவனஞ் (தருப்பையால் அலைத்தல்) செய்துகொண்டு அந்நீரை நெல்லாகிய அவியின்மீது தெளிக்குங் கால், 'अग्नये वैश्वानरायवोजुष्टं प्रोक्षामि' என்று தெளித்தல் வேண்டும்.

பிறகு, நெற்குத்தி அரிசியாக்கி மாவரைக்கும்போதும், 'अग्नये वैश्वानराय जुष्ट मधिवपामि' என்பது முதலிய மந்திரத்தால் அரிசியை அம்மியின்மீது வைத்து அரைத்தல் வேண்டும்.

பிறகு, கபாலங்க (மண் அகல்க)ளை வைக்கும்போதும், எட்டு மந்திரங்களால் எட்டும், மற்றும், இரண்டு, நான்கு, ஆறு, எட்டு என்னும் இரட்டைபடும் மந்திரங்கள் நான்கால் நான்கும் (12) வைசுவானர தேவதையின் பொருட்டு வைத்தல் வேண்டும்.

மற்றும், மாருத தேவதைகளின் பொருட்டு, ஏழு ஏழாக ஏழு அடுக்கு (49) கபாலங்களை வைத்தல் வேண்டும்.

மாவை வறுக்கும்போதும், देवस्यत्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्या मग्नये वैश्वानराय जुष्टं संवपामि' என்று மந்திரத்தை மும்முறை ஓதிக்கொண்டு வாணுவில் மூன்று முறையும், மந்திரமின்றி நான்காம்முறையும் எல்லாமாவையும் போட்டு உத்பவனஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, மற்றொரு வாணுச் சட்டியில், மந்திரமின்றி உத்பவனஞ் செய்துகொண்டு வறுத்தல் வேண்டும். மாவு வறுந்து போனதும், உத்பவனஞ் செய்த தண்ணீரை அதில் விட்டு, மதந்தி என்னும் வெந்நீரையும் விட்டு உண்டை செய்து கபாலங்களின் மீது வைத்து விட்டு, மாருத புரோடாசங்கள் மாறி விடாதிருக்க அடையாளம் வைத்து விடல் வேண்டும்.

இங்கு வேதிகை செய்தல் இல்லை.

பிரேஷைபிலும், 'स्रुवंच स्रुचौचसं मृड्ढि आज्येनोदेहि' என்று ஏவல்வேண்டும்.

பாத்திரங்களைச் சம்மார்ச்சனஞ் செய்யும் (துடைக்கும்) போதும், உபபிருத் என்னும் பாத்திரத்தைத் துடைத்தல் இல்லை.

பழைய காருக பத்தியத்தின் அருகில் பத்தினி சமஸ்காரமும், ஆகவனீயத்தில் ஆஜ்ய (நெய்) சமஸ்காரமுஞ் செய்தல் வேண்டும்.

சுருக்குக்களில் நெய் யெடுக்கும்போதும், துருவாவில் மாத்திரம் எடுத்தல் வேண்டும்.

வீதிஹோத்ரம் த்வா, என்று, தட்சிண ஆகாரசமித்தை (விறகை) வைத்து விட்டு, விதிருதி, என்னும் இரண்டு தருப்பைகளை, 'विशो यन्त्रेस्थः' என்று போட்டுவிட்டு அவற்றின் மீது, 'वसूनां' என்பது முதலிய மந்திரத்தால் பிரஸ்தரத்தை (தருப்பை)ப் பரப்பல் வேண்டும்.

வைசுவாநரேஷ்டி)

வேள்வித் தலைவன், 'அயம் பிரஸ்தர:' என்பது முதலிய மந்திரத்தால் அதைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், மந்திரமின்றி, சுரு, உபபிருத் என்னும் பாத்திரங்களை வைத்து விட்டு, 'ध्रुवासि' என்பது முதலிய மந்திரத்தால், துருவாவையும் வைத்தல் வேண்டும்.

'ரிஷபோஸி' என்று, சுருவத்தை வைத்தல் வேண்டும். மந்திரமின்றி ஆஜ்யஸ்தாலியை (நெய்ப் பாத்திரத்தை) யும் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'य्रोमाताचा', 'स्योनां मे', 'इयᳪस्थाली' என்பவைகளை முதலிற் கொண்ட மூன்று மந்திரங்களாலும் அதை முறையே தொட்டுப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'एतावसदतां', 'विष्णवसि वैष्णवं' என்பவற்றை முதலிற் கொண்ட இரண்டு மந்திரங்களையுஞ் செபித்து விட்டு, 'आप्यायतां घृतयोनिरग्निर्हव्यानु-मन्यतां । खमंक्ष्व त्वचमंक्ष्व सुरूपं त्वा वसुविदं पशूनां तेजसाग्नये वैश्वानराय जुष्टमभिघारयामि' என்னும் மந்திரத்தால் அபிகாரஞ் (நெய்யைத் தாரையாய் விடல்) செய்தல் வேண்டும்.

மாருத புரோடாசங்கள் ஏழையும் மந்திரமின்றி அபிகாரஞ் செய்து கொள்ள வேண்டும்.

வேள்வித்தலைவன், 'यज्ञोसि', 'अयं यज्ञः', 'ममाग्ने', 'पृथिवीहोता' என்பவற்றை முதலாவதாகக் கொண்ட மந்திரங்களால், ஆசன்னாபிமர்சனம் (வைத்ததைத் தொடுதல்) செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், அயம் வேத:, அதாவது வேதம் என்னும் தருப்பை முடிச்சை வேதியின் மீது வைத்தல் முதற்கொண்ட கிரியைகளைச் செய்தல் வேண்டும். ஆனால், இதில், 'அக்னீத் பரிதீன்', என்பது முதலிய ஏவலும், சம்மார்ச்சனமு (துடைத்தலு)ம் இல்லை. 'भुवनमसि' என்பது முதலிய மந்திரத்தால் கைகுவித்து வேதியிலிருந்து தருப்பையை எடுப்பது முதல் 'தேவா: பிதர:' என்பது வரை, தரிசபூர்ணமாத வேள்வியைப் போலவே செய்தல் வேண்டும்.

பிரயாசைகள் கிடையாது. முதல் ஆஜ்ய பாகத்தைச் செய்து விட்டு, இரண்டாவது செய்யும் ஆஜ்ய பாகத்தில் மூன்று முறை மந்திரங்களாலும் ஒரு முறை மந்திரமின்றியும் நெய்யெடுத்துக் கொண்டு ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

பிறகு, மற்றொரு முறை நெய்யெடுத்தல் இன்றி (ஆப்யாயன மில்லாமல்) சுருவில் உபஸ்தரணஞ் செய்துகொண்டு, வைசுவானர புரோடாச முழுதையும் மந்திரமின்றிச் சுருவில் வைத்துக்கொண்டு, இரண்டுமுறை அபிகாரம் (நெய்யைச் சிந்தல்) செய்துகொண்டு, (இனி துருவாவில் நெய் யிருத்தல் கூடாது) 'அக்னயே வைசுவானராயாநுப்ரூஹி' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'वैश्वानरो न ऊत्या' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், 'ஆஶ்ராவய' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். அதற்கவன் பதிற் கூறிய பிறகு 'அக்னிம் வைஶ்வாநரம் யஜ' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहेऽग्निं वैश्वानरं पृष्टो दिवि' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று கூறும்போது புரோடாசத்தை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னயே வைஶ்வாநராயேதம்', என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'अग्ने वैश्वानरस्याहं देवयज्ययान्नादो भूयासं' என்று, தன்னையும் வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

வேட்போன், தன் கையில் வைத்திருக்கின்ற ஏனைய சுருக்குக்களை பிரஸ்தர மொழிந்த வேறொரு விடத்தில் வைத்து விட்டு கீழே வருமாறு கணத்துடன் கணத்தைச் சேர்த்து மந்திரங்களை ஓதிக்கொண்டு மாருத புரோடாசங்களை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

## எட்டாவது விநியோகம்

### முதற்கண மந்திரம்.

மந்திரம் :

**ईदृङ्चान्यादृङ् चैतादृङ्च प्रतिदृङ् चमितश्च संमितश्च सभराः ।**

**உரை.**

ஈதிருக், அன்யாதிருக், ஏதாதிருக், பிரதிருக், மித:, சம்மித:, சபர: என்பவர்கள் எழுவகை மருத்துக்கள் என்பது.

வைசுவாநரேஷ்டி)

### சாயணபாடியக் கருத்து

ஈண்டு, ஐந்து மருத்கணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. முதற் கணத்தில் ஈதிருக் முதலியோர்கள் ஏழு பேர்கள். இரண்டாங் கணத்தில், சுக்ர: என்பது முதலியோர் ஏழுபேர்கள். மூன்றாவது கணத்தில் 'ருதசித்' முதலியோர் ஏழு பேர்கள். நான்காவது கணத்தில், ருத: முதலியோர் ஏழுபேர்கள். ஐந்தாங் கணத்தில், ஈதிருக்ஷாஸ முதலியோர் நான்குபேர்கள் என்பன. ஆரண்ய காண்டத்திற் கூறியுள்ள, 'துனி:' என்பவர் முதலியோர் ஒரு கணத்தர். சூத்திரத்திற் கூறிய, ஸ்வதவான் என்பது முதலியோர் ஒரு கணத்தர்.

இவ்வாற்றால் இங்கு பிரயோகித்திற்கு எடுத்துக்கொண்ட மருத்கணங்கள் ஏழாகும். புரோடாசங்களும் ஏழாதலின் ஏழுகணங்களும் எடுத்துக்கொள்ளப் பட்டன. இனி, இம் முதற்கண மந்திரத்தால் ஹோமஞ் செய்யும்போது இம் மந்திரத்திற்கு முதலாவதாகக் கொண்ட ஐந்தாங்கண மந்திரத்தின் முற் பாதியாகிய, 'ईदृक्षास:' என்பதை இம் மந்திரத்தின் தொடக்கமாகக்கொண்டு இம் மந்திரத்தை ஓதிவிட்டு, ஐந்தாங்கண மந்திரத்தின் பிற்பாதியாகிய 'मितासश्च' என்பது முதலியதுடன் 'சுவாஹா' என்பதையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, முதலாவது மாருத கணத்தின் முதலாவது புரோடாச முழுதையும் கையால் எடுத்து ஓமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

### ஒன்பதாவது விநியோகம்.
### இரண்டாவது புரோடாச ஹோமம்
### இரண்டாங்கண மந்திரம்

மந்திரம் :

**शुक्रज्योतिश्च चित्रज्योतिश्च सत्यज्योतिश्च ज्योतिष्माꣳश्च सत्यश्चर्तपाश्चात्यꣳहाः ।**

### உரை

சுக்ர ஜோதி:, சித்திரஜோதி:, சத்யஜோதி:, ஜோதிமான், சத்திய: ருதபா: அத்தியம்ஹா: என ஏழுவகையர் மருத் கணத்தர்கள் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இந்த இரண்டாங்கண மந்திரத்தால் ஹோமஞ் செய்யும்போது முதலாவது கண மந்திரத்தின் முற்பாதியாகிய, 'ईदृङ्च' என்பதை இம் மந்திரத்தின் தொடக்கமாகக் கொண்டு இம் மந்திரத்தை ஓதிவிட்டு, முன்போல் சம்மிதையின் ஐந்தாங்கண மந்திரத்தின் பிற்பாதியுடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு இரண்டாவது மாருதகணப் புரோடாசத்தை முன் போல் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

பத்தாவது விநியோகம்.

மூன்றவது புரோடாச ஹோமம்

மூன்றுங்கண மந்திரம்

மந்திரம் :

**ऋतजिच्च सत्यजिच्च सेनजिच्च सुषेणश्चान्त्यमित्रश्च दूरे अमित्रश्च गणः ।**

உரை.

ருதசித், சத்யசித், சேனசித், சுஷேண:, அந்தியமித்ர:, துரேஅமித்ர: கண: என்பவர்கள் மருத் கணத்தர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் ஓமஞ் செய்யும்போது, இரண்டாவது கணத்தின் முற்பாதியாகிய, 'शुक्रज्योतिश्च' என்பதை இம்மந்திரத்தின் தொடக்கமாகக் கொண்டு இம் மந்திரத்தை ஓதிவிட்டு, முன்போல், சம்மிதை ஐந்தாங்கண மந்திரத்தின் பிற்பாதியுடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, மூன்றுவது மாருதகண புரோடாசத்தை முன்போல் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.



பதினோராவது விநியோகம்.

நான்காவது புரோடாச ஹோமம்

ஆரண்யத்திலுள்ள நான்காங்கண மந்திரம்

மந்திரம் :

**धुनिश्च ध्वान्तश्च ध्वनश्च ध्वनयंश्च । निलिम्पश्च विलिम्पश्च विक्षिपः ।**

உரை.

துனி:, த்வாந்த:, த்வன:, த்வனய:, நிலிம்ப:, விலிம்ப:, விக்ஷிப:, என் போர்கள் மாருத கணத்தர்கள் என்பது,

சாயணபாடியக் கருத்து

சூத்திரத்தைத் தழுவி இம் மந்திரத்தால் ஹோமஞ் செய்யும்போது, சம்மிதை மூன்றுங்கண மந்திரத்தின் முற்பாதியாகிய, 'ऋतञ्चिच्च' என்பதை இம் மந்திரத்தின் தொடக்கமாகக் கொண்டு இம் மந்திரத்தை ஓதிவிட்டு, முன்போல், சம்மிதை ஐந்தாங் கணத்தின் பிற்பாதி மந்திரத்துடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு நான்காவது மாருத கண புரோடாசத்தை முன்போல் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

பன்னிரண்டாவது விநியோகம்

ஐந்தாவது புரோடாச ஹோமம்

ஐந்தாங் கண மந்திரம்

மந்திரம் :

**ऋतश्च सत्यश्च ध्रुवश्च धरुणश्च धर्ताच विधर्ताच विधारयः।**

**உரை.**

ருத:, சத்திய:, துருவ:, தருண:, தர்த்தா, விதர்த்தா, விதாரய: என்போர்கள் மாருத கணத்தர்கள் என்பது.

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்தால் ஓமஞ் செய்யும்போது, ஆரண்ய காண்ட மந்திரத்தின் முற்பாதியாகிய, 'ध्रुनिश्च' என்பது முதலியதை இம் மந்திரத்தின் தொடக்கமாய்க் கொண்டு இம் மந்திரத்தை ஓதிவிட்டு, முன்போல் சம்மிதை ஐந்தாங் கண மந்திரத்தின் பிற்பாதியுடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு ஐந்தாங்கண மாருத புரோடாசத்தை முன்போல் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

பதின்மூன்றும் விநியோகம்

ஆறவது புரோடாச ஹோமம்

இது சூத்திரத்திலுள்ள ஆறுங்கண மந்திரம்

மந்திரம் :

**स्वतवाꣳश्च प्रघासीच सांतपनश्च गृहमेधीच क्रीडाच साकीचोर्जिषीच।**

**உரை.**

சுதவான், பிரகாசி, சாந்தபனன், கிருகமேதி, கிரீடி, சாகீ, ஊர்ச்சிஷீ என்போர்கள் மாருதகணத்தர்கள் என்பது.

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்தால் ஓமஞ் செய்யும்போது, சம்மிதை ஐந்தாங்கண மந்திரத்தின் முற்பாதியாகிய, 'ऋतश्च' என்பது முதலியதை, இம் மந்திரத்தின் தொடக்கமாகக்கொண்டு, இம் மந்திரத்தை ஓதிவிட்டு, முன்போல் சம்மிதை ஐந்தாங் கண மந்திரத்தின் பிற்பாதியுடன் 'சுவாஹா' என்பதையுஞ் சேர்த்துக்கொண்டு ஓதிவிட்டு ஆறுவது மாருதகண புரோடாசத்தை முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

### பதினான்காவது விநியோகம்
### ஏழாவது புரோடாச ஹோமம்
### ஏழாங் கண மந்திரம்

மந்திரம் :

**ईदृक्षास एतादृक्षास ऊषुणस्सदृक्षासः प्रतिसदृक्षास एतन ।**

**உரை.**

*ஈதிருக்ஷாஸ, ஏதாதிருக்ஷாஸ, ஊஷுண: சதிருக்ஷாஸ, பிரதிசதிருக்ஷாஸ, என்போர்கள் மாருத கணத்தர்கள் என்பது.*

**சாயணபாஷ்யக் கருத்து**

*இம் மந்திரத்தால் ஓமஞ் செய்யும்போது, சூத்திர மந்திரத்தின் முற்பாதியாகிய, 'சுவதவான்' என்பது முதலியதை இம் மந்திரத்தின் தொடக்கமாகக்கொண்டு இம் மந்திரத்தை ஓதி முடித்துவிட்டு, சம்மிதை ஐந்தாங் கண மந்திரத்தின் பிற்பாதியுடன் சுவாஹா என்பதையுஞ் சேர்த்துக்கொண்டு ஏழாவது மாருதகண புரோடாசத்தை முன்போல் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.*



*எல்லா மந்திரங்களிலுஞ் சேர்க்கப்படுகின்ற மந்திரப்பகுதி :—*

மந்திரம் :

**मितासश्च संमितासश्च न ऊतये सभरसो मरुतो यज्ञे अस्मिन्निन्द्रन्दैवीर्विशो मरुतोऽनुवर्त्मानो यथेन्द्रन्दैवीर्विशो मरुतोऽनुवर्त्मान एवमिमं यजमानन्दैवीश्च विशो मानुषीश्चानुवर्त्मानो भवन्तु ।**

**உரை**

*கணங்களில் எழுவர்களாகக் கூறப்பெற்றவர்களும், சில கணத்தில் நான்கு பேர்களாகக் கூறப் பெற்றவர்களுமான மாருத கணங்களிலுள்ளார் அனைவரும் ஒன்றுசேர்ந்து எமது பாதுகாப்பின் பொருட்டு இவ் வேள்விக்கு வருவார்களாக. தேவர்கள் சம்பந்தமான மருத்துக்கள் இந்திரனைப் பின்பற்றி நடப்பது போல் தேவர்களின் சம்பந்தமான மனிதர்களனைவரும் வேள்வித்தலைவனைப் பின்பற்றிக்கொண்டு நடப்பார்களாக என்பது.*

மேற்கூறியவாறே ஒவ்வொரு மந்திரத்தின் முடிவில் இம் மந்திரப்பகுதியைச் சேர்த்துக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

வேள்வித் தலைவன் ஒவ்வொரு ஹோமத்திற்கும், 'மருத்ப்ய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வைசுவாநரேஷ்டி)

ஈண்டு, மேற்கூறிய வைசுவாநரேஷ்டியானது, மாருத ஹோமங்களுடன் முடிவு பெறுமென்பர் சிலர். சிலரோ, சுருக்குக்களை யெடுத்துக் கொண்டு நாரிஷ்ட ஹோமங்களைச் செய்துவிட்டு. 'वैश्वानरेहविः' என்பது முதலியதால், அந்தப் பரிதி நினயனஞ் (நடுப்பருதிக்கும் ஆகவனீயத்துக்கும் நடுவில் நீர் விடுதல்) செய்தல் வேண்டும், சுவிஷ்டகிருக், என்பது கிடையாது. மற்றும், அநுயாஜ சமித்து வைக்கல் முதலானதும், பிரேஷையும், சம்மார்ச்சனமும் இல்லை. 'यो भूतानां' என்பது முதலியதால் இத்ம சம்ஹனனப்ரஹரணஞ் செய்தல் வேண்டும். அநுயாசம் இல்லை. 'வாஜஸ்பமே' என்பது முதல், பிராஹ்மண தர்ப்பணாந்தம் தரிசபூரணமாத வேள்விபோற் செய்ததுபோல் வேண்டும். இதில், யக்ஞசம்சன்ன ஹனசமே, வ்ருஷ்டிராஸி, என்னு மிரண்டுங் கிடையாதென்பர். இது சமஸ்தாபக்ஷ மெனப்படும்.

வைசுவாநரேஷ்டி முற்றும்.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

இப் பிரபாடகத்திலுள்ள மேல்வரும் அநுவாகங்கள் நான்கும், ஏழாம் பிரபாடகத்தில், 15, 16, 17, 18-வது அநுவாகங்களாக வருவதைக் காண்க.

ஆறும் பிரபாடகமும் முடிந்தது.

---



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## நான்காங் காண்டத்தில் ஏழாம் பிரபாடகம்.

### உபோற்காதம்

இக் காண்டத்தின் நான்காம் பிரபாடகம் பதிஞோராவது அநுவாகம் வரையிற் செங்கலடுக்குகள் கூறி முடிந்தன. ஐந்தாம் பிரபாடகத்தில், அச் செங்கலடுக்குக்களாகிய சயனத்தில் ஓமங் கூறப்பட்டது. அதுவே ருத்திராத்யாயம் எனப்படும். ஆறும் பிரபாடகத்தில், அக்கினி சமஸ்காரங் கூறப்பட்டது. அதுவும், ஆறும் பிரபாடகத்தின் ஐந்தாவது அநுவாகம் வரையிலாம். எஞ்சிய சமஸ்கார விசேடங்கள், அதாவது வசோர்த்தாரை முதலியவைகள் இவ் வேழாம் பிரபாடகத்தில் கூறப்படுகின்றன. இதுவே சமகப் பிரசின மெனப் படும். இதிலும் ஏழாம் பிரபாடகம் பதினன்காம் அநுவாகத்தோடு மகாக்கினி சயனம் முடிவாகின்றது; பதினைந்தாவது அநுவாகமோ, அசுவமேதத்தின் ஒருவகை யாஜ்யாநு வாக்கியங்களாம். இத்துடன் இந் நான்காங் காண்டமும் முடிவாகின்றது.

ஈண்டு, ஆறும் பிரபாடகத்தின் பிற்பாதி நான்கு அநுவாகங்களில் அசுவ மேதயாக கருமங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இதில், அசுவமேத யாகத்தைக் கூறுவது எவ்வாற்றானுஞ் சம்பந்தமிலாததேயாம்.

இதுபற்றியே, சாயணரும், ஐந்தா மநுவாகத்தில், சிதியின் மீதேறுதல் முதல் மாருத ஹோமம்வரை அங்கவிசேடங்கள் கூறப்பட்டன; இனி, ஆறுவது அநுவாகத்தில் அசுவமேத யாகத்தின் இரதசச்சீகர பாவினி கவச சுவீகார முதலியன கூறப்படுகின்றன. அதற்கு, அக்கினிப் பிரகரணத்தில் சம்பந்தமின்மையின் இதை எடுத்து அசுவமேதப் பிரகரணத்தில் சம்பந்தப்படுத்திக் கொள்ளவும், என்று பாடியத்திற் கூறியுள்ளார்.

மற்றும், இங்கு, அசுவமேதத்தைக் கூறியதோ, கேவலம் ஓதும் பொருட்டேயாம் என்பதை யுணர்க.

மேலே கூறிய வகையில், ருத்திராத்தியாயத்தின் நடுவில் கூறியதால் அசுவமேதத்திற்கு ஒருவித சம்பந்தமும் இல்லையென்பது வெளிப்படையாம்.

அஃதன்றியும், தைத்திரீய சம்மிதையில் அநுட்டான முறையின்றியும் சில மந்திரங்கள் படிக்கப்பட்டிருக்கின்றன; அவைகளை, கல்பசூத்திரங்கள் ஆங்காங்கு எடுத்துச் சம்பந்தவகை பற்றி முன்பின்னாகக் கூட்டி விநியோகப் படுத்துகின்றன.

பிரயோககாரர்களும், மற்றுஞ்சில உரைகாரர்களும் உருத்திராத்தியாயத்தினாற் செய்யப்படும் மகாக்கினிசயன ஹோம முதலியவைகட்குப் பிறகு, வசோர்த்தாரையாகிய ஹோமத்தைக் கூறும் சமகப்பிரபாடகத்தையே பிரயோகஞ் செய்திருக்கின்றார்கள்; அதுவே இங்குப் பொருத்த முடையதுமாம். ஆதலின், யாம் ஈண்டு, ஆறும் பிரபாடகத்தில் அசுவமேதத்தைக் கூறும் நான்கு அநுவாகங்களையும், அவைகளோடு சம்பந்தமுடையதும், ஏழாம் பிரபாடகத்தின் முடிவுமாகிய அசுவமேத சம்பந்தி யாஜ்யா புரோநு வாக்கியத்தைக் கூறும் பதினைந்தாம் அநுவாகத்துடன் சேர்த்துள்ளோம். பாடமுறையினும் அநுட்டான முறையே வலிவுடையதா மென்பது பூருவ மீமாஞ்சையின் முக்கியக் கருத்தாம்; ஆதலின் இதுவே ஈண்டுப் பொருந்துமாறு உய்த்துணர்ந்து கொள்ளற்பாலது.

---

## நான்காங் காண்டம் ஏழாவது பிரபாடக
### விடயச் சுருக்கம்.

**परिषेचनमुख्यास्तु संस्काराः षष्ठ ईरिताः ।**
**वसोर्धारादयः शिष्टाः प्रोच्यन्तेऽस्मिंस्तु सप्तमे ॥ १ ॥**
**अग्ना विष्णू वसोर्धारा मेकादशभिरादितः ।**
**अनुवाकैर्जुहोत्येकामाहुतिं संततां घृताम् ॥ २ ॥**

சயனத்தைச் சுற்றிலும் நீர் தெளித்தல் முதலிய முக்கிய சமஸ்காரங்கள் ஆறாவது பிரபாடகத்திற் கூறப்பட்டன. இவ்வேழாம் பிரபாடகத்தில், எஞ்சிய 'வசோர்த்தாரை' என்பது கூறப்படுகின்றது. அதாவது, முதலில் நான்கு முறை நெய்யெடுத்து ஒரு ஆகுதி செய்தல், பிறகு, பதினொரு அநுவாகங்களாலும் இடையறாது செய்யும் ஒரு நெய் யோமமாம். இதுவே அவிர்த்தாரை யெனப்படும் என்பது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

இது, சமகப்பிரசின மெனப்படும்.

### முதல் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

இடைவிடாது செய்கின்ற வசோர்த்தாரை யென்னும் நெய் யோமத்தைக் கூறு மந்திரம்.

*ஈண்டு, பதினொரு அநுவாக மந்திரங்களும் ஒன்று சேர்ந்து ஒரேமந்திர மாகின்றது; ஆதலின், இதனால் ஒரு ஹோமஞ் செய்யப்படுகின்றது.*

*மந்திரம் ஒன்றேயாயினும், வேள்வியைத்தவிர்த்த ஏனைய கருமச்செயல்களைக் கொண்டு பதினொரு அநுவாகங்கள் என அநுவாகங்களின் வேறுபாடுகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. இங்குள்ள வேள்விப்பிரகரணத்தை நோக்கிலோ, இவை ஒரே மந்திரமாம்; இதிற் பாகுபாடென்பது இல்லை. இதில், ச, என்பது (உம்மை) மே என்பது (எனக்கு) என்னும் இரண்டு சொற்களும் மிகுதியாயிருத்தல் பற்றி இது சமகமென வழங்கப் பெறும்.*

*உருத்திராத்தியாயத்தால், மகாக்கினி சயனமாகிய உருத்திரனைச் சாந்தப்படுத்திக்கொண்டு, இச் சமக மந்திரத்தால், விரும்பியவைகள் வேண்டப் படுகின்றன என்பது இதின் சாரம்.*

---

முதலாவது ஹோமம்

மந்திரம் :

अग्ना॑विष्णू स॒जोष॑सेमा व॑र्धन्तु वां॒ गिरः॑ । द्यु॒म्नैर्वाजे॑भि॒राग॑तम् ।

பதவுரை.

| | |
|---|---|
| **अग्ना विष्णू** | *அக்கினி விஷ்ணுக்களே !* |
| **सजोषसा (भवतम्)** | *நீவிரிருவரும் ஒத்த அன்புடையவர்களாகுக.* |
| **वां इमा गिरः** | *உங்களைத் துதிக்கும் இவ் வாக்குக்கள்* |
| **वर्धन्तु** | *வளர்வனவாகுக.* |
| **(युवां)** | *நீங்களிருவரும்* |

| | |
|---|---|
| द्युम्नैः | தனங்களோடும், |
| वाजेभिः | உணவுப் பொருள்களோடும் |
| आगतम् | இங்கு வருவீர்களாக. |

அக்கினியையும் விஷ்ணுவையும், ஈசுரனும் சத்தியும் என்பர் சிலர். இவர்களே மேல் வேண்டப்படுகின்றவைகளைக் கொடுத்தருள்கின்றவர்கள் என்பதை யுணர்க.

**சாயணபாடியக் கருத்து.**

வேட்போன், இம்மந்திரத்துடன், 'சுவாஹா' என்னுஞ் சொல்லையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, சுருவில் நான்கு முறை நெய்யெடுத்து ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'அக்ந விஷ்ணுப்யாமிதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். இதன் விரிவை, கா-5, பிர-7, அநு-3ல் காண்க.

---

இரண்டாவது ஹோமம்

வசோர்தாரை யென்னும் ஒரு நெய்யோமத் தொடக்கம்.

மந்திரம் :

**वाजश्चमे प्रसवश्चमे प्रयतिश्चमे प्रसितिश्चमे धीतिश्चमे क्रतुश्चमे स्वरश्चमे श्लोकश्चमे श्रावश्चमे श्रुतिश्चमे ज्योतिश्चमे सुवश्चमे प्राणश्चमे ऽपानः ॥ १ ॥ चमे व्यानश्चमेऽसुश्चमे चित्तश्चम आधीतश्चमे वाक्चमे मनश्चमे चक्षुश्चमे श्रोत्रश्चमे दक्षश्चमे बलश्चम ओजश्चमे सहश्चम आयुश्चमे जराचम आत्माचमे तनूश्चमे शर्मचमे वर्मचमे ऽङ्गानिचमेऽस्थानिचमे परूꣳषिचमे शरीराणिचमे ॥ २ ॥**

பதவுரை

| | |
|---|---|
| वाजश्च मे | அன்னமும் எனக்கு உண்டாகுக. |
| प्रसवश्च मे | அன்னமிடும் மனதும் எனக்கு உண்டாகுக. |
| प्रयतिश्च मे | புசிதமும் எனக்கு உண்டாகுக. |
| प्रसितिश्च मे | அன்னத்தில் மிக விருப்பமும் எனக்குஉண்டாகுக. |

சமகம்)

| | |
|---|---|
| **धीतिश्च मे** | அன்னத்தை யேற்றுக்கொள்ளும் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| **क्रतुश्च मे** | அன்னத்திற்குக் காரணமாகிய வேள்வியும் எனக்கு உண்டாகுக. |
| **स्वरश्च मे** | ஸ்வரமும் (சந்தமும்) எனக்கு உண்டாகுக. |
| **श्लोकश्च मे** | புகழும் எனக்கு உண்டாகுக. |
| **श्रावश्च मे** | இன்சொல்லும் எனக்கு உண்டாகுக. |
| **श्रुतिश्च मे** | சொல்வதைக் கேட்கும் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| **ज्योतिश्च मे** | சொல்லின் விளக்கமும் எனக்கு உண்டாகுக. |
| **सुवश्च मे** | சுவர்க்கமும் எனக்கு உண்டாகுக. |
| **प्राणश्च मे** | பிராணனும் எனக்கு உண்டாகுக. |
| **अपानश्च मे** | அபானனும் எனக்கு உண்டாகுக. |
| **व्यानश्च मे** | வியானனும் எனக்கு உண்டாகுக. |
| **असुश्च मे** | வாயுவும் எனக்கு உண்டாகுக. |
| **चित्तञ्च मे** | சிந்தனையிற் சிறந்த சித்தமும் எனக்கு உண்டாகுக. |
| **आधीतञ्च मे** | சித்தத்தா லுணரப்பட்ட பொருளும் எனக்கு உண்டாகுக. |
| **वाक्च मे** | சொல்லாற்றலும் எனக்கு உண்டாகுக. |
| **मनश्च मे** | நல்ல மனதும் எனக்கு உண்டாகுக. |
| **चक्षुश्च मे** | கூரிய கண்களும் எனக்கு உண்டாகுக. |
| **श्रोत्रञ्च मे** | நன்கு கேட்கும் செவிகளும் எனக்கு உண்டாகுக. |
| **दक्षश्च मे** | ஞானேந்திரியங்களின் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| **बलञ्च मे** | கருமேந்திரியங்களின் வன்மையும் எனக்கு உண்டாகுக. |
| **ओजश्च मे** | வன்மைதரும் வீரியமும் எனக்கு உண்டாகுக. |
| **सहश्च मे** | பகைவரை யடக்குந் திறமையும் எனக்கு உண்டாகுக. |
| **आयुश्च मे** | நீண்ட ஆயுளும் எனக்கு உண்டாகுக. |
| **जरा च मे** | நரை வரும்வரை உள்ளவாழ்நாளும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| आत्माच मे | பரமான்மாவின் இலாபமும் எனக்கு உண்டாகுக. |
| तनूश्च मे | அழகிய உடம்பும் எனக்கு உண்டாகுக. |
| शर्मच मे | இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| वर्मच मे | உடலைப் பாதுகாக்குங் கவசமும் எனக்கு உண்டாகுக. |
| अङ्गानिच मे | நிறைந்த அவயவங்களும் எனக்கு உண்டாகுக. |
| अस्थानिच मे | அங்கங்குள்ள எலும்புகளும் எனக்கு உண்டாகுக. |
| परूꣳषिच मे | விரல்களிலுள்ள கணுக்களும் எனக்கு உண்டாகுக. |
| शरीराणिच मे | மற்றுமுள்ள அவயவ விசேடங்களும் எனக்கு உண்டாகுக என்பது. |

ஈண்டு, மேல்வரும் பத்தாமநுவாகத்திலுள்ள 'कल्पताम्' 'உண்டாகுக' என்பதை, ஒவ்வொன்றோடுஞ் சேர்த்துப் பொருள் கூறப்பட்டிருக்கின்றது. மேலும் இவ்வாறேவரும்.

அக்கினி (உருத்திர) விஷ்ணுக்களே! நீங்கள், மேலே வேண்டப் பெற்றவைகளை, இவ் வேள்வியால் எமக்கு உண்டாகும்படி அருள் செய்வீர்களாக என்பது கருத்து. இவ்வாறே மேலும் உய்த்துணர்க.

முதலாவது அநுவாகம் முடிந்தது.



நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

இரண்டாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினொன்று பதங்களைக் கொண்டது



ज्यैष्ठ्यंच्च म आधिपत्यञ्चमे मन्युश्चमे भामश्चमेऽमश्चमेऽम्भश्चमे
जेमाचमे महिमाचमे वरिमाचमे प्रथिमाचमे वर्ष्माचमे द्राघुयाचमे
वृद्धञ्चमे वृद्धिश्चमे सत्यञ्चमे श्रद्धाचमे जगच्च ॥ १ ॥ मे धनञ्चमे
वशश्चमे त्विषिश्चमे क्रीडाचमे मोदश्चमे जातञ्चमे जनिष्यमाणञ्चमे
सूक्तञ्चमे सुकृतञ्चमे वित्तञ्चमे वेद्यञ्चमे भूतञ्चमे भविष्यच्चमे

सुगञ्चमे सुपथञ्चम ऋद्धञ्चम ऋद्धिश्चमे क्लृप्तञ्चमे क्लृप्तिश्चमे मति-
श्चमे सुमतिश्चमे ॥ २ ॥

பதவுரை.

| | |
|---|---|
| ज्यैष्ठ्यञ्चमे | மிக மேம்பாடுடைய தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| आधिपत्यञ्च मे | அனைவருக்குந் தலைவனுந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| मन्युश्च मे | நேரிற் கண்டதாலெழும் மனத்தின் உள் முனிவும் எனக்கு உண்டாகுக. |
| भामश्च मे | உடம்பின் செயலுடன் வெளியிலெழுங் கோபமும் எனக்கு உண்டாகுக. |
| अमश्च मे | பகைவனால் இதுவென்று காண முடியாமையும் எனக்கு உண்டாகுக. |
| अम्भश्च मे | குளிர்ச்சி இன்சுவையுடன் கூடிய தண்ணீரும் எனக்கு உண்டாகுக. |
| जेमाच मे | வெற்றிபெறும் ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| महिमाच मे | பெருமையும், வெற்றியாற்பெற்ற தன முதலிய சம்பத்துடைமையும் எனக்கு உண்டாகுக. |
| वरिमाच मे | போற்றத்தக்க தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| प्रथिमाच मे | பரந்த மனை நிலம் முதலியவைகளை யுடையதாந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| वर्ष्माच मे | பிள்ளை பேரன்மார்களும் எனக்கு உண்டாகுக. |
| द्राघुयाच मे | கெடாத புத்திர பவுத்திர பரம்பரையும் எனக்கு உண்டாகுக. |
| वृद्धञ्च मे | மிகுந்த தனமும் அன்னமும் எனக்கு உண்டாகுக. |
| वृद्धिश्च मे | கல்வி முதலியவற்றால் மேம்பாடுடைமையும் எனக்கு உண்டாகுக. |
| सत्यञ्च मे | மெய்மை கூறுதலும் எனக்கு உண்டாகுக. |
| श्रद्धाच मे | பரலோகம் உண்டென்னும் நம்பிக்கையும் எனக்கு உண்டாகுக. |
| जगच्च मे | தாவர சங்கமங்களான உலகமும் எனக்கு உண்டாகுக. |

| | |
|---|---|
| धनञ्च मे | பொன் முதலிய தனமும் எனக்கு உண்டாகுக. |
| वशश्च मे | அனைத்தையும் அடக்கிக் கொள்ளுந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| त्विषिश्च मे | உடம்பின் அழகும் எனக்கு உண்டாகுக. |
| क्रीडाच मे | சதுரங்க ஆட்டமும் எனக்கு உண்டாகுக. |
| मोदश्च मे | அதனால் வருங் களிப்பும் எனக்கு உண்டாகுக. |
| जातञ्च मे | முன் பிறந்த சந்ததியும் எனக்கு உண்டாகுக. |
| जनिष्यमाणञ्च मे | பிறக்கப் போகுஞ் சந்ததியும் எனக்கு உண்டாகுக. |
| सूक्तञ्च मे | இருக்கு மந்திரத் தொகுதியும் எனக்கு உண்டாகுக. |
| सुकृतञ्च मे | அதனால் வரும் புண்ணியமும் எனக்கு உண்டாகுக. |
| वित्तञ्च मे | முன் தனத்தைப் பெறுதலும் எனக்கு உண்டாகுக. |
| वेद्यञ्च मे | இனிமேல் தனத்தை யடையுந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| भूतञ्च मे | முன்னர் நில முதலியவற்றை யடையுந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| भविष्यच्च मे | பிறகு நில முதலியவற்றை யடையுந் தன்மையும் எனக்கு உண்டாகுக. |
| सुगञ्च मे | இனிது செல்லத்தக்க சுற்றத்தார் கிராமமும் எனக்கு உண்டாகுக. |
| सुपथञ्च मे | கள்ளர் பயமிலாத வழியும் எனக்கு உண்டாகுக. |
| ऋद्धञ्च मे | ஆசரித்த கருமத்தின் பயனும் எனக்கு உண்டாகுக. |
| ऋद्धिश्च मे | அநுட்டிக்கப்படும் சத்திர யாகப் பயனும் எனக்கு உண்டாகுக. |
| क्लृप्तञ्च मे | வேண்டிய அளவு பொருளும் எனக்கு உண்டாகுக. |
| क्लृप्तिश्च मे | அதற்குரிய ஆற்றலும் எனக்கு உண்டாகுக. |
| मतिश्च मे | அரிய யூகமும் எனக்கு உண்டாகுக. |
| सुमतिश्च मे | அரசாங்கத்திற்குரிய நுண்ணிய அறிவும் எனக்கு உண்டாகுக. |

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## மூன்றாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் எட்டுப் பதங்களைக் கொண்டது

शञ्च॑मे मय॑श्चमे प्रि॒यञ्च॑मेऽनुका॒मश्च॑मे काम॑श्चमे सौमन॒सश्च॑मे भ॒द्रञ्च॑मे श्रेय॑श्चमे वस्य॑श्चमे यश॑श्चमे भग॑श्चमे द्रवि॑णञ्चमे य॒न्ता च॑मे ध॒र्ता च॑मे क्षेम॑श्चमे धृति॑श्चमे विश्व॑ञ्च ॥ १ ॥ मे॒ मह॑श्चमे सं॒विच्च॑मे॒ ज्ञात्र॑ञ्चमे॒ सूश्च॑मे प्र॒सूश्च॑मे सीर॑ञ्चमे ल॒यश्च॑म ऋ॒तञ्च॑मेऽमृत॒ञ्चमेऽयक्ष्म॒ञ्चमेऽनामयच्चमे जी॒वातु॑श्चमे दी॒र्घा॒यु॒त्वञ्च॑मेऽनमि॒त्रञ्च॑मेऽभ॑यञ्चमे सु॒गञ्च॑मे॒ शय॑नञ्चमे सू॒षा च॑मे सु॒दिन॑ञ्चमे ॥ २ ॥

---

### பதவுரை.

| | |
|---|---|
| शञ्च मे | இவ்வுலக இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| मयश्च मे | பரலோக இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| प्रियञ्च मे | நேரில் விரும்பத்தக்க பொருளும் எனக்கு உண்டாகுக. |
| अनुकामश्च मे | பொருளையடைந்ததால் வரும் இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| कामश्च मे | பொருளை அநுபவித்தலால் வரும் இன்பமும் எனக்கு உண்டாகுக. |
| सौमनसश्च मे | மனநலந்தருஞ் சுற்றமும் எனக்கு உண்டாகுக. |
| भद्रञ्च मे | இவ்வுலகில் நலந்தருவதும் எனக்கு உண்டாகுக. |
| श्रेयश्च मे | மேலுலகில் நலந்தருவதும் எனக்கு உண்டாகுக. |
| वस्यश्च मे | வாழ்தற்குரிய வீடு முதலியதும் எனக்கு உண்டாகுக. |
| यशश्च मे | கீர்த்தியும் எனக்கு உண்டாகுக. |
| भगश्च मे | நற்பாக்கியமும் எனக்கு உண்டாகுக. |
| द्रविणञ्च मे | தனமும் எனக்கு உண்டாகுக. |

நாஞுபீசதர்மம் வேண்டும். அதாவது, ஒன்றை எடுத்துவிட்டு உடனே கை யலம்பிக்கொண்டு மற்றொன்றை எடுத்தல். இதன் விரிவை இராசசூயத்திற் காண்க.

சுவிஷ்டகிருத் முடிந்ததும் உருத்திரசருவை (உருத்திரனுடைய பொங் கலை) தண்ணீரில் போட்டு விட்டு, இடாவை எடுப்பது முதல் இடாந்தம் அக்கினிஷோமீயம் போற் செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, வசதீவரி என்னும் நீரைக் கொண்டு வருதல் முதல் பரிஸ்தரணம் (தருப்பையைப் பரப்பும்) வரை செய்து கொள்ளல் வேண்டும். அன்றிரவில் கண்ணுறங்கல் கூடாது.

அதன் பிறகு, மூன்றாவது யாமத்தில் எழுந்து சுத்தியாகலை (சோம ரசம் பிழிய) த் தொடங்குவது முதல் சோமாசாவைக் கற்களின்மீது வைக் கும் வரை, சோமயாகம் போலவே செய்து கொள்ளல் வேண்டும்.

அநுபந்தம் முற்றும்.

---

## பதின்மூன்றாவது அநுவாக

### விடயச் சுருக்கம்.

**अग्निं त्रयं पुरा प्रातरनुवाकात्स्पृशेदिह ।**
**नमो द्वाभ्यां वह्निमर्शो येनाष्टा विष्टकाष्टकम् ।**
**पुनश्चितिरिति प्रोक्ता मन्त्रा अत्र त्रयोदश ॥ १ ॥**

அக்கினியைத் தொட்டுப் போற்றுதல், துதித்தல் மீண்டும், எட்டுச் செங் கடுக்குதல் என்பது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

## பதின்மூன்றவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் முப்பத்தேழு பதங்களைக் கொண்டது

---

அக்கினி யோகாபிதானம்

अग्निं युनज्मि शवसा घृतेन दिव्यꣳ सुपर्णं वयसा बृहन्तम् । तेन वयं पतेम ब्रध्नस्य विष्टपꣳ सुवो रुहाणा अधिनाक उत्तमे । इमौ ते पक्षावजरौ पतत्रिणौ याभ्याꣳ रक्षाꣳस्यपहꣳस्यग्ने । ताभ्यां

पतेम सुकृतां सुलोकं यत्रर्षयः प्रथमजा ये पुराणाः । चिदसि समुद्रयोनिरिन्दुर्दक्षश्श्येन ऋतावा । हिरण्यपक्षश्शकुनो भुरण्युर्महान्त्सधस्थे ध्रुवः ॥ १ ॥ आनिषत्तः । नमस्ते अस्तु मा माहिꣳसीर्विश्वस्य मूर्धन्नधितिष्ठसिश्रितः । समुद्रे ते हृदयमन्तरायुर्द्यावापृथिवी भुवनेष्वर्पिते । उद्नोदत्तो दधिभिन्तदिवः पर्जन्यादन्तरिक्षात्पृथिव्यास्ततो नो वृष्ट्याऽवत । दिवो मूर्धाऽसि पृथिव्यानाभिरूर्गपामोषधीनाम् । विश्वायुश्शर्म स प्रथा नमस्पथे । येनर्षयस्तपसा सत्रम् ॥ २ ॥ आसतेन्धाना अग्निꣳसुवराभरन्तः । तस्मिन्नहन्निदधे नाके अग्निमेतं यमाहुर्मनवस्तीर्णबर्हिषम् । तं पत्नीभि रनुगच्छेम देवाः पुत्रैर्भ्रातृभिरुतवाहिरण्यैः । नाकंगृह्णानास्सुकृतस्य लोके तृतीये पृष्ठे अधिरोचने दिवः । आवाचोमध्यमरुहद्भुरण्युरयमग्निस्सत्पतिश्चेकितानः । पृष्ठे पृथिव्यानिहितोदविद्युतदधस्पदं कृणुते ॥ ३ ॥ ये पृतन्यवः। अयमग्निर्वीरतमो वयोधास्सहस्रियो दीप्यता मप्रयुच्छन् । विभ्राजमानस्सरिरस्य मध्य उपप्रयात दिव्यानि धाम । सम्प्रच्यवध्वमनुसंप्रयाताग्ने पथो देवयानान्कृणुध्वम् । अस्मिन्त्सधस्थे अध्युत्तरस्मिन्विश्वे देवा यजमानश्च सीदत । येना सहस्रं वहसि येनाग्ने सर्ववेदसम् । तेनेमं यज्ञन्नोवह देवयानो यः ॥४॥ उत्तमः । उद्बुध्यस्वाग्ने प्रतिजागृह्येन मिष्टापूर्ते सꣳसृजेथा मयञ्च । पुनः कृण्वꣳस्त्वा पितरं युवानमन्वाताꣳसीत्त्वयि तन्तुमेतम् । अयन्ते योनिर्ऋत्वियो यतो जातो अरोचथाः । तञ्जानन्नग्न आरोहाथानो वर्धया रयिम् ॥ ५ ॥

பன்னிரண்டாவது அநுவாகத்தில் வாசப்பிரஸவீய ஹோமங் கூறப் பட்டது. இதில், அக்கினியோகங் கூறப்படுகின்றது.

---

முதலாவது விநியோகம்

அக்கினி சயனத் தீயைத் தொட்டுப் போற்றுவதில்

முதல் மந்திரம்.

**अग्निं युनज्मिशवसा घृतेन दिव्यꣳ सुपर्णं वयसा बृहन्तम्। तेन वयं पते मब्रध्नस्य विष्टपꣳ सुवो रुहाणा अधिनाक उत्तमे।**

உரை.

ஒளியுடையதும், பறவை வடிவுடையதும், நீண்டகாலமாகப் பாவிக்கப் பெற்றதுமாகிய செங்கலடுக்கென்னும் இவ்வக்கினியை, நெய் முதலிய பொருள்களோடு கூடிய கருமத்தால், தேருடன் குதிரையைப் பூட்டுவதுபோல் எக்ஞத்துடன் பொருந்துமாறு செய்கின்றேன். இவ்வக்கினியால், உயர்ந்த விண்ணுலகமாகிய இன்பந்தருமிடத்தில் ஏறுவதற்கு விருப்புற்ற எசமானர்களாகிய யாம், தாபமற்ற சூரியனுடைய இடத்தை அடைகின்றோம் என்பது.

---

இரண்டாம் மந்திரம்

**इमौ ते पक्षावजरौ पतत्रिणौयाभ्याꣳ रक्षाꣳ स्यपहꣳ स्यग्ने। ताभ्यां पतेम सुकृतामुलोकं यत्रर्षयः प्रथमजा ये पुराणाः।**

உரை.

பறவை வடிவாகிய அக்கினியே! இராக்கதர்களைக் கொல்கின்றவைகளும், அநாதி சித்தர்களும் மகரிஷிகளும் இருக்குமிடத்தி லிருக்கின்றவைகளும், அங்கு எம்மைச் சேர்க்கின்றவைகளும், படைப்பின் முதலில் உண்டாகியவைகளுமான உன்னுடைய சிறகுகள் ஒருபோதும் நாசமாகாதனவாகின்றன என்பது.

---

மூன்றாம் மந்திரம்

**चिदसि समुद्रयोनिरिन्दुर्दक्षश्श्येन ऋतावा। हिरण्यपक्षश्शकुनो भुरण्यु-र्महान्त्सधस्थे ध्रुव आनिषित्तः।**

உரை.

அக்கினியே! நீ, சித்து என்பது முதலிய குணங்களால் விசேடமுடையோனா யிருக்கின்றாய். அல்லது, வேள்வித்தலைவனை சித்தாகச் செய்கின்றவனா யிருக்கின்றாய். சித்தாகச் செய்தல் = அறிவைக் கொடுத்தல்,

நீருள்ள விடங்கட்குக் கடல் காரணமாவது போன்று, எல்லா வேள்விகட்கும் நீ காரணமா யிருக்கின்றாய். மிகுந்த ஐசுவரிய முடையவனா யிருக்கின்றாய். கருமத்தைத் தோற்றுவிப்பதில் வல்லுநனா யிருக்கின்றாய். உண்மை யுடையவனும், பொன்மயமான சிறகை யுடையவனும், கழுகு வடிவினனும், அனைத்தையுந் தாங்குகின்றவனும், ஆயிரக்கணக்கான கற்களால் அடுக்கப் பெற்றிருக்கின்றமையின் மகானும், இரவியுடன் கூட ஒரு மண்டலத்தி லிருக்கத்தக்கோனுமாக இருக்கின்றாய் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மூன்று மந்திரங்களாலும் மகாக்கினிசயனத்தைத் தொட்டுப் போற்றல் வேண்டும் என்பதாம்.

பிறகு, சூத்திரத்தைத் தழுவி, பிராதரநுவாகத்தை (காலைத் துதியை) ஓதும்படி ஹோதாவை, எவுதல் முதல், சுத்திய பசுவரை, சோமயாகத்திற் செய்வது போன்றே செய்தல் வேண்டும்.

சவனீய பசுக்களுள், அவ்வவ் வேள்விகளைத் தழுவிக் கூறிய பசுக்களையேனும், அல்லது, ஆக்னேய பசுவையேனும், அல்லது, பதினொரு யூபங்களாக இருக்கில், 'ஆக்னேய: கிருஷ்ணக்ரீவ:' என்பது முதலிய பசுக்களை யேனும், பசுக்கள் பதினொன்றா யிருக்கில் பதினொன்றையும் யூபத்திலேயே கட்டுதல் வேண்டும். இவ்வாறு சவனீய பசுக்களைச் செய்துகொண்டு ஏனைய கிரியைகளை, சோமயாகத்திற் செய்வதுபோலவே செய்து கொள்ளல் வேண்டும்.

இனி, மாத்தியந்தின சவனத்தில் தக்ஷிணை கொடுக்கும்போது, பிரதிஹர்த்தாவிற்குத் தட்சிணை கொடுத்தவுடன், ஒரு பொன் கிண்ணத்தில் தேனை விட்டு 'சித்ரம் தேவானும்' என்பது முதலிய மந்திரத்தால் அதைப் பார்த்துவிட்டு, மந்திரமின்றியே, குதிரை, அதை முகந்து பார்க்கும்படி செய்த பிறகு, வேள்வித்தலைவன், அதைப் பிரமனுக்குக் கொடுத்துவிடல் வேண்டும்.

செங்கல் அடுக்கு எவ்வளவு கொண்டதோ, அவ்வளவு பசுக்களை, வேள்வித்தலைவன், வேட்போனுக்குக் கொடுத்தல் வேண்டும். மற்றும், அழகு மிகுந்த ஒரு பாற் பசுவையும் வேட்போனுக்குக் கொடுத்தல் வேண்டும்.

சமசாத்துவரியுக்களுக்கு, தட்சிணை கொடுப்பது முதல், யக்ஞா யக்ஞீயம், என்னுந் தோத்திரத்தில் ஒரு தோத்திரம் எஞ்சியிருக்கும்வரை, சோமயாகத்தைப் போலவே செய்து கொள்ளல் வேண்டும்.

## இரண்டாவது விநியோகம்.

### மகாக்கினி சயனத்தைப் போற்றல்.

### முதல் மந்திரம்

**नमस्ते अस्तु मा मा हिंसीर्विश्वस्य मूर्धन्नधितिष्ठसिश्रितः । समुद्रे ते हृदयमन्तरायुर्द्यावा पृथिवी भुवनेष्वर्पिते ।**

### உரை.

அக்கினியே! உனக்கு வணக்கம். உன்னுடைய யாகத்தைச் செய்யும் என்னைக் கெடுக்காதே. நீ, உலகிற்குத் தலைமையாயிருந்து சிதியின் (செங்கல் அடுக்கின்) மீது மிக நன்றாய் விளங்கிக் கொண்டிருக்கின்றாய். உன்னுடைய மனம் கடல் போன்று மழை வாயிலாகத் தண்ணீரைத் தேடுவோம் என்னும் அநுக்கிரக முடையது. அங்ஙனமே, உனது திருவுள்ளத்திற்குள் எல்லாப் பிராணிகளின் ஆயுட்களும் இருக்கின்றன. அதாவது இவ்வுயிர்கள் நெடுநாள் வாழ்வார்களாக என்று நினைக்கில் அவைகட்கு நீண்ட ஆயுள் உண்டாகின்றன என்பதாம். மற்றும், எல்லாப் புவனங்கட்கு நிமித்தமான மண்ணையும் விண்ணையும் கீழும் மேலுமாக நிறுவினாய். இதனால், வானிற்கும் மண்ணிற்கும் இடையில் எல்லா உலகமும் உளவாகின்றன என்பது கருத்து.

---

### இரண்டாம் மந்திரம்.

**उद्गोदत्तो दधिमिन्तदिवः पर्जन्यादन्तरिक्षात्पृथिव्यास्ततो नो वृष्ट्याऽवत । दिवो मूर्धाऽसि पृथिव्यानाभिरूर्गपामोषधीनाम् । विश्वायुश्शर्मस प्रथानमस्पथे ।**

### உரை

அக்கினிகளே! நீவிர், நீரைக் கொடுப்பீர்களாக. எவ்வுபாயத்தாலெனின்? மேகத்தைப் பிளக்கும் வாயிலால் என்க. எதன் பொருட்டெனின்? மூவுலகங்களின் பொருட்டென்க. மற்றும், மேகத்தை உடைத்து விட்ட பிறகு வரும் மழையால் எம்மைப் பாதுகாப்பாயாக. இங்கு ஒரே அக்கினி பலவாக உபசரிக்கப்பட்டது. இனி ஒன்றாக்கி விளித்தல் அக்கினியே! நீ, விண்ணுலகிற்குத் தலையாகிய இரவியா யிருக்கின்றாய். மண்ணிற்கு நாபியா யிருக்கின்றாய். நீர், கொடிசெடிகட்கு இரசமா யிருக்கின்றாய். உன்னால் பாகஞ் செய்யப்பெற்றாலன்றோ? இரசம் நிகழ்கின்றது. உலக உயிர்கட்கு ஆயுளைக் கொடுப்பதாயிருக்கின்றாய். அடைக்கலமாகவும் இருக்கின்றாய். விரிவாயும் இருக்கின்றாய். புண்ணியவுலக வழியின் வடிவா யிருக்கின்ற உனக்கு வணக்கம் என்பது.

### சாயணபாடியக் கருத்து

வேட்போன், இம் மந்திரங்களிரண்டாலும் மகாக்கினி சயனத்தைத் தொட்டுப் போற்றல் வேண்டு மென்பதாம்.

பிறகு, 'ஆக்னி மாருத சஸ்திரம்' முதலாக, சமிஷ்ட யஜுः வரை, சோம யாகம் போலவே செய்தல் வேண்டும். ஆனால், சமிஷ்ட யசுரில், 'இஷ்டோ யக்ஞ:' என்பது முதலிய கா—5, பி—6, அ-8-வதிலுள்ள, மந்திரத்தைப் பத்தா வதாகவும், தஸ்யத இஷ்டஸ்ய, என்பது முதலிய ஷை மந்திரத்தைப் பதினோ ராவதாகவும் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

அதன்பிறகு, அபிஸ்திருணீஹி (ஹோதா உட்கார்ந்திருந்த தருப்பையை எரித்தல்) முதல், அவபிருதம் என்னும் முடிவு நீராடல் வரை சோமயாகம் போற் செய்து கொள்ளவும்.

மற்றும், பதினான்காம் அநுவாகத்தில், திஷ்ணியங்களென்னும் மேடை கட்கு அவபிருத நீராடலிற் கூறியபடி, செங்கலை வைத்து விட்டு அதன் மேல் ஹோமஞ் செய்தல் வேண்டும். தருப்பையைப் போடுதல் இங்கில்லை. மற்றவை சோமயாகத்திற் செய்தது போலவேயாம்.

மற்றும், அநூபந்தியில், அதாவது மைத்திரா வருணேஷ்டியில், தலைமயிர் கழித்தல் வரை செய்து கொள்ளல் வேண்டும். பதினொரு யூபங்களாயிருக்கில் சாலாமுகியத்தி (பழைய ஆகவனீயத்தி) ல் பாத்தினீவத பசுவைச் செய்தல் வேண்டும்.

பிறகு, அத்திமரச் சுருக்கில் நெய்யை நிறைத்துக் கொண்டு, 'இமம் ஸ்த னம்' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், மகாக்கினி சயனத்தில் 'அக் கினி விமோகம்' என்னும் ஹோமத்தைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண் டும்.

வேட்போன், 'धात्रादि' யாகம் முதல், சத்து ஹோமத்தைப் போற்றுதல் வரை, சோமயாகத்தைப்போற் செய்து கொண்டு, கா—5, பிர-7, அநு—7—ல் உள்ள, 'यदा कूतात्' என்பது முதலிய பத்து மந்திரங்களாலும், ஆகூதி கள் என்னும் பத்து ஹோமங்களையும் மகாக்கினி சயனத்தின் மீது செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், இப் பத்து ஹோமங்கட்கும், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன், சயனத்தை விட்டிறங்கி 'पुनर्मन:' என்பது முதலிய மந்திரங்கள் பத்தாலும், மகாக்கினி சயனத்தைப் போற்றுதல் வேண்டும்.

புன: சிதி:)

மற்றும், வேள்வித்தலைவன், 'अयं नो नभसा पुरः' என்பது முதலிய மந்திரத்தாற் போற்றுதல் முதல், 'விருஷ்டிரஸி' என்பது முதலிய மந்திரத்தால் கைபலம்புமவரை செய்து கொண்டு, 'येऽग्नय:, आपंत्वाग्ने' என்பவற்றை முதலிற் கொண்ட கா-5, பி-5, அ-7-வதிலுள்ள இரண்டு மந்திரங்களாலும் மகாக்கினியைப் போற்றுதல் வேண்டும்.

மற்றும், பழைய காருகபத்தியத் தீயை, அரணிக் கட்டையிலேனும், ஆன்மாவிலேனும் ஏற்றிக்கொண்டு, கா-1, பிர-5, அ-6, வதிலுள்ள 'उपत्वाग्ने' முதலிய மந்திரங்களால் பிறராற் செய்யப்பட்டுள்ள மகாக்கினிசயனத்தைக் கண்ணிற் கண்டாற் போற்றுதல் வேண்டும்.

அதன் பிறகு, 'इदमूनु:' என்பது முதலிய மந்திரத்தால், அக்னியாகாரம் (வீட்டிலுள்ள தீயை) அடைதல் முதல், உதவசானீயேஷ்டி முடியும் வரை சோமயாகம்போற் செய்து கொள்ளல் வேண்டும்.

இனி, அடுத்த நாளிலாவது, அல்லது, அடுத்த பருவத்திலாவது, மகாக்கினி சயனத்திற்கு அங்கமாக, சௌத்திராமணியையும், மைத்திராவருண ஆமிட்சையையுஞ் செய்தல் வேண்டும். இவற்றின் விரிவை வேறிடத்திற் காண்க.

இத்துடன், மகாக்கினி சயனம் முற்றிற்று.



புந: சிதியின் (மீண்டுஞ் செங்கல் அடுக்குதலின்)

உபோற்காதம்.

ஈண்டு, 'एष खलु वै देवरथोयदग्निः' சங். கா-5, பிர-4, அநு-10, என்பது முதலிய மந்திரத்தால் மகாக்கினி சயனம் சுவர்க்கலோகஞ் செல்லும் தேவாத மெனப்படுகின்றது. அத்தகைய தேரில், பதின்மூன்றும் அநுவாகத்தின் முற்பாதி மந்திரங்களிற் கூறியவாறே, அக்கினியோகம் என்னும், அக்கினியாகிய குதிரையையும் பூட்டியிருக்கின்றான். ஆதலின், மகாக்கினி சயனத்தைச் செய்து முடித்தவன், சுவர்க்கஞ் செல்லு நோக்கமுடையனாகி விட்டனன். அவனுக்கும் பூமிக்கும் சம்பந்தம் இல்லை.

இப்பொருளையே, 'प्रवा एषोऽस्माल्लोकाच्यवते' என்பது முதலிய, சங். கா-5 பிர-4, அநு-10, வது மந்திரமும், சங். கா-5, பிர-4, அநு-11, வது 'श्येनचितं चिन्वीतसुस्वर्गकाम:' என்னும் மந்திரமுங் கூறுகின்றன.

இதுபற்றியே, மகாக்கினி சயனஞ் செய்தவன், பிறரைக் கண்டு எழுதலும், ஊன் அருந்தலும், மழையில் நனைதலும், தனது மனைவியைப் புணர்தலுங் கூடாது என்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

மற்றும், மகாக்கினிசயனஞ் செய்து முடித்தவனுக்கு, பூமியின் சம்பந்த மின்மையின், பூமியிற் செய்யும் ஆகுதிகளும் பொருந்தா. ஆகுதி செய்யினும், அவ்வாகுதி வழிந்தோடிப் போவதால், யாகத்திற்கும், தலைவனுக்குங் கேடு வரும். ஆகுதி செய்யாதொழித்தலும் முடியாவாம்; நியதமாய் ஆகுதிகள் செய்ய வேண்டுமென விதிக்கப்பட்டிருத்தலின் என்க. இவ்வாற்றால், செய்யும் ஆகுதிகள் கேடுறுவண்ணம் மீண்டுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும். செய்யிலோ, முதலில் உருத்திராகாரமாயிருந்து சயனஞ் செய்ததால் அடங்கிக் கிடந்த சயனக்கினி மீண்டும் எழும்பில் புலிபோல் எழுப்பியவனையே கொன்று விடும் என்னிலோ, அற்றன்று, எழுப்பிய அக்கினியானது, நீண்டநாள் விட்டு நீங்கி யிருந்து மீண்டும் வந்தடைந்து இனிது நண்குணர்த்திய ஏவலாளனுக்கு தலைவனாகிய தனிகன் வேண்டிய தனத்தை யளிப்பது போலவே, மீண்டும் சிதி செய்கின்றவனுக்கு வேண்டிய தனத்தை யளித்தலினென்க. அன்றியும், மீண்டுஞ்சிதி செய்தவனுடைய மூன்று தலைமுறையார்கட்குஞ் சம்பத்தையுண்டாக்குகின்றது. இதனால், ஆகுதி வழிந்தோடிக் கெடாதிருக்கவும், சம்பத்தை யடையவும், குலம் விருத்தி யடையவும் நிமித்தமாயிருத்தலின், செங்கலடுக்கு மீண்டும் ஒருதலையாகச் செய்யற்பாலது என்பது பெறப்பட்டது.

இதையே, கல்பமும், 'पुनश्चितिस्त्रिष्वर्थेषु श्रूयते' என்று கூறுகின்றது. இவ்வாறு செய்து பயன் பெற்றவர் மநுவாவர். இதை, 'मनुरग्निमचिनुत' என்னும், சங், கா-5, பிர-4, அநு-10-வது மந்திரத்திற் காண்க.

---

முதல் மந்திரம்.

**येनर्षयस्तपसा सत्रमसातेन्धाना अग्निँ सुवराभरन्तः । तस्मिन्नहन्निदधे नाके अग्निमेतं यमाहुर्मनवस्स्तीर्ण बर्हिषम् ।**

உரை.

தீ யோம்புகின்றவர்களும், சுவர்க்கத்தை யடைய விருப்புற்றவர்களுமான மகரிஷிகள், சுவர்க்க நிமித்தம் தவாக்கினியால் சத்திர யாகத்தை ஆசரித்தார்கள். யாம், சுவர்க்க நிமித்தமாகப் பண்டைக் காலத்திய மனிதர்களின் வேள்வியை விரிப்பது என்னும் வசனப்படி அக்கினியை நிறுவுகின்றோம் என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

**तं पत्नीभिरनुगच्छेमदेवाः पुत्रैर्भ्रातृभिरुतवा हिरण्यैः । नाकं गृह्णानास्सुकृतस्य लोके तृतीये पृष्ठे अधिरोचने दिवः ।**

உரை

நற்கருமத்தின் பயனாகியவுலகும், மண்ணிலிருந்து மூன்றாவது என்று எண்ணப்படுவதும், மிக விளங்குவதுமாகிய சுவர்க்கத்திற்கு மேலேயுள்ளதும், துன்பிலாததுமாகிய சுகமுறையும் இடத்தையடைய விரும்பின வேள்விச் செயலாளர்களான யாங்களனைவரும், பத்தினி முதலிய எல்லோர்களுடன் கூட, அல்லது, பொன் முதலிய வேள்விச்சாதனப்பொருள்களுடன்கூட, அத்தகைய அக்கினியை யடைவோம், அதாவது அடைந்து பயனைப்பெறுவோம் என்பது.

---

மூன்றும் மந்திரம்.

**आवाचो मध्यमरुहद् भुरण्युरयमग्निस्सत्पतिश्चेकितानः । पृष्ठे पृथिव्यानि**
**हितोदविद्युतदधस्पदं कृणुते ये पृतन्यवः ।**

உரை.

உலகத்தைப் பரிபாலிப்பதும், நல்லோர்களைப் பாதுகாப்பதும், நுண்ணிய வறிவுடையதுமாகிய இவ்வக்கினி, துதிவடிவ வாக்கின் பொருளாய் இருக்கின்றது. துதிக்கத்தக்க குணங்களை யுடையது என்பதாம். இவ்வக்கினியும், பூமியின்மேல் நிறுவப்பட்டிருக்கின்றது. மிக வொளிவிட்டு விளங்குகின்றது. அத்தகைய இவ்வக்கினி, எனது பகைவரின் சேனைகளை, எனது காலடியின் கீழ் வைக்கின்றது என்பது.

---

நான்காம் மந்திரம்.

**अयमग्निर्वीरतमो वयोधास्सहस्रियो दीप्यता मप्रयुच्छन् । विभ्राजमान-**
**स्सरिरस्य मध्य उपप्रयात दिव्यानि धाम ।**

உரை.

மிக வீரமுடையதும், ஆயுளை யளிப்பதும், ஆயிரஞ் செங்கல்களால் கேடப்பெற்றதும், தண்ணீருக்குள் மின்னலாய் ஒளிர்கின்றதுமாகிய இவ்வக்கினி, இவ் வேள்விக்கருமத்தில் மிக விளங்குவதாகுக. வேள்விச் செயலாளர்காள்! நீவிர், இவ்வக்கினியின் அருளால் திவ்யமாகிய இடத்தை யடைவீர்களாக என்பது.

---

ஐந்தாம் மந்திரம்.

**सम्प्रच्यवध्वमनुसंप्रयाताग्ने पथो देवयानाङ्कृणुध्वम् । अस्मिन्सधस्थे**
**अध्युत्तरस्मिन्विश्वे देवा यजमानश्च सीदत ।**

உரை

அக்கினியே! நீயும், எசமானனும், இவ் வேள்வியிலுள்ள தடைகளை நீக்குவீர்களாக. அடையும் முறையாய்க் கருமசித்தியை யடைவீர்களாக. அதன் பிறகு, தேவலோகத்தை யடைதற்குரிய மார்க்கத்தைத் தேடுவீர்களாக. கூட இருக்கத்தக்க இக் கருமத்தில் பரலோகத்தில் நன்கு உட்காருவீர்களாக என்பது.

ஆறும் மந்திரம்

**येना सहस्रं वहसि येनाग्ने सर्ववेदसम्। तेनेमं यज्ञन्नोवह देवयानो य उत्तमः।**

உரை.

அக்கினியே! தேவர்களை யடைவிக்கின்ற நீ, ஆயிரக்கணக்கான தட்சிணைகளை யுடையதும், வேள்வியைத் தாங்குவதுமாகிய உனது செயலால் எம்முடைய இவ் வேள்வியைத் தேவர்களிடத்திற் சேர்ப்பாயாக. தேவர்கள் அடைதற்குரிய இவ் வேள்வியை தேவர்களிடத்திலேயே சேர்ப்பாயாக என்பது கருத்து.

ஏழாம் மந்திரம்

**उद्बुध्यस्वाग्ने प्रतिजागृह्येन मिष्टापूर्ते सꣳ सृजेथा मयञ्च। पुनः कृण्वꣳ स्त्वापितरं युवानमन्वाताꣳसीत्त्वयि तन्तुमेतम्।**

உரை.

அக்கினியே! நீ, என் விஷயத்தில் சாவதானமா யிருப்பாயாக. வேள்வித்தலைவனை, நாடோறும் விழிப்புட னிருக்கச் செய்வாயாக. இருவருஞ் சேர்ந்து, சுரௌத ஸ்மார்த்த கருமங்களைத் தேடுவீர்களாக. வேள்வித்தலைவ! உன்னைப் பாதுகாப்பதும், காளைப் பருவமுடையதுமாகிய அக்கினி, உன் பொருட்டு வேள்வியைத் தொடர்ந்து நடப்பதாகச் செய்குக என்பது.

எட்டாம் மந்திரம்

**अयन्ते योनिर्ऋत्वियो यतो जातो अरोचथाः। तञ्जानन्नग्न आरोहाथानो वर्धया रयिम्॥**

உரை.

அக்கினியே! இச் செங்கலடுக்காகிய விடம் உனது இடமாம். நீயும், செங்கலடுக்கிலிருந்து தோன்றி இனிது ஒளிர்கின்றாய். ஆதலின், அத்தகைய இடத்

தைத் தனதாக வுணர்ந்து அதில் ஏறுவாயாக. பிறகு, எம்முடைய சம்பத்தை வளரச் செய்வாயாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்கள் எட்டாலும், முன் மகாக்கினிசயனஞ் செய்தவன், மீண்டுஞ் செங்கலடுக்கி வைக்கில், இஷ்டியில் ஆகவனீயத்திலும், சோமத்திலும் பசுவிலும் உத்தர வேதியிலும் எட்டுக் கல்லுகளை வைத்துவிட்டு ஏனைய செங்கல்களை 'லோகம் பிருண' என்பதால் வைத்தல் வேண்டும்; வைத்து, அதன் மீது ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இவைகட்கு, மகாக்கினிசயனத்தின் விகாரமாகிய ஏர் உழுதல் முதலியவைகள் இல்லை. இச்செங்கல்கள் கிழக்கில் போய் முடிவு பெறுமாறு வைத்தல் வேண்டு மென்பதையு முணர்க.

மற்றும், முறையாய் ஒரு சிதியை (செங்கலடுக்கை) ச் செய்துகொண்டு, அதன்மீது, 'संयच्च प्रचेताश्च' என்பது முதலிய மந்திரங்கள் ஐந்தாலும் ஐந்து செங்கல்களை வைத்துவிட்டு, ஏனைய செங்கல்களை 'லோகம் பிருண' என்பதால் வைத்தல் வேண்டும்.

பதின்மூன்றாவது அநுவாகம் முடிந்தது.

---

## பதினான்காவது அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

ममाग्ने दशभिर्मन्त्रैर्धिष्णियेषु यथायथम् ।
इष्टका उपधत्तेत्र वह्निकाण्डः समापितः ॥ १ ॥

பத்து மந்திரங்களால் திஷ்ணியங்களில் இஷ்டகைகளை வைத்தல், இத்துடன், மகாக்கினிசயன காண்டம் முற்றும் என்பது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பதினான்காவது அநுவாகம்.

மூன்று பஞ்சாதிக்கு மேல் நாற்பத்து மூன்று பதங்களைக் கொண்டது.

ममा॑ग्ने॒ वर्चो॑ विह॒वेष्व॑स्तु व॒यन्त्वेन्धा॑नास्त॒नुवं॑ पुषेम । मह्य॑न्न-
मन्तां प्र॒दिश॒श्चत॑स्र॒स्त्वया॒ऽध्य॑क्षेण॒ पृत॑ना जयेम । मम॑ दे॒वा वि॑ह॒वे
स॑न्तु॒ सर्व॒ इन्द्रा॑वन्तो म॒रुतो॒ विष्णु॑र॒ग्निः । ममा॒न्तरि॑क्षमु॒रुगो॑पम॑स्तु

मह्यं वातः पवताङ्कामे अस्मिन् । मयि देवा द्रविणमायजन्तां मय्या-
शीरस्तु मयि देवहूतिः । दैव्या होतारावनिषन्त ॥ १ ॥ पूर्वेऽरिष्टा-
स्स्यामतनुवासुवीराः । मह्यं यजन्तु मम यानि हव्याऽऽकूतिस्सत्या
मनसो मे अस्तु । एनोमानिगांकतमच्चनाहं विश्वे देवासो अधिवोच-
तामे । देवीष्षडुर्वीरुरुणः कृणोत विश्वे देवास इह वीरयध्वम् । मा-
हास्महि प्रजयामा तनूभिर्मारधामद्विषते सोमराजन् । अग्निर्मन्युम्प्र-
तिनुदन्पुरस्तात् ॥ २ ॥ अदब्धो गोपाः परिपाहिनस्त्वम् । प्रत्यञ्चो-
यन्तु निगुतः पुनस्तेऽमैषाञ्चित्तं प्रबुधा विनेशत् । धाता धातृणां
भुवनस्ययस्पतिर्देव२ सवितारमभिमातिषाहम् । इमं यज्ञमश्विनोभा
बृहस्पतिर्देवाः पान्तु यजमानन्न्यर्थात् । उरुव्यचानो महिषश्शर्मयं२
सदस्मिन् हवे पुरुहूतः पुरुक्षु । सनः प्रजायै हर्यश्वमृडयेन्द्रमा ॥ ३ ॥
नो रीरिषोमा परादाः । येनस्सपत्ना अपते भवन्त्विन्द्राग्निभ्यामव-
बाधा महेतान् । वसवो रुद्रा आदित्या उपरिस्पृशं मोग्रञ्चेत्तारमधि-
राजमक्रन् । अर्वाञ्चमिन्द्रममुतो हवामहे योगो जिद्धन जिदश्वजिद्यः ।
इमन्नो यज्ञं विहवे जुषस्वास्य कुर्मो हरिवो मेदिनन्त्वा ॥ ४ ॥

பதின்மூன்றாவது அநுவாகத்தில் புநஃசிதி கூறப்பட்டது. இப்போது பதினான்காம் அநுவாகத்தில் 'விஹவ்யம்' என்னுஞ் செங்கல்கள் கூறப்படுகின்றன. மந்திரமின்றி ஒன்பது சுக்கான் கற்களை ஆக்கினீத்திர மேடையைச் சுற்றிலும் போடல் வேண்டும்.

---

முதலாவது விநியோகம்.

ஆக்னீத்ரனுடைய மேடையில் முதலாவது செங்கலை வைத்தல்

மந்திரம் :

ममाग्ने वर्चो विहवेष्वस्तु वयन्त्वेन्धानास्तनुवंपुषेम । मह्यन्नमन्तां प्रदिश-
श्चतस्रस्त्वयाऽध्यक्षेण पृतना जयेम ।

மேடைகள்)

### உரை

அக்கினியே! விஹவயம்: என்பதாற் செய்யும் யக்ஞங்களினுடைய பலன் உண்டாகுக. உன்னை வளர்க்கின்ற வேள்விச் செயலாளரும் வேள்வித்தலைவனாகிய யாமும், கொழுந்து விட்டெரியும் உனது திருமேனியை உறுதிப்படுத்துகின்றோம். எசமானனாகிய எனக்கு நான்கு திசைகளும், நான்கு திக்குக்களிலுமுள்ள மனிதர்களும் வசமாகுக. தலைவனாகிய உன்னோடு கூட, யாம் பகைவரின் சேனையை வெல்வோமாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பது முதலிய மந்திரத்தையுஞ் சேர்த்துக்கொண்டு, ஆக்கினீந்திர மேடையில் வைக்கவேண்டிய ஒன்பது செங்கல்களுள் முதலாவது செங்கலை, தெற்கு வரிசையில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

## இரண்டாவது விநியோகம்.

### இரண்டாஞ் செங்கலை வைத்தல்.

மந்திரம் :

**मम देवा विहवेसन्तु सर्व इन्द्रावन्तो मरुतो विष्णुरग्निः । ममान्तरिक्षमुरु-
गोपमस्तु मह्यं वातः पवतां कामे अस्मिन् ।**

### உரை.

இந்திரனோடுகூட மருத் கணங்களும், விஷ்ணு, அக்கினி முதலான எல்லாத் தேவர்களும், என்னுடைய இவ் வேள்வியில் வந்திருப்பார்களாக. பரந்துள்ள வான் என்னுடைய பாதுகாப்பாகுக. இவ்வாயு, வேள்விப் பயனைக் குறித்து உலாவுக. அதாவது, எனது விருப்பை முடிப்பதாகுக என்பதாம்.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக்கொண்டு முதல் வரிசையில் இரண்டாவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

## மூன்றாவது விநியோகம்.

### மூன்றாஞ் செங்கலை வைத்தல்.

மந்திரம் :

**मयि देवा द्रविणमायजन्तां मय्याशीरस्तु मयि देवहूतिः । दैव्या होतारोव-
निषन्त पूर्वेऽरिष्टास्स्यामतनुवा सुवीराः ।**

### உரை

இத் தேவர்கள் எசமானனுகிய எனக்குத் தனத்தைத் தேடி வைப்பார்களாக. விரும்பிய பயன் எனக்குக் கிடைக்குக. தேவர்களை ஆவாஹனஞ் செய்த (அழைத்த) லும் எமக்கு உண்டாகுக. முந்திய தேவசம்பந்தமுடைய இருத்துவிக்குகள் எமது வேள்வியைப் போற்றிக் கொள்வார்களாக. யாம் உடம்பால், துன்ப மிலாதவனும் வீரனுமாகிய புதல்வனுடன் கூடியவர்களாவோமாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு முதல் வரிசையில் மூன்ருவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

## நான்காவது விநியோகம்.

### நான்காஞ் செங்கலை வைத்தல்

**மந்திரம் :**

**म ह्यंयजन्तु मम यानिहव्याऽऽकूतिस्सत्या मनसो मे अस्तु । एनो मानिगाङ्क-
तमच्चनाहं विश्वे देवासो अधिवोचतामे ।**

### உரை.

எவைகள் என்னுடைய அவிகளாக இருக்கின்றனவோ, அவைகளை, இருத்துவிக்குக்கள் வேள்வி செய்வார்களாக. எனது மனதில் எண்ணியவைகள் மெய்மைகளாகுக. அதாவது, எண்ணிய பொருள் கிடைக்குக என்பதாம். யான் ஒரு வகைப் பாவத்தையும் அடையாதவனுவேனுக. விசுவதேவர்காள்! நீவிர், தேவர்களிடத்தில், எம்மைப் பெருமைப்படுத்திப் பேசுவீர்களாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, இரண்டாவது வரிசையில், முதலாவது கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

## ஐந்தாவது விநியோகம்.

### ஐந்தாஞ் செங்கலை வைத்தல்

**மந்திரம் :**

**देवीष्षडुर्वीरुरुणः कृणोत विश्वे देवास इह वीरयध्वम् । माहास्महि प्रज-
यामा तनूभिर्मारथामद्विषते सोमराजन् ।**

மேடைகள்)

உரை.

ஷடூர்வீ, என்னும், வான் முதலிய ஆறு தேவிமார்களே! நீவிர், எமது கருமச் செயலை விரிவாக்குவீர்களாக. விசுவதேவர்களே! நீவிர், இக் கருமத்திலுள்ள தடைகளைப் போக்குவீர்களாக. யாம், புதல்வர் முதலான பிரசைகளினின்று நீங்கிவிடாதவராவோமாக. உறுதியான உடம்பிலிருந்து விடுபடாதவராவோமாக. சோமராசனே! யாம் பகைவருக்கு, காரியத்தை முடித்து வைக்காதவர்களாவோமாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, இரண்டாவது வரிசையில் மூன்றுவது செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

ஆறுவது விநியோகம்.

ஆறாஞ் செங்கலை வைத்தல்

மந்திரம்:

अग्निर्मन्युम्प्रतिनुदन्पुरस्तादद्ब्धो गोपाः परिपाहिनस्त्वम्। प्रत्यञ्चोयन्तु निगुतः पुनस्तेऽमैषाञ्चित्तं प्रबुधाविनेशत्।

உரை.

இவ் வக்கினி, கோபத்தைத் தணித்துக் கொண்டு எமக்கு முன்னே செல்வதாகுக. அக்கினியே! நீ, பிறரால் கேடடையாத பாதுகாப்பில் வல்லுநனா யிருந்து எம்மை எல்லாவகையானும் பாதுகாப்பாயாக. உனது பாதுகாப்பிருக்கு மிடத்து பகைவர்கள் ஓட்டம் பிடிப்பவர்களாவாராக. பகைவர்களுடைய அந்தக்கரணம் அறிவோடு கெடுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு மூன்றுவது வரிசையில் முதலாவது செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

ஏழாவது விநியோகம்.

ஏழாஞ் செங்கலை வைத்தல்

மந்திரம்:

धाता धातॄणां भुवनस्ययस्पतिर्देवꣳ सवितारमभिमातिषाहम्। इमं यज्ञमश्विनोभा बृहस्पतिर्देवाः पान्तु यजमानन्यर्थात्।

**உரை.**

உலகத்திற்கு இறைவர்களான தட்சப் பிரஜாபதி முதலானோர்களையும் படைக்கின்றவர்களும், பாதுகாக்கின்றவர்களுமான அசுவினிகளும், பிருகற்பதி என்னும் இத் தேவர்களும், அவ்வம் மந்திர வழக்குடையதும், பெரும் பயனைத் தருவதும், பாவமாகிய தடையை நீக்குவதுமாகிய எமது வேள்வியை, வீணாக்காது பாதுகாப்பார்களாக என்பது.

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, மூன்றாவது வரிசையில் இரண்டாவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

**எட்டாவது விநியோகம்**

**எட்டாஞ் செங்கலை வைத்தல்**

**மந்திரம் :**

**उरुव्यचानो महिषश्शर्मयᳪंसदस्मिन्नहवे पुरुहूतः पुरुक्षु । सनः प्रजायै हर्यश्व मृडयेन्द्रमा नोरीरिषोमा परादाः ।**

**உரை.**

புருகூதனாகிய, அதாவது அநேகம் பேரால் அழைக்கப் பெறுவோனாகிய இந்திரன், எமக்கு இவ்வேள்வியில் சுகத்தைக் கொடுப்பானாக. மற்றும், அநேக தேசங்கட்கு இறைவனும், பெரிய சூரத்தன்மை முதலிய குணங்களுடன் கூடியவனும், பல்வேறுவகை மந்திரங்களாற் கூறப் பெற்றவனும், ஹரி, என்னும் குதிரைகளை யுடையவனுமாகிய இந்திர! நீ, எம்முடைய புதல்வன் முதலான பிரசைகள் சித்தியாதற் பொருட்டு எம்மை நலப்படுத்துவாயாக. எம்மை யிகழ்ந்து தள்ளிவிடாதே என்பது.

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்துடன் 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, மூன்றாவது வரிசையில் மூன்றாவது கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

**ஒன்பதாவது விநியோகம்.**

**ஒன்பதாவது ஒரு வெள்ளைக் கல்லை வைத்தல்**

**மந்திரம் :**

**येनस्सपत्ना अपतेभवन्त्विन्द्राग्निभ्यामवबाधा महेतान् । वसवो रुद्रा आदित्या उपरिस्पृशं मो ग्रञ्चेत्तारमधिराजमक्रन् ।**

**உரை.**

எவர்கள் எமக்குப் பகைவர்களா யிருக்கின்றார்களோ, அவர்கள் எமக்குத் தாழ்ந்தவர்களாகுக. அருள் புரியும் இந்திர அக்கினிகளுடன் கூடி, யாம் அப் பகைவர்களை அடியோடு கெடுத்து விடுவோமாக. வசு, உருத்திரன், ஆதித்தன் முதலான தேவர்கள், சுவர்க்கம் வரை எட்டுவதும், பகைவரைத் தாழ்த்துந் திறமை யுடையதும், அறிவு மிக்கதும், அனைவருக்கும் தலைமையுடையதுமாகிய பெருந் தன்மையைச் செய்வார்களாக என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக்கொண்டு, முன் கொண்டு வந்து வைத்திருந்த வெள்ளைக் கல்லை, இரண்டாம் வரிசையில் இரண்டாவதாக வைத்தல் வேண்டும் என்பதாம்.

அதன் பிறகு, மந்திரமின்றி அம் மேடையின்மீது மணலை இறைத்து விடல் வேண்டும் என்பதையு முணர்க.

**ஹோதாவின் மேடை.**

சூத்திரத்தைத் தழுவி, மந்திரமின்றி முதலில் மேடையைச் சுற்றிலும் பன்னிரண்டு சுக்கான் கற்களைப் போடல் வேண்டும்.

இனி, ஆக்கினீத்ர மேடைக்குச் செங்கல்களை அடுக்கியது போலவே ஒவ்வொரு மந்திரத்திற்கு ஒவ்வொன்றாக நான்கு செங்கல்களை வைத்து விட்டு, ஐந்தாவது மந்திரத்தை இரண்டு முறை ஓதிக்கொண்டு முறையே இரண்டு செங்கல்களை வைத்தல் வேண்டும்.

பிறகு, ஆறாவது மந்திர முதல், ஒன்பதாவது மந்திரம் வரை, மந்திரத்திற்கு ஒவ்வொன்றாக பத்தாவது செங்கல் வரை வைத்துவிடல் வேண்டும்.

---

**பத்தாவது விநியோகம்.**

**ஹோதா மேடையில் பதினோராவது செங்கலை வைத்தல்.**

**மந்திரம் :**

**अर्वाञ्च मिन्द्रममुतो हवामहे योगोजिद्धनजिदश्वजिद्यः । इमन्नो यज्ञं विहवे जुषस्वाऽस्य कुर्मो हरिवो मेदिनन्त्वा ॥**

**உரை.**

பிறருடைய கோக்களையும், தனத்தையும், குதிரைகளையும் வென்று கொள்வோனாகிய இந்திரனை, இவ்வேள்வி நிமித்தமாக அழைக்கின்றோம். இந்திர! பலவகையாய் அழைக்கப் பெற்றபோது நீ எமது வேள்வியை அநுபவிப்பாயாக. 'ஹரீ' என்னும் குதிரைகளையுடைய இந்திர! உன்னை, எசமானனுடைய நண்பனாகச் செய்கின்றோம் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், 'तया देवतया' என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு, பதினோராவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

மற்றும், சூத்திரப்படி, இம் மந்திரத்தையே மீண்டும் ஓதிக்கொண்டு, பன்னிரண்டாவது செங்கலையும் வைத்துவிடல் வேண்டும்.

மந்திரமின்றி மேடையின்மீது மணலை இறைத்தல் வேண்டும்.

இம் மேடை, சபையின் பிருஷ்டி என்னுமிடத்தில் உள்ளதாம்.

**பதினான்காம் அநுவாகம் முடிந்தது.**

---

## பதினான்காம் அநுவாகத்தின்
## பரிசேடம்.

### பிரசாஸ்தாவின் மேடை

மந்திரமின்றி, எட்டுச் சுக்கான் கற்களை மேடையைச்சுற்றிலும் இறைத்து விட்டு, இவ் வநுவாகத்தின் முதல் மந்திரங்கள் எட்டாலும், நான்கு ஹோதாவின் செங்கல்களையும், நான்கு மார்ச்சாலீயச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.

மந்திரமின்றி, மணலை மேடைகளின் மீது இறைத்துவிடல் வேண்டும்.

### பிராமணச்சம்சியின் மேடை.

மந்திரமின்றி, பதினொரு சுக்கான் கற்களை மேடையைச் சுற்றிலும் இறைத்துவிட்டு, இவ்வநுவாக மந்திரங்கள் பத்தாலும் பத்து ஹோதாச் செங்கல்களை வைத்துவிட்டு பத்தாவது மந்திரத்தையே மீண்டும் ஓதிக்கொண்டு பதினோராவது மார்ச்சாலீயச் செங்கலை வைத்தல் வேண்டும்.

மந்திரமின்றி, மணலை மேடையின்மீது இறைத்து விடல் வேண்டும்.

போதா, நேஷ்டா, அச்சாவாகன் என்னும் மூவரின் மேடைகளின் வகையோ,

மந்திரமின்றி, மூன்று மேடைகளைச் சுற்றிலும் எட்டு எட்டுச் சுக்கான் கற்களைப் போட்டுவிட்டு, இவ்வநுவாக மந்திரங்களுள் முதல் எட்டு மந்திரங்களாலும், நான்கு நான்கு ஹோதாவின் செங்கல்களையும், நான்கு நான்கு மார்ச்சாலீயச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும் என்பது.

மந்திரமின்றி மணலையும் இறைத்தல் வேண்டும்.

### பிரமனுடைய மேடை

மந்திரமின்றி எட்டுச் சுக்கான் கற்களை, மேடையைச் சுற்றிலும் போட்டு விட்டு, இவ்வநுவாகத்தின் முதல் மந்திரங்கள் ஐந்தாலும், நான்கு ஹோதாச் செங்கல்களையும் ஒரு மார்ச்சாலீயச் செங்கலையும் வைத்துவிட்டு, 'तवश्रिये, बृहस्पते, बृहस्पतिस्समजयत्' என்பவைகளை முதலாகக்கொண்ட சூத்திர மந்திரங்கள் மூன்றாலும் மூன்று மார்ச்சாலீயச் செங்கல்களை வைத்தல் வேண்டும்.

மந்திரமின்றி, மணலை, மேடையின் மீது இறைத்து விடல் வேண்டும்.

இம் மேடை, பிரசாஸ்தாவின் மேடைக்குத் தெற்கில் சஞ்சாரம் (சிறிது இடம்) விட்டு இருத்தல் வேண்டும்.

### மார்ச்சாலீய (கையலம்பும்) மேடை

மேடையைச் சுற்றிலும் ஆறு சுக்கான் கற்களைப் போட்டுவிட்டு, இவ்வநுவாகத்தின் முதல் மூன்று மந்திரங்களால் மூன்று மார்ச்சாலீயக் கல்லுகளை வைத்துவிட்டு, 'यमोदाधार, यथापञ्च, त्रिकद्रुकेभिः' என்பவைகளை முதலாக்கொண்ட ஆர-பிர-6, அநு-7-வதிலுள்ள மூன்று மந்திரங்களாலும் மூன்று மார்ச்சாலீயச் செங்கல்களை வைத்தல் வேண்டும்.

மந்திரமின்றி, மணலை, மேடையின்மீது இறைத்து விடல் வேண்டும்.

### சாத்வால (மண்ணெடுக்கும்) மேடை

மேடையைச் சுற்றிலும் எட்டுக் சுக்கான் கற்களைப் போட்டுவிட்டு, இவ்வநுவாகத்தின் முதலாவது ஐந்து மந்திரங்களாலும் நான்கு ஹோதாச் செங்கல்களையும் ஒரு மார்ச்சாலீயச் செங்கலையும் வைத்துவிட்டு, 'मृडानः, अद्यामते, त्वेषं वयं' என்பவைகளை முதலாகக் கொண்ட மூன்று சூத்திர மந்திரங்களால் மூன்று மார்ச்சாலீயக் கற்களை வைத்தல் வேண்டும்.

### சாமித்திர (ஆட்டுக் கடாவைக் கொல்லும்) மேடை

மேடைக்கு நாற்புறத்தும் எட்டுச் சுக்கான் கற்களைப் போட்டுவிட்டு, 'हव्यं प्रीणीहि' என்பது முதலிய சூத்திர மந்திரங்கள் எட்டாலும், நான்கு ஹோதாச் செங்கல்களையும், நான்கு மார்ச்சாலீயச் செங்கல்களையும் வைத்து விட்டு, மந்திரமின்றி மணலை இறைத்தல் வேண்டும்.

### அவபிருத மேடை

பிறகு, (அவபிருதம்) முடிவு நீராடும் இடஞ் சென்று, நீரில், எட்டுச் சுக்கான் கற்களை இறைத்துவிட்டு, அநுவாகத்தின், முதல் மந்திரங்கள் ஐந்தாலும் நான்கு ஹோதாச் செங்கல்களையும் ஒரு மார்ச்சாலீயச் செங்கலையும் வைத்துவிட்டு, 'अवते हेडः, उदुत्तमं, तत्वायामि' என்பவைகளை முதலாகக் கொண்ட,

மந்திரங்கள் மூன்றால் மூன்று மார்ச்சாலீயக் கல்லுகளை வைத்தல் வேண்டும். இதை நீராடும்போது செய்யினுஞ் செய்து கொள்ளலாம்.

மேற்கூறிய மேடைகளை, மகாக்கினிசயன அக்கினிஷோமீய மேடைகள் போடும்போது செய்து கொள்ளல் வேண்டும்.

பரிசேடம் முற்றும்.

---

## விருப்ப வேறுபாட்டால் உண்டான சிதியின் செங்கல் அடுக்குக்களின் வேறுபாடுகளின் சுருக்கம்.

1. சுவர்க்கத்தை விரும்புவோன், நான்கு மூலையாக இருக்கும் 'சேன சிதி' என்னுஞ் செங்கல் அடுக்கைச் செய்தல் வேண்டும்.

2. பகைவரைக் கொல்ல விரும்புவோன், மூன்று மூலையாயுள்ள 'பிரவுக சிதி' என்பதைச் செய்தல் வேண்டும்.

3. மேலே பிறக்கப்போகும் பகைவரைக் கொல்ல விரும்புவோன், 'உபயத: பிரவுகசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

இது, இரண்டு முக்கோணங்களை மேலுங் கீழுமாய் வைத்தது போன்றுள்ளதாம்.

4. பகைவரைக் கொல்ல விரும்புவோன் வட்டமா யிருக்கின்ற, 'இரதச் சக்கரசிதி' என்னும் செங்கல் அடுக்கைச் செய்தல் வேண்டும்.

5. உணவுப் பொருளை (அன்னத்தை) விரும்புவோன் அன்னவட்டி வடிவா யிருக்கும் 'துரோணசிதி' என்னுஞ் செங்கல் அடுக்கைச் செய்தல் வேண்டும்.

6. மேற்படி விருப்புடையவன் நாற்கோணமாகிய அன்னவட்டிபோன்ற செங்கலடுக்கையுஞ் செய்யலாம்.

7. பசு (கோ) க்களை விரும்புவோன், நாற்கோணமாகிய 'சமூஹ்யசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

8. கிராமத்தை விரும்புவோன், நாற்கோணமா யிருக்கும் 'பரிசாய்ய சிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

9. ஷை விருப்புடையவன், நாற்கோணமாயுள்ள 'உபசாய்ய சிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

10. பிதிர்லோக சம்பத்தை விரும்புவோன் நாற்கோணமாகிய 'ஸ்மசான சிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்,

மேடைகள்)

11. ஷை விருப்புடையோன் வட்டமாகிய செங்கலடுக்கைச் செய்தலுங் கூடும்.

12. பசுவை விரும்புவோன், நாற்கோணமா யிருக்கும் 'சந்தசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

13. ஷை விருப்புடையவன் வட்டமாகிய 'பிராகிருதச் சந்தசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தலுங் கூடும்.

14. சுவர்க்கத்தை விரும்புவோன், விரிந்த சிறகும் நீண்ட வாலுமுடைய பட்சி போன்றிருக்கும், 'பூர்வசேனசிதி' என்னுஞ் செங்கலடுக்கை அடுக்கல் வேண்டும்.

15. ஷை விருப்புடையோன், கோணலான சிறகுகளும் விறிந்த வாலுமுடைய பருந்து போன்றிருக்கும், 'உத்தரசேனசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தலுங் கூடும்.

16. அவ்வுலகில் தலைவனாக விரும்புவோன் தலையிலாத பட்சி போன்றிருக்கும், 'கங்கசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

17. ஷை விருப்புடையோன் மற்றொரு வகைக் கங்கசிதியைச் செய்தலுங் கூடும்

18. பெருமையை விரும்புவோன், பட்சி வடிவாகிய, 'அலஜசிதி' என்னுஞ் செங்கலடுக்கைச் செய்தல் வேண்டும்.

இது நான்கு படைச்சால்களாக உழுத் துக்கதாம்.

இவைகள் ஒவ்வொன்றிற்கும், ஐந்து ஐந்து அடுக்கும் ஆயிரம் ஆயிரஞ் செங்கல்லுகளுங் கொள்ளும்.

இவ்வாறு ஆபஸ்தம்ப சுரௌத சூத்திர, சுல்ப சூத்திரப்படி சிதிகளின் வேறுபாடுகள் எழுதப்பட்டன.

**புனச்சிதியும் முடிந்தது.**

---

ஈண்டு, இவ் வாருவது அநுவாகம் முதல் ஒன்பதாம் அநுவாகம் வரை அசுவமேத யாகமாதலின், இங்கு விநியோக முறையில் பயன் படாமையால் விநியோக முறையைத்தழுவி, பதினைந்தாவது அநுவாகம் முதலாகிய நான்கு அநுவாகங்களை இவ் வேழாம் பிரபாடகத்தின் முடிவில் சேர்த்திருக்கின்றோம். இதன் விரிவை சமகப் பிரசின உபோற்காதத்திற் காண்க.

## பதினைந்தாவது அநுவாகம்.

விடயச் சுருக்கம்

अथाश्वमेधे जीमूत कवचं प्रतिमुञ्चति ।
धन्वना धनुरादत्ते वक्ष्यन्ती ज्यामभिस्पृशेत् ॥ १ ॥
ते संमृशेद्धनुष्कोट्यौ बह्वीतीषु धिबन्धनम् ।
रथेति सारथिं तीव्रानश्वानप्यभिमन्त्रयेत् ॥ २ ॥
रथकाले रथः स्थाप्यो भजेत्स्वादुत्रयातिपतॄन् ।
ऋज्यात्मानमभिस्पृश्य ह्या जङ्घेत्याहरेत्कशाम् ॥ ३ ॥
हस्तं (स्तघ्नं) मन्त्रयतेऽहीति रथंतु वनपञ्चभिः ।
दुन्दुभिं वादयेदाऽमूरत्र मन्त्रास्तु विंशतिः ॥ ४ ॥

கவசம் போட்டுக்கொள்ளல், தனுவை எடுத்துக்கொள்ளல், நாணைத் தொடுதல், தனுவின் நுனிகளைத் தொடுதல், அம்பை வில்லில் பூட்டல், சாரதியைப் போற்றல், குதிரைகளைப் போற்றல், இரதத்தை வைத்தல், பிதிருக்களைப் போற்றல், தன்னைத் தொடுதல், சாட்டையைக் கொண்டுவருதல், கையைப் போற்றல், இரதத்தைப் போற்றல், துந்துபியை அடித்தல் என்பது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பதினைந்தாவது அநுவாகம்.

ஆறு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்தொரு பதங்களைக் கொண்டது.

அசுவமேதத்தில் கவச மணிந்து கொள்ளுதற்குரிய மந்திரங்கள்.

जीमूतस्येव भवति प्रतीकं यद्वर्मी याति समदामुपस्थे । अनाविद्धया तनुवा जयत्वꣳ सत्वा वर्मणो महिमा पिपर्तु । धन्वनागाधन्वनाजिं जयेम धन्वना तीव्रास्समदो जयेम । धनुश्शत्रोरपकामं कृणोति धन्वना सर्वाः प्रदिशो जयेम । वक्ष्यन्तीवेदागनीगन्ति कर्णं प्रियꣳ सखायं परिषस्वजाना । योषेव शिङ्क्ते वितताऽधि धन्वन् ॥ १ ॥ ज्या इयꣳ समने पारयन्ती । ते आचरन्ती समनेव योषा मातेव पुत्रं बिभृतामुपस्थे । अपशत्रून् विध्यताꣳ संविदाने

आर्त्नी इमे विष्फुरन्ती अमित्रान् । बह्वीनां पिता बहुरस्य पुत्रश्चिश्चा-कृणोति समनाऽवगत्यं । इषुधिस्सङ्काः पृतनाश्च सर्वाः पृष्ठे निनंद्धो जयति प्रसूतः । रथे तिष्ठन्नयति वाजिनीवः पुरो यत्र यत्र कामयते सुषारथिः । अभीशूनां महिमानं ॥ २ ॥ पनायतमनः पश्चादनु-यच्छन्ति रश्मयः । तीव्रान्घोषान्कृण्वते वृषपाणयोऽश्वा रथेभिस्सह वाजयन्तः । अवक्रामन्तः प्रपदैरमित्रान् क्षिणन्ति शत्रू९ रनपव्य-यन्तः । रथवाहन९ हविरस्य नाम यत्राऽऽयुधं निहितमस्य वर्म । तत्रा रथमुपशग्म९ सदेम विश्वाहावय९ सुमनस्यमानाः । स्वादुष९ सदः पितरो वयोधाः कृच्छ्रेश्रितश्शक्तीवन्तो गभीराः । चित्रसेना इषु बला अमृध्रास्सतो वीरा उरवो व्रातसाहाः । ब्राह्मणासः ॥ ३ ॥ पितरस्सोम्यासश्शिवेनो द्यावापृथिवी अनेहसा । पूषानः पातु दुरि-तादृता वृधो रक्षामाकिर्नो अघश९स ईशत । सुपर्णं वस्ते मृगो अस्यादन्तो गोभिस्सन्नद्धा पतति प्रसूता । यत्रा नरस्सञ्च विच-द्रवन्ति तत्राऽस्मभ्यमिषवश्शर्मय९सन् । ऋजीते परिवृङ्धिनो-ऽश्मा भवतु नस्तनूः । सोमो अधिब्रवीतु नोऽदितिः ॥ ४ ॥ शर्म यच्छतु । आजङ्घन्ति सान्वेषाञ्जघना९ उपजिघ्नते । अश्वा जनिप्र-चेतसोऽश्वान्त्समत्सु चोदय । अहिरिव भोगैः पर्येति बाहुञ्ज्याया-हेतिं परिबाधमानः। हस्तघ्नो विश्वावयुनानि विद्वान्पुमान्पुमा९ संपरि-पातु विश्वतः । वनस्पते वीड्वङ्गो हि भूया अस्मत्सखा प्रतरणस्सु-वीरः । गोभिस्सन्नद्धो असि वीडयस्वास्थातातें जयतु जेत्वानि । दिवः पृथिव्याः परि ॥ ५ ॥ ओज उद्भृतं वनस्पतिभ्यः पर्या-

भृतꣳ सहः । अपामोज्मानं परिगोभिरावृतमिन्द्रस्य वज्रꣳ हविषा रथं यज । इन्द्रस्य वज्रो मरुतामनीकं मित्रस्य गर्भो वरुणस्य नाभिः । सेमान्नो हव्यदातिञ्जुषाणो देवरथ प्रतिहव्या गृभाय । उपश्वासय पृथिवी मुतद्यां पुरुत्रा ते मनुतां विष्ठितञ्जगत् । सदुन्दुभे सजूरिन्द्रेण देवैर्दूरात् ॥ ६ ॥ दवीयो अपसेध शत्रून् । आक्रन्दय बलमोजोन आधा निष्टनिहि दुरिता बाधमानः । अपप्रोथ दुन्दुभे दुच्छुनाꣳ इत इन्द्रस्य मुष्टिरसि वीडयस्व । आऽमूरज प्रत्या वर्तयेमाः केतुमद्दुन्दुभिर्वावदीति । समश्वपर्णाश्चरन्ति नो नरोऽस्माकमिन्द्ररथिनो जयन्तु ॥ ७ ॥

---

*பதினான்காவது அநுவாகத்தில் விஹவ்ய என்னும் (புந:சிதி:) மீண்டுஞ்செங் கலடுக்குதல் கூறப்பட்டது. இத்துடன் சயனப்பிரகரணம் முடிந்துவிட்டது. இனி, சம்மந்தம்பற்றி இங்கு, பதினைந்தாவதாக எடுத்துக்கொண்ட அசுவமேத சம்மந்தமாகிய இவ்வநுவாகத்தில் கவசமணிதல் முதலியது கூறப்படுகின்றது.*

*ஈண்டு, அசுவமேத யாகத்தில், 'युञ्जन्ति ब्रध्नं' என்பது முதலிய மந்திரத்தால், வேட்போன், தேரின் நுகத்தடியின் தென்பக்கத்தில் குதிரைகளைக் கட்டி வைத்துவிட்டு, 'युञ्जन्त्यस्य काम्या' என்பது முதலிய மந்திரத்தால், வண்டியின் மாடுகளைப் போற்றுவதுடன், 'केतुं कृण्वन्' என்பது முதலிய மந்திரத்தால் தேர்க்கொடியைத் தேரின் முடியிற் கட்டிவிடல் வேண்டும்.*

---

### முதலாவது விநியோகம்

#### கவச மணிதல்

மந்திரம் :

**जीमूतस्येव भवति प्रतीकं यद्वर्मी याति समदामुपस्थे । अनाविद्धया तनुवा जयत्वꣳ स त्वा वर्मणो महिमा पिपर्तु ।**

#### உரை.

*அரசன், கவசத்தை யணிந்து கொண்டு பகைவனுக்கருகில் போகும் போது, இவனிடத்திற் பொறாமை மிகுந்த பகைவர்கள், மழை பெய்வதற்*

கெழும் கரியமேகங்கள் வந்து குவிந்து கொள்வதுபோல் இருதிறத்தாருடைய சைன்யங்களும் ஒன்றுய்க் கலந்து சூழ்ந்து கொள்ளுஞ் சமயத்தில், அரசனே! நீ, பிறரைக் கொல்லாத வில்லுடன் கூடியவனுய் வெற்றி பெறுவாயாக. கவசத்தினுடைய அத்தகைய மகிமை உன்னைப் பாதுகாக்க என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்தால், வேட்போன், கவசத்தை அணிந்துகொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

### இரண்டாவது விநியோகம்.

**வில்லை யெடுத்தல்**

**மந்திரம் ;**

**धन्वनागा धन्वनाजिं जयेम धन्वना तीव्रास्समदो जयेम । धनुश्शत्रोरप क्रामं कृणोति धन्वना सर्वाःप्रदिशो जयेम ।**

**உரை.**

யாம், வில்லால், பிறருடைய கோக்களைக் கவர்ந்து கொள்வோம். அங்ஙனமே, வில்லிற் சூர வீரர்களான காலாட் படைகளையுடைய பகைவரின் சைன்யத்தையும் வெற்றி கொள்வோம் என்பது.

அவ்வாறே, இந்த வில், பிறருடைய விருப்பத்தை ஒழிப்பதாகுக. விரிப்பதிலென்? எல்லாத்திசைகளிலும் சிறந்து விளங்கும் பகைவர்களனைவரையும் வெற்றி கொள்வோம் என்பது கருத்து.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்தால், வில்லை எடுத்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

### மூன்றுவது விநியோகம்.

**நாண் கயிற்றைத் தொட்டுப் போற்றல்.**

**மந்திரம் :**

**वक्ष्यन्ती वेदागनीगन्ति कर्णं प्रियꣳ सखायं परिषस्वजाना । योषेवशिङ्क्ते विततऽधि धन्वन् ज्या इयꣳ समने पारयन्ती ।**

**உரை.**

வில்லின்மேல் ஏற்றப் பெற்றதும், போரின் முடிவை யுடைவதுமாகிய இந்த நாண்கயிறு, மனைவி, தனது கணவனுடைய காதில் இரகசியம் பேசுவது போல், காதிற்கருகில் வந்து மெல்ல ஒலி செய்கின்றது என்பது.

சாயாணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், நாண்கயிற்றைத் தொட்டுப் போற்றல் வேண்டுமென்பதாம்.

---

நான்காவது விநியோகம்.

வில்லின் நுனிகளைத் தொடுதல்

மந்திரம் :

**ते आचरन्ती समनेवयोषा मातेव पुत्रं विभृतामुपस्थे । अपशत्रून् विध्यताꣳ संविदाने आर्त्नी इमे विष्फुरन्ती अमित्रान् ।**

உரை.

மனைவிபோல் போரில், இனிமை கூறுகின்றவைகளும், இடுப்பில் எடுத்துச் செல்லுந் தாயைப் போல் நலஞ் செய்கின்றவைகளுமான வில்லின் கோடிகளிரண்டும், மீண்டும் மீண்டும் எழும்பி ஒன்றுபட்டு பகைவரை ஒழிப்பனவாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வில்லின் இரண்டு நுனிகளையுந் தொடுதல் வேண்டுமென்பதாம்.

---

ஐந்தாவது விநியோகம்.

அம்பையெடுத்து வில்லிற் பூட்டுதல்

மந்திரம் :

**बह्वीनांपिता बहुरस्यपुत्रश्चिश्चाकृणोति समनाऽवगत्य । इषुधिस्संकाः पृतनाश्च सर्वाः पृष्ठे निनद्धो जयति प्रसूतः ।**

உரை

அநேகம் அம்புகளைப் பாதுகாப்பதும், அம்புகளென்னும் அநேகம் புத்திரர்களையுடையதுமாகிய இந்த அம்பறுத்தூணியானது, போர் முனைக்கு வந்து அம்பை எடுக்கும்போது, சிச் சிச் என்று ஒலிக்கின்றது. இத்தகைய அம்பறுத்தூணி, முதுகில் கட்டப் பெற்றதாய் வில்லாற் செலுத்தப்பட்ட அம்பை யிழுக்குமிடத்து வந்தடையுஞ் சேனைகளனைத்தையும் வெல்கின்றது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அம்பை யெடுத்து வில்லில் வைத்து நாணேற்றல் வேண்டும் என்பதாம்.

## ஆறுவது விநியோகம்.

### தேர்ப்பாகனைப் போற்றுதல்

மந்திரம் :

रथेतिष्ठन्नयति वाजिनीवः पुरोयत्रयत्र कामयते सुषारथिः । अभीशूनां महिमानं पनायतमनः पश्चादनुयच्छन्ति रश्मयः ।

உரை.

நன்கு சிட்சிக்கப் பெற்ற இத்தேர்ப்பாகன், தேரின் மீதிருந்து கொண்டு, எங்கு எங்குச் செல்ல விருப்பமோ, அங்கு அங்கு குதிரைகளைச் செலுத்துகின்றான். வேட்போர்களே! நீவிரும் வேள்வித் தலைவனே! நீயும், 'இக் குதிரையைப் பிடிக்குங்கயிறுகள் தேர்ப்பாகனுடைய மனத்தின்படியே முன்னும் பின்னும் குதிரைகளை நியமிக்கின்றன' என்பதால், குதிரைகளைப் பிடித்துக் கொள்வதற்குக் காரணமான கயிறுகளைப் போற்றுவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், சாரதியைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

## ஏழாவது விநியோகம்

### குதிரையைத் தொட்டுப் போற்றுதல்

மந்திரம் :

तीव्रान्घोषान्कृण्वते वृषपाणयोऽश्वारथेभिस्सह वाजयन्तः । अवक्रामन्तः प्रपदैरमित्रान् क्षिणन्तिशत्रूꣳरनपव्ययन्तः ।

உரை.

ஓடும் ஆற்றல் மிகுந்த கால்களை யுடையவைகளும், தேருடன் விரைவிற் செல்லுகின்றவைகளும், காலின் கொளும்புகளால் பகைவரை நாசப்படுத்துகின்றவைகளுமான இக்குதிரைகள், பேரொலியுடன் கனைக்கின்றன. மற்றும், பயமற்றவைகளாய்ப் பகைவரைக் கொல்லுகின்றன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், குதிரைகளைத் தொட்டுப் போற்றல் வேண்டுமென்பதாம்.

## எட்டாவது விநியோகம்

### இரதத்தைத் தொட்டுப் போற்றுதல்

மந்திரம் :

रथवाहनꣳहविरस्य नामयत्राऽऽयुधं निहितमस्यवर्म । तत्रा रथमुपशग्मꣳसदेम विश्वाहा वयꣳसुमनस्यमानाः ।

உரை

எசமானனுடைய, வில் முதலியவைகளையும், கவச முதலியவைகளையும் வைக்கப்பெற்றிருப்பதும், இரதவாஹனம் எனப் பெயர் வழங்கப் பெற்றதும், அவியைப்போல் உதவி செய்தலின் அவியென வழங்கப்பெற்றதுமாகிய தேர்ச் சக்கரங்களின்மீது நாடோறும் நன்மனத்தையுடைய யாம், இனிது செல்லும் இரதத்தைத் தூக்கி வைக்கின்றேம் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், சக்கரத்தின்மீது இரதத்தை எடுத்து வைத்துப் போற்றல் வேண்டுமென்பதாம். இவ் விநியோகம், சூத்திரப்படி பின்வருவதாம்.

---

ஒன்பதாவது விநியோகம்.

பிதிர்த் தேவதைகளைப் போற்றுதலில்

முதல் மந்திரம்.

**स्वादुषꣳसदः पितरो वयोधाः कृच्छ्रेश्रितश्शक्तीवन्तो गभीराः । चित्रसेना इषुबला अमृध्रास्सतो वीरा उरवो व्रातसाहाः ।**

உரை.

எம்மாற் கொடுக்கப்பெற்ற அன்னத்தாற் களிப்படைகின்றவர்களும், எமது ஆயுளை நிலை நிறுத்துகின்றவர்களும், பீடையுற்றவிடத்து பிராணிகளால் வழிபடப்பெற்றவர்களும், வன்மையுடையவர்களும், நுண்ணறிவாளர்களும், விசித்திரமான பல்வகைச் சேனைகளையுடையவர்களும், அம்பின் ஆற்றலுடையவர்களும், பிறரால் போரிட்டு வெல்ல முடியாதவர்களும், மிகுந்த சூரர்களும், விரிந்த தனம், சைன்ய முதலிய சம்பத்தை யுடையவர்களும், பிறருடைய காலாழ்ப்படைகளின் கூட்டங்களை யடக்குகின்றவர்களுமான பிதிர்க்கள் எமக்கு இருக்கின்றார்கள் என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

**ब्राह्मणासः पितरस्सोम्यासश्शिवेनो द्यावापृथिवी अनेहसा । पूषानः पातु दुरितादृता वृधो रक्षामाकिर्णों अघशꣳस ईशत ।**

உரை

வேதத்தின் பொருளை மேற்கொண்டவர்களும், எம்மிடத்து அருள் செய்வதையே மேற்கொண்டவர்களுமான பிதிர்க்களும், வானும் மண்ணும், எப்போதும் எமக்கு மங்களந்தரும் அருள் செய்வதையே மேற்கொள்ளுவார்களாக. அங்ஙனமே, வேள்வியை வளர்க்கும் பூஷாதேவதை, எம்மை, பாவத்

மந்திரம்)

தினின்றும் பாதுகாப்பாற்றுவதாகுக. பிதிர்க்கணங்களே! நீவிர், எம்மைப் பாதுகாப்பீர்களாக. எம்மைப் பழிப்பதற்கு முடியாதவர்களாவீர்களாக என்பது.

மூன்றும் மந்திரம்.

**सुपर्णवस्ते मृगो अस्यादन्तो गोभिस्सन्नद्धा पतति प्रसूता। यत्रा नरस्सञ्च विचद्रवन्ति तत्राऽस्मभ्यमिषवश्शर्मयꣳसन्।**

**உரை.**

இந்த அம்பின் பின்பக்கம் மறைக்கின்றது. இந்த அம்பின் பற்கள் கூர்மையாயிருக்கின்றன. இந்த அம்புகள் கோக்களின் சம்பந்திகளால் கட்டுப் பட்டிருக்கின்றன. அத்தகைய இப் பிதிர்க்களின் பாணங்கள், எப் போரிடுவோர்கள் முதலில் களிப்போடு சைன்யத்திற்கெதிரே போய் பிறகு புறங் காட்டி ஓடுகின்றார்களோ, அவ்விடத்தில், பிதிர்க்களாற் செலுத்தப்பட்டுப் போய் விழுகின்றன. அப்படி விழுகின்ற அம்புகள் எமக்குச் சுகத்தை யளிக்குக என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மூன்று மந்திரங்களாலும், பிதிரு தேவதைகளைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

பத்தாவது விநியோகம்.

**தன்னைத் தொட்டுக் கொள்ளல்**

மந்திரம்:

**ऋजीते परिवृङ्धिनोऽश्मा भवतु नस्तनूः। सोमो अधिब्रवीतुनोऽदितिश्शर्म यच्छतु।**

உரை.

அம்புகளே! நீங்கள், நாற்புறமும் எம்மை விட்டுவிடுவீர்களாக. எம்முடைய உடம்பு கல்லைப்போலாகுக. சோமமானது, எம்மை, 'இவர்கள் பெருமையுடையவர்' என்று கூறுக. அதிதி, சுகத்தை யளிப்பாளாக என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்தால், தன்னைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

பிறகு, கையால் தண்ணீரையுந் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

பதினோராவது விநியோகம்.

குதிரைச் சவுக்கை யெடுத்தல்

மந்திரம் :

**आजङ्घन्ति सान्वेषां जघनाँ उपजिघ्नते । अश्वाजनि प्रचेतसोऽश्वान्त्समत्सु चोदय ।**

உரை.

குதிரை யோட்டுஞ் சாட்டையைக் கையில் வைத்திருக்கின்ற தேர்ப்பாகர்கள், குதிரைகளின் தொடைகளில் சவுக்கால் அடிக்கின்றார்கள். பின்புறத்தின் மேல் அடிக்கின்றார்கள். இவ்வாறு அடித்து, குதிரைகளைச் செலுத்துவதற்குக் காரணமாகிய சாட்டையே! குதிரைகளை, அடிகளால் வேகமாய் ஓடுவதில் மனமுடையவைகளாகச் செய்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், குதிரை ஓட்டும் சவுக்கை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

பன்னிரண்டாவது விநியோகம்.

கைகளைப் போற்றுதல்

மந்திரம் :

**अहिरिव भोगैः पर्येति बाहुं ज्याया हेतिं परिबाधमानः । हस्तघ्नो विश्वा वयुनानि विद्वान्पुमान्पुमाँसं परिपातु विश्वतः ।**

உரை

வில்லாளிகளின் இடது கை, பாம்பானது, ஒருவனுடைய கையை, அல்லது, காலைச் சுற்றிக்கொள்வதுபோல், ஒருவகைத் தோலாற் சுற்றப்பட்டிருக்கின்றது. அத்தகைய தோலானது, வில்லாலடிப்போர்களுடைய கைகளை இழுத்து விடப்பட்ட நாண்கயிறு புண்படுத்தாமற் பாதுகாத்துக் கொள்கின்றது. இவ்வாறு கையிலிருந்து அடிபடும் தோலானது, எம்மை, எல்லா நெறிகளையுமுணர்ந்த அறிவாளி பிறரைக் காப்பாற்றுவது போற் காப்பாற்றுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கைகளைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

பதின்மூன்றாவது விநியோகம்

இரதத்தைத் தொட்டுப் போற்றுவதில்

முதல் மந்திரம்

**वनस्पते वीड्वङ्गो हि भूया अस्मत्सखा प्रतरणः सुवीरः । गोभिस्सन्नद्धो असि वीडयस्वाऽऽस्थाता ते जयतु जेत्वानि ।**

உரை.

எம்மிடத்தில், நண்பன்போற் சிநேக முடையதும்; சிறப்புடைய போக்கிற்குச் சாதனமும், அழகிய காலாட் படைகளாற் சூழப் பெற்றதுமாகிய தேரே! நீ, உறுதிப்பாடுடைய அங்கங்களால் ஆக்கப்பெற்றுள்ளாய். பசுமாட்டின்தோலால் நன்கு கட்டப்பெற்றிருக்கின்றாய். அத்தகைய உனது உறுதிப்பாடு, வெல்லத்தக்க பிறருடைய சைன்யங்களை வெல்வதாகுக என்பது,

---

இரண்டாம் மந்திரம்

**दिवः पृथिव्याः पर्योज उद्भृतं वनस्पतिभ्यः पर्याभृतꣳ सहः । अपामो-ज्मानं परिगोभिरावृतमिन्द्रस्य वज्रꣳ हविषा रथं यज ।**

உரை.

வெள்வித்தலைவ! நீ, நிலத்தால் தாங்கப் பெற்றதும், வானின் வன்மையால் கேடப் பெற்றதும், வனத்திலுள்ள மரங்களாற் செய்யப்பட்டதும், நீரின் வன்மையால் முடிக்கப்பட்டதும், கோக்களின் நரம்புகளால் வச்சிரம் போல் உறுதியாகக் கட்டப்பட்டதுமாகிய தேரை, பலி கொடுக்குங் கிரியையாற் சேவிப்பாயாக என்பது

---

மூன்றும் மந்திரம்

**इन्द्रस्य वज्रो मरुतामनीकं मित्रस्य गर्भो वरुणस्य नाभिः । सेमान्नो हव्यदातिञ्जुषाणो देवरथ प्रतिहव्या गृभाय ।**

உரை.

இந்திரனுடைய வச்சிராயுதத்தைப் போன்று வன்மை மிக்கதும், மருத்துக்களின் சைன்யத்தைப் போல் அநேகம் காலாட்படைகளுடன் கூடியதும், மித்திரனுடைய கர்ப்பத்தைப்போல் பாதுகாப்புடையதும், வருணனுடைய நாபியைப் போல் ஒருவராலுந் தாழ்த்தப்படாததுமாகிய தேவ விமானமே! (தேரே!) நீ, எம்முடைய அவிர்ப்பாகத்தை ஏற்றுக்கொள்வதாயிருந்து தனித்தனியே எமது அவிகளை யேற்று உண்பாயாக என்பது.

---

நான்காம் மந்திரம்.

பெரும்பறை வாத்தியத்தைப் புகழ்தல்

**उपश्वासय पृथिवीमुतद्यां पुरुत्राते मनुतां विष्ठितञ्जगत् । सदुन्दुभे सजूरिन्द्रेण देवैर्दूराद्दवीयो अपसेध शत्रून् ।**

### உரை.

'துந்துபி' என்னும் பெரும் பறை வாத்தியமே! நீ, உனது ஒலியால் பூமியைச் சூழ்ந்து கொள்வாயாக. விண்ணுலகையுஞ் சூழ்ந்து கொள்வாயாக, மூன்றுலகத்திலுள்ளவர்களும் உனது பேரொலியைக் கேட்பார்களாக. அத்தகைய ஒலியே! நீ, இந்திரனோடும், ஏனைய தேவர்களோடும் ஒத்த அன்புடையனுயிருந்து எமது பகைவர்களை, மிகத் தூரத்திற் கொண்டு போய் எறிந்து விடுவாயாக என்பது.

ஈண்டு, இடையில் வாத்தியத்தைப் புகழ்ந்தது, தேருக்கருகிலுள்ள வாத்தியம் இத்தகைய சிறப்புடையாதாமெனில், தேரின் பெருமையைச் சொல்வதும் எளிதோ? என்னுங் கருத்துக்கொண்டது.

---

### ஐந்தாம் மந்திரம்.

இதுவுமது

आक्रन्दय बलमोजोन आधामिष्टनिहिदुरिता बाधमानः । अप प्रोथदुन्दुभे दुच्छुनाᳩ इत इन्द्रस्य मुष्टिरसि वीडयस्व ।

### உரை

பெரும்பறை வாத்தியமே! நீ, பிறருடைய சைன்யத்தில், இவனைக் கொல்க, இவனை அடிக்குக என்பது முதலிய ஆக்குரோசமாகிய ஒலியைச் செய்வாயாக. எமக்கு வன்மையைக் கொடுப்பாயாக. எம்மைப் பீடிக்கும் எமது பாவத்தைப் போக்கி எமக்கு உற்சாகமளிக்கும் ஒலியைச் செய்வாயாக. தீய மனமுடையவர்களை வெளிக் கிளப்புவாயாக. நீ, இந்திரனுடைய வச்சிரத்தைப் பிடிக்கும் கைப்பிடியாக இருக்கின்றாய். ஆதலின் வலிப்படுவாயாக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இவ்வைந்து மந்திரங்களாலும் தேரைத் தொட்டுப் போற்றல் வேண்டுமென்பதாம்.

துந்துபி ஒலியைம் புகழ்ந்தது, இத்தகைய பெரும் பறைப் பேரொலிகளுடன் கூட தேர் செல்லுகின்றது என்பது கருத்து.

---

### பதினைன்காவது விநியோகம்.

துந்துபி என்னும் பறையை அடித்தல்.

மந்திரம் :

**आऽमूरजप्रत्यावर्तयेमाः केतुमद्दुन्दुभिर्वावदीति । समश्वपर्णाश्चरन्ति**

**नो नरोऽस्माकमिन्द्ररथिनो जयन्तु ॥**

உரை.

*இந்திர! பகைவராகிய பிறருடைய சேனைகளைப் புறங்காட்டி ஓடும்படி செய்வாயாக. எமது சேனைகளை முன்னேறும்படி செய்வாயாக. துந்துபி என்னும் இவ் வாத்தியம், அறிவுடையதாய் எமது வெற்றியை உலகத்தார் அறியும்படி ஒலி செய்க. குதிரை மீதேறியுள்ள எமது படை வீரர்கள் பரந்து திரிவார்களாக, எமது தேருடையார்கட்கு வெற்றியுண்டாகுக என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், துந்துபி என்னும் பெரும் பறையை அடித்தல் வேண்டுமென்பதாம்.*

பதினைந்தாவது அநுவாகம் முடிந்தது.

---

### பதினாறவது அநுவாக முதல் மேல்வரும் மூன்று அநுவாகங்களின் விடயச் சுருக்கம்.

**पञ्चत्रिंशद्यदक्रन्दोऽनुवाकेषु त्रिषु श्रुताः ।**

**अश्वस्तोमीय होमास्तै रिति षष्ठः समीरितः ॥ १ ॥**

*மூன்று அநுவாகங்களில் அசுவஸ்தோமீயம் என்னும் முப்பத்தாறு ஹோமங்கள் சொல்லப்படுகின்றது என்பது.*

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பதினாறவது அநுவாகம்.

நான்கு பஞ்சாதிசீது மேல் முப்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

ஓமங்களைக் கூறு மந்திரங்கள்.

**यदक्रन्दः प्रथमञ्जायमान उद्यन्त्समुद्रादुतवा पुरीषात् । श्येनस्य**

**पक्षा हरिणस्य बाहू उपस्तुत्यं महि जातन्ते अर्वन् । यमेन दत्त-**

न्वित एनमायुनगिन्द्र एणं प्रथमो अध्यतिष्ठत् । गन्धर्वो अस्य रश-
नाम गृभ्णात्सूरादश्वं वसवो निरतष्ट । असि यमो अस्यादित्यो अर्व-
न्नसि त्रितो गुह्येन व्रतेन । असि सोमेन समया विपृक्तः ॥ १ ॥
आहुस्ते त्रीणि दिवि बन्धनानि । त्रीणित आहुर्दिवि बन्धनानि
त्रीण्यप्सु त्रीण्यन्तस्समुद्रे । उतेवमे वरुणश्छन्त्स्यर्वन् यत्राँत आहुः
परमञ्जनित्रम् । इमाते वाजिन्नवमार्जनानीमाशफानाꣳ सनितुर्नि-
धाना । अत्राते भद्रारशना अपश्य मृतस्यया अभिरक्षन्ति गोपाः ।
आत्मानन्ते मनसाऽऽरादजानामवो दिवा ॥ २ ॥ पतयन्तं पतङ्गम् ।
शिरो अपश्यं पथिभिस्सुगेभिररेणुभिर्जेहमानं पतत्रि । अत्राते रूप-
मुत्तम मपश्यं जिगीषमाणमिष आपदेगोः । यदाते मर्तो अनुभोगमा-
नडादिद्ग्रसिष्ठ ओषधीरजीगः । अनुत्वारथो अनुमर्यो अर्वन्ननुगावो-
ऽनुभगः कनीनाम् । अनुव्राता स स्तवसख्यमीयुरनुदेवाममिरे
वीर्यम् ॥ ३ ॥ ते । हिरण्यशृङ्गोऽयो अस्य पादा मनोजवा अवर
इन्द्र आसीत् । देवा इदस्य हविरद्यमायन् यो अर्वन्तं प्रथमो अध्य-
तिष्ठत् । ईर्मान्तासस्सिलिकमध्यमासस्सꣳ शूरणासो दिव्यासो
अत्याः । हꣳसा इव श्रेणिशो यतन्ते यदाक्षिषुर्दिव्यमज्ममश्वाः ।
तव शरीरं पतयिष्ण्वर्वन्तव चित्तं वात इवध्रजीमान् । तव शृङ्गाणि
विष्ठिता पुरुत्राऽरण्येषु जर्भुराणा चरन्ति । उप ॥ ४ ॥ प्रागाच्छ
सनं वाज्यर्वा देवद्रीचा मनसा दीध्यानः । अजः पुरोनीयते नाभि-
रस्यानुपश्चात्कवयो यन्ति रेभाः । उपप्रागात्परमं यत्सधस्थमर्वाꣳ

अच्छा पितरं मातरञ्च । अथा देवाञ्जुष्टतमो हि गम्या अथाशास्ते दाशुषे वार्याणि ॥ ५ ॥

பதினைந்தாம் அநுவாகத்தில், கவசமணிதல் முதலியன கூறப்பட்டன. இப்பதினாறும் அநுவாக முதலான மூன்று அநுவாகங்களாலும் ஹோமங்கள் கூறப்படுகின்றன.

### முதல் இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**यदक्रन्दः प्रथमञ्जायमान उद्यन्त्समुद्रादुतवा पुरीषात् । श्येनस्य पक्षा हरिणस्य बाहू उपस्तुत्यं महि जातन्ते अर्वन् ।**

**உரை.**

குதிரையே! நீ, பிறந்தவுடனே, 'நான் அக்கினி முதலியவைகட்குச் சாதனம்' என்று பேரொலி செய்கின்றாய். ஆதலின், கடலை யுபலக்கணமாகக் கொண்ட நீரிலும், அல்லது, வன்மை மிக்க பெரிய குதிரையிலு மிருந்து பிறந்தனை. அத்தகைய பிறப்பு, பருந்தின் சிறகுகளைப் போலும், மானின் கால்களைப் போலும் போற்றத்தக்கதாம் என்பது. ஈண்டு, 'அப்ஸு யோநிர்வா அஸ்வ:' என்பது பிறசுருதியாம்.

**சாயணபாடியக் கருத்து.**

இம் மந்திரத்தால் முதலாவது ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

### இரண்டாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**यमेन दत्तं त्रित एनमायुनगिन्द्र एणं प्रथमो अध्यतिष्ठत् । गन्धर्वो अस्य रशनामगृभ्णात्सूरादश्वं वसवो निरतष्ट ।**

**உரை.**

அக்கினியாற் கொடுக்கப் பெற்ற இக்குதிரை, வாயுவினாற் சேர்க்கப்பட்டது. ஆதலின், தேவர்களுக்குட் சிறந்த இந்திரன், இக்குதிரையின் யோகக்ஷேமங்களைத் தேடுவதற்கு அபிமானம் வைத்தனன். ஒரு கந்தருவன் இக்குதிரை கட்டுங் கயிற்றைப் பிடித்தனன். வசுக்களே! நீவிர் சூரியனிடத்திலிருந்து நன்கு வெளியாக்கினீர்கள். இவ்வாறு, அக்கினி கொண்டு வரவும், இந்திரன் அபிமானிக்கவும், கந்தருவன் கயிற்றைப் பிடிக்கவும் இரவியின் ஒளியால் வசுக்கள் விளக்கவும் பெற்ற இக்குதிரை போற்றத்தக்கது என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் இரண்டாவது ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

### மூன்றாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம் :

**असियमो अस्यादित्यो अर्वन्नसि त्रितो गुह्येन व्रतेन। असि सोमेन समया विपृक्त आहुस्ते त्रीणि दिवि बन्धनानि ।**

### உரை.

குதிரையே! நீ, அக்கினியாகவும், வாயுவாகவும், ஆதித்தனாகவு மிருக்கின்றாய். இவைகளால் அநுக்கிரகம் பெற்றமையின் உனக்கு இவ்வடிவமாம். மற்றும், அசுவமேத யாக கருமத்தால், அதிலுள்ள சோமத்துடன் தருணங் கிடைத்தபோது சேர்ந்து கொண்டிருக்கின்றாய். இத்தகைய வுனக்கு மூன்று கட்டுகள் உண்டென்று பெரியார் கூறுகின்றனர். அவை, வணிகன், விற்பதற்கு குதிரையை வேறு கிராமத்திற்குக் கொண்டு போய் இடப்புறம் வலப்புறம் இருக்கின்றோர்கள் பார்ப்பதற்கு இடது காலிலும் வலது காலிலும், ஓடாமலிருப்பதற்கு கழுத்திலும், கட்டி இழுத்துக் காட்டுவன் என்பன. அல்லது, சாத்திரங்களிலுள்ள யாதாகினும் மூன்று காரணங்கள் யூகித்துக் கொள்ளற்பாலன என்பது.

இதனால், குதிரை மிகுந்த வன்மை யுடையது என்பது பெற்றாம்.

### சாயணபாடிக் கருத்து.

இம், மந்திரத்தால், மூன்றாவது ஹோமத்தைக் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

### நான்காவது இருக்கு மந்திர ஹோமம்.

மந்திரம் :

**त्रीणित आहुर्दिवि बन्धनानि त्रीण्यप्सु त्रीण्यन्तस्समुद्रे । उतेवमे वरुणश्छन्त्स्यर्वन्यत्राऽत आहुः परमं जनित्रम् ।**

### உரை.

உச்சசிரவமென்னும் உனக்கு விண்ணுலகில் மூன்று கட்டுகள் உண்டென்று பெரியார் கூறுவது போலவே, கடலுக்குள் (நீருக்குள்) ளும் மூன்று கட்டுகள் உள்ளன. அவை, வாசபேய யாகத்தில், குதிரையை நீராட்டி வைக்கும்போதும் முன்போல் கட்டும் மூன்று கட்டுகளாகின்றன. இதையே,

கடலின் நடுவிலுள்ள வடவானலத்தின் கட்டென்று பெரியார் கூறுகின்றனர். மற்றும், உனது பிதாவினின்றும் பிறப்பாந் தன்மைபற்றியும், தாய்க் குதிரை சிறியதாயிருப்பினும், குதிரைக் குட்டி பெரியதாயிருக்கின், இது பெரிய குதிரைக்குப் பிறந்தது என்று கொள்ளவுங் கூடும். இது, பிதாவின் வீரியமாகிய நீ வருணனுடைய மூன்று கட்டுகளினின்றும் விடுபட்டு எமக்குக் கூறுவது போன்றிருக்கின்றது என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், நான்காவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

### ஐந்தாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**इमाते वाजिन्नवमार्जनानीमाशफाना॑ँ सनितुर्निधाना । अत्राते भद्रारशना अपश्य मृतस्यया अभिरक्षन्ति गोपाः ।**

### உரை.

குதிரையே! உன்னுடைய உடம்பிலுள்ள தூசுகள் போவதற்குத் தேய்க்கவும், கொளும்பு தேயாதிருக்கும்படி தைக்கவும் உள்ள இந்த லாடம் முதலியவைகள் இரும்புமயமானவைகள். மற்றும், உன்னுடைய கழுத்தில் விலையுயர்ந்த பொன்னிழைத்த கயிறும், முதுகில் உட்காருகின்றவர்கள் விழாமற் பாதுகாக்கும் பொன்னிழைத்த கயிறுங் காணப்படுகின்றன என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் ஐந்தாவது ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

### ஆறுவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**आत्मानन्ते मनसाऽऽरादजाना मवोदिवा पतयन्तं पतङ्गम् । शिरो अपश्यं पथिभिस्सुगेभिररेणुभिर्जेंहमानं पतत्रि ।**

### உரை.

குதிரையே! நீ மிக விரைவாய் ஓடும்போது உனது காலடி பூமியில் வைத்தல் கண்களுக்குப் புலப்படாமையின் ஆகாயத்தில் ஓடுகின்ற உனது பாதுகாப்புவடிவை மனத்தாலுணர்கின்றேன். இங்கு, மிக விரைவாய் ஓடுகின்ற குதிரை, பிறருடைய சைன்யத்தை வாட்டி விட்டு தலைவனைப் பாதுகாக்கின்றதென்பது கருத்து. இவ்வாறு மிக விரைவாய் ஓடுகின்றமையின் பறவைக்

கொப்பானது. தூசு படியாமல் வானில் வெகு விரைவாய் ஓடுகின்ற உனது தலையையும் பார்த்திலன். இக் குதிரை பெரும்பாலும் பூமியிற்படாமல் வானில் ஓடுதலின், தூசு படியாததாலும், தலை நிமிர்ந்து மேலே யிருத்தலாலும், நல்ல வழியிற் செல்லும். இக் குதிரையின் தலையைப் பார்த்தலும் அரிதாம். இவ் வாறு மிக வேகமாய்ச் செல்வதென்று குதிரை துதிக்கப் பெற்றமை காண்க.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆறுவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

—oo✻oo—

## ஏழாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**अत्राते रूपमुत्तममपश्यञ्जिगीषमाण मिष आपदेगोः। यदाते मर्तो अनुभोगमानडादिद् ग्रसिष्ठ ओषधीर जीगः।**

### உரை.

குதிரையே! நெய் பயறு முதலான உன்னுடைய உணவுப் பொருளைப் பின் பற்றிக்கொண்டு, உனக்கு ஏவற் செய்கின்றவர்களும் பிழைக்கின்றார்கள். இத்தகைய விருத்தாந்தத்திற்கு பிறகே, கடலை கொள்ளு முதலானவைகளை அடைந்திருக்கின்றனை. பலவகை உணவுப் பொருள்களை காலால் எற்றி விடுகின்றவனாகிய உன்னுடைய வெற்றி விருப்பத்துடன் கூடியவை யாதலின் மிகச் சிறந்ததென்று யான் உணர்ந்து கொண்டேன் என்பது.

ஈண்டு, பேரரசன் வீட்டில், உன்னுடைய உணவைப் பின்பற்றிக்கொண்டு குதிரை பிடிக்கின்றவர்களும் பிழைக்கின்றார்கள் என்பது வெளிப்படை. நீயும், ஓடும்போது, ஒருவராலுந் தடுக்க முடியாமல் பயத்தங் கொல்லை முதலானவைகளில் ஓடுகின்றனை; அப்போது உன்வாயிலாக எல்லா உணவுப் பொருள்களும் கிடைக்கக் கூடும். வெற்றியுங் கிடைக்கும். இவ்வாறு உனது பெருமையை உறுதியா யுணர்ந்து கொண்டிருக்கின்றேன் என்பது பொருள்.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், ஏழாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

—

## எட்டாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**अनुत्वा रथो अनुमर्यो अर्वन्ननुगावोऽनुभगः कनीनाम्। अनुव्रातासस्तव सख्यमीयुरनुदेवाममिरे वीर्यन्ते।**

**உரை.**

குதிரையே! உன்னையன்றித் தேர் ஓடாது, வேறுவகையால் தேரைச் செலுத்தவும் முடியாது. குதிரைக்காரன் உன்னாலே பிழைக்கின்றான். கோக்களும், நீ குட்டியாயிருக்கும்போது உனக்கு பால் வெண்ணெய்களின் பொருட்டும், பெரிதானவுடன் உனக்கு நெய்யின் பொருட்டும் வளர்க்கப்படுகின்றன, சிறிய பெண்களின் சௌபாக்கியமும் உன்னைப் பற்றிக் கொண்டிருக்கின்றன. அதாவது குதிரைச் சாலையின் வழிபாட்டின் பொருட்டு அப் பெண்கள் உணவு ஆடை கொடுத்தலால் உனது தலைவனைப் பரிபாலிக்கின்றார்கள். சேனைகளும், உனது உதவியைப் பெற்று வெற்றி பெறுகின்றது. பிரசாபதி முதலான தேவர்கள் உனது வன்மையை யுணர்ந்து உன்னை அவியாக ஏற்றுக் கொள்கின்றனர் என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்தால் எட்டாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாவது இருக்குமந்திர ஹோமம்

**மந்திரம் :**

**हिरण्य शृङ्गोऽयो अस्य पादामनोजवा अवर इन्द्र आसीत् । देवाइदस्यह
विरद्यमायन्यो अर्वन्तं प्रथमो अध्यतिष्ठत् ।**

உரை.

இக் குதிரை, பொன் போன்ற தலையுடையது. இரும்பு போல் உறுதியானது. இதனுடைய கால்கள் மனதின் விருத்தி போன்று வேகமுடையன. இதனால் உச்சச்சிரவ மென்னும் குதிரை யின்றேல் இந்திரனுங் கூட தாழ்ந்த நிலையை யுடையவனாகுவன் என்பது பெறப்பட்டது. எல்லாத் தேவர்களும் இதனுடைய அவி யுணவே அருந்துவதற்குத் தக்கதென்று உறுதி யடைந்தனர். பிரசாபதியும் முதலில் குதிரையையே தனதாக எண்ணிக் கொண்டனன். அத்தகைய பிரசாபதியும், குதிரையின் அவியே உண்ணத்தக்கது என்று உறுதி கொண்டனன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் ஒன்பதாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

பத்தாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம் :

**ईर्मान्तासस्सिलिक मध्यमासस्सं शूरणासो दिव्यासो अत्याः । हंसा
इव श्रेणिशो यतन्ते यदाक्षिषुर्दिव्यमज्ममश्वाः ।**

**உரை**

குதிரைகள், பிடரியும் தலையும் உயரமுடையவைகளும், நடுமுதுகு தாழ்ந்த வைகளும், போரில் சூரத் தன்மை யுடையவைகளும், கிராமங்கட்குச் செல்லு தல் முதலான செயல்களை யுண்டாக்குகின்றவைகளும், எப்போது நடந்து கொண்டே யிருக்கின்றவைகளும், அன்னப்பறவைபோல், கூட்டமாக போரில் முயல்கின்றவைகளும், திவ்ய முடையவைகளும், நாற்புறமுஞ் செல்கின்றவை களுமாகின்றன. ஆதலின் எடுத்துக்கொண்ட அசுவமேத யாகத்தை யுண் டாக்கினது என்பதில் என் சொல்ல வேண்டும் என்பது?

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்தால், பத்தாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்ப தாம்.

---

**பதினோராவது இருக்கு மந்திர ஹோமம்**

**மந்திரம் :**

**नवशरीरं पतयिष्णवर्वन्तव चित्तं वातइव ध्रजीमान् । तव शृङ्गाणि विष्ठिता पुरुत्राऽरण्येषुजर्भुराणा चरन्ति ।**

**உரை.**

குதிரையே! உனது உடம்பு வேகமாய் ஓடுஞ் சீலமுடையது. உனது மனம் வேகமிக்குள்ள காற்றைப் போன்றது. உன்மேல் போடப் பெற்ற கொம்புகள் போன்ற அம்பு, கத்தி முதலானவைகள், மிகுந்த வனப் பிரதே சங்களிலும், மிகுந்த கிராமப் பிரதேசங்களிலும் பிற சைன்யத்திலும் அதிசய மாகப் போரிற் செல்லுகின்றன என்பது.

**சாயணபாடியக் கருத்து**

இம் மந்திரத்தால் பதினோராவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

**பன்னிரண்டாவது இருக்கு மந்திர ஹோமம்**

**மந்திரம் :**

**उपप्रागाच्छसनं वाज्यर्वा देवद्रीचा मनसा दीध्यानाः । अजः पुरोनीयते नाभिरस्यानुपश्चात्कवयो यन्ति रेभाः ।**

**உரை.**

வேள்வி வாயிலாக அன்னத்திற்குக் காரணமாகிய இக்குதிரை, தேவர் களை எண்ணும் மனத்துடன் இவ் வேள்வியிடத்தை அணுகியது. முன்னர்ச் செல்கின்ற பிரசாபதியை, வேள்விச் செயலாளர்கள் தியானிக்கின்றார்கள்.

அல்லது, ஆட்டுக்கடா, முன்னர்க் கொண்டு போகப்படுகின்றது. குதிரையின் மேனியால் உபலக்ஷிதமாக யுணரப்பெற்ற பிரசாபதியாகிய குதிரை, பின்னர்க் கொண்டு போகப்படுகின்றது. குதிரைக்குப் பின்னர், வித்துவான்களான இருத்துவிக்குக்கள் துதித்துக்கொண்டு செல்கின்றூர்கள் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பன்னிரண்டாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

### பதின்மூன்றுவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**उपप्रागात्परमं यत्सधस्थमर्वाँ अच्छा पितरं मातरञ्च । अद्यादेवाञ्जुष्ट-
तमोहि गम्या अथाऽऽशास्ते दाशुषे वार्याणि ।**

### உரை.

விரைவிலோடும் இக் குதிரை, கொல்வோருடன் கூடியிருக்கத் தக்கதோரிடத்தை யடைவதற்கு அருகில் வந்து விட்டது. ஏனெனில்? தெய்வத் தன்மையடைந்துள்ள மாதாப் பிதாக்களை யடைதற் பொருட்டென்க. இனி, குதிரையே! நீ, மிகப் பிரியமாய்த் தேவர்களை யடைவாயாக. பிறகு, வேள்வித் தலைவனுக்கு வேண்டிய வரங்களை இந்த இருத்துவிக்குக்கள் வேண்டிக் கொள்வார்கள் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதின்மூன்றுவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

பதினுறுவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பதினேழாவது அநுவாகம்.

நான்கு பஞ்சாதிக்கு மேல் ஏழு பதங்களைக் கொண்டது

---

### எஞ்சிய ஹோமங்களைக் கூறும் மந்திரங்கள்

**मा नो मित्रो वरुणो अर्यमाऽऽयुरिन्द्र ऋभुक्षा मरुतः परिख्यन् ।
यद्वाजिनो देवजातस्य सप्तेः प्रवक्ष्यामो विदथे वीर्याणि । यन्निर्णि-**

जारिर्कर्णसा प्रावृतस्य रातिं गृभीतां मुखतोनयन्ति । सुप्राङजोमेम्य-द्विश्वरूप इन्द्रा पूष्णोः प्रियमप्येति पाथः । एषच्छागः पुरो अश्वेन वाजिना पूष्णो भागो नीयते विश्वदेव्यः । अभिप्रियं यत्पुरोडाश-मर्वतात्वष्टेत् ॥ १ ॥ एन२ सौश्रव सायजिन्वति । यद्धविष्यमृतुशो देवयानन्त्रिर्मानुषाः पर्यश्वन्नयन्ति । अत्रा पूष्णः प्रथमो भाग एति यज्ञन्देवेभ्यः प्रतिवेदयन्नजः । होताऽध्वर्युरावया अग्निमिन्धो ग्राव-ग्राभ उतशश्स्तासु विप्रः । तेन यज्ञेन स्वरंकृतेन स्विष्टेन वक्षणा आपृणध्वम् । यूपव्रस्का उतये यूपवाहाश्चषालं ये अश्वयूपाय तक्षति । ये चार्वते पचनश्र सम्भरन्त्युतो ॥ २ ॥ तेषामभिगूर्तिर्न इन्वतु । उपप्रागात्सुमन्मेऽधायि मन्मदेवाना माशा उपवीत पृष्ठः । अन्वेनं विप्रा ऋषयो मदन्ति देवानां पुष्टेचकृमा सुबन्धुम् । यद्वाजिनो-दाम सन्दानमर्वतोयाशीर्षण्या रशना रज्जुरस्य । यद्वाघास्य प्रभृत-मास्ये तृणश्र सर्वाताते अपि देवेष्वस्तु । यदश्वस्य क्रविषः ॥ ३ ॥ मक्षिकाऽऽशयद्वास्वरौ स्वधितौरिप्रमस्ति । यद्धस्तयोश्शमितुर्यन्नखेषु सर्वाताते अपि देवेष्वस्तु । यदूवध्यमुदरस्यापवाति य आमस्य क्रविषो गन्धो अस्ति । सुकृता तच्छमितारः कृण्वन्तूत मेधश्र शृत-पाकं पचन्तु । यत्ते गात्रादग्निना पच्यमानादभिशूलन्निहतस्यावधा-वति । मातद्भूम्या माश्रिषन्मातृणेषु देवेभ्यस्तदुशद्भ्योरातमस्तु ॥

*பதினாறாவது அநுவாகத்தில் அசுவஸ்தோமீய மந்திரங்கள் கூறப்பட்டன. அதாவது அசுவத் தோத்திரத்தைக் கூறுந் துதித் தொகுதிகள் கூறி முடிந்தன. இப் பதினேழா மநுவாகத்திலும் அவைகளுட் சில கூறப்படுகின்றன. அநுவாக வேறுபாடு, வேள்வியலாதவைகளில் சம்பிரதாயமாக*

ஹோமங்கள்)

ஏற்பட்டதாம். அல்லது, மந்திரங்களின் பொருள் வேறுபாட்டைப் பற்றிய தாம் என்க.

---

## பதினைந்காவது இருக்கு மந்திர ஹோமம்.

மந்திரம் :

**मानो मित्रो वरुणो अर्यमाऽऽयुरिन्द्र ऋभुक्षा मरुतः परिख्यन् । यद्वाजिनो देवजातस्यसप्तेः प्रवक्ष्यामो विदथे वीर्याणि ।**

### உரை.

மித்திரன், வருணன், அர்யமன், ஆயுள், இந்திரன், பிரசாபதி, மருத்துக்கள் என்னுமித் தேவர்கள், இந்த அசுவமேத யாகத்தின் வாயிலாக, அன்னத்தின் சாதனமும், தேவதையிலிருந்து உண்டாகியதும், தேவதைகளின் பொருட்டாகவே தோன்றியதுமாகிய குதிரையின் ஆற்றல்களை எடுத்து விரித்துரைக்கின்றேன், ஆதலின் எம்மைப் பழிக்கமாட்டார்கள். பழிப்பு இதில் பொருந்தாமையின் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதினைந்காவது ஹோமத்தைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

## பதினாறாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம் :

**यन्निर्णिजारेक्णसा प्रावृतस्य रातिं गृभीतां मुखतो नयन्ति । सुप्राङजो मेम्यद्विश्वरूप इन्द्रा पूष्णोः प्रियमप्येति पाथः ।**

### உரை.

புரோட்சித்துப் புனிதமாக்கிய, பொன், வெள்ளி முதலிய தனத்தால் நிறையப் பூட்டப்புள்ள குதிரையின் சம்பந்தமாகிய அவியை இருத்துவிக்குக்கள் தேடும்போது, குதிரைக்கு முன் செல்லுகின்ற ஆட்டுக்கடா, பல்வகை வடிவுகளாய் இந்திரன் பூஷா முதலிய தேவர்கட்குப் பிரியமாகிய அவிவடிவத்தை யடைகின்றது என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதினாறாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

பதினாறாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்:

**एषच्छागः पुरो अश्वेन वाजिना पूष्णो भागो नीयते विश्वदेव्यः। अभि-
प्रियं यत्पुरोडाशमर्वता त्वष्टेदेनँ सौश्रवसाय जिन्वति।**

உரை.

பூஷா தேவதையின் பாகமானதும், விசுவ தேவர்கட்கு இனியதும், புரோடாசத்தைப் போன்று இன்சுவை மலிந்ததும், யாவர்கட்கும் பிரியமுமாகிய நல்ல அன்னமாக்குதற் பொருட்டு இவ் வாட்டுக்கடா குதிரையுடன் முன்னர்க் கொண்டுபோகப்படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதினாறாவது ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினேழாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்:

**यद्धविष्यमृतुशो देवयानन्त्रिर्मानुषाः पर्यश्वन्नयन्ति। अत्रा पूष्णः प्रथमो
भाग एति यज्ञन्देवेभ्यः प्रतिवेदयन्नजः।**

உரை.

அவிக்கு உரியதும், வேள்விகளில் தேவர்களை யடைவதுமாகிய குதிரையை, வேள்விச் செயலாளர்கள் மும்முறை வலமாகச் சுற்றச் செய்கின்றார்கள். அவ்விடத்தில், பூஷாவின் பாகமாகிய ஆட்டுக்கடா, 'தேவர்காள்! வேள்வி தொடங்கப்பட்டது' என்று தேவர்கட்கு அறிவித்துக்கொண்டு முன்னே செல்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதினேழாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினெட்டாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்:

**होताऽध्वर्युरावया अग्निमिन्धो ग्रावग्राभ उत शँस्ता सुविप्रः। तेन यज्ञेन
स्वरंकृतेन स्विष्टेन वक्षणा आपृणध्वम्।**

### உரை.

இருக்கோதுவோன், விரைவாக அங்குமிங்கும் ஓடி நடக்கத்தக்க வேட்போன், அக்கினியை வைத்திருக்கும் ஆக்னீத்ரன், க்ராவாஸ்துத் (கல்லைத் துதிப்பவன்) பிரசாஸ்தா, பிரஸ்தோதா, என்னும் இவ் வெல்லோரும், விரும்பிய எல்லாப்பொருள்களானும் அநுட்டிக்கின்ற அசுவமேத யாகத்தில் பயன்றரும் நெய்யை நிறையச் செய்வார்களாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதினெட்டாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## பத்தோன்பதாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**यूपव्रस्का उत ये यूपवाहाश्चषालं ये अश्वयूपाय तक्षति । ये चार्वते पचनं॑ सम्भरन्त्युतो तेषामभिगूर्तिर्न इन्वतु ।**

### உரை.

வேள்வியின் பொருட்டு யூபத்தை வெட்டுகின்றவர்களும், யூபமாகுங் குறிகளையுடைய யூபங்களை வேள்வியில் ஏற்றுக்கொண்டு நிற்கின்றவர்களும், குதிரையின் யூபத்தின் பொருட்டு சஷாலம் என்னும் வளையத்தைச் சமற்காரஞ் செய்கின்றவர்களும், யாகஞ் செய்யும் பொருட்டு விறகைத் தேடுகின்றவர்களுமான இவர்கள், நினைக்கின்ற நினைப்பு எம்மைப் பிரியப்படுத்துவதாகுக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பத்தொன்பதாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## இருபதாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**उपप्रागात्सुमन्मेऽधायि मन्मदेवाना माशा उपवीत पृष्ठः । अन्वेनं विप्रा ऋषयो मदन्ति देवानां पुष्टेचकृमा सुबन्धुम् ।**

### உரை.

மிகுந்த களிப்புக்குக் காரணமாகிய பயன், எனக்கு அருகில் கிடைக்கின்றது. எண்ணிய பயனும் தேவர்களால் எனக்குத் தேடப் பெற்றது. அழகிய பின்புறத்தை யுடைய இக் குதிரை, தேவர்கட்கு அவியாகின்றது. அறிவாளி

களான வேள்விச் செயலாளர்கள் இக் குதிரையை நல்ல துதிகளால் களிப் படைவிப்பார்களாக. தேவர்களுடைய புஷ்டியின் பொருட்டு இக் குதிரையை, சுற்றத்தைப்போல் விரும்புவார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபதாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

இருபத்தோராவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்.

**यद्वाजिनोदाम सन्दानमर्वतोया शीर्षण्या रशना रज्जुरस्य । यद्वाघास्य प्रभृतमास्ये तृणँ सर्वाताते अपि देवेष्वस्तु ।**

உரை.

குதிரையின் கழுத்திற் கட்டுங் கயிறும், புறங்காலைக் கட்டுங் கயிறும், தலையிற் கட்டுங் கயிறும், வாயுக்குள் நுழைந்துக் கட்டுங் கயிறும், அல்லது, வாய்க்குள்ளிருக்கும் புல்லும், தேவர்களுக்குள் இருக்குந் தன்மையைப் பெற்ற உன்னுடைய வேள்வித் தலைவனுக்கு உண்டாவதாக. உலகில், எல்லாச் சாதனங்களும் நிறைந்த குதிரையிருப்பது போல் பரவுலகிலும் இருக்குக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்தோராவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

இருபத்திரண்டாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்:

**यदश्वस्य क्रविषो मक्षिकाऽऽशयद्वास्वरौ स्वधितौरिप्तमस्ति । यद्धस्तयोश्शमितुर्यन्नखेषु सर्वाताते अपि देवेष्वस्तु ।**

உரை.

ஈக்கள் தின்றதும், அல்லது, அறுக்குங் கத்தியில் ஒட்டிக் கொண்டிருப்பதும், கொன்று அறுப்போனுடைய கைகளிலும் நகங்களிலும் ஒட்டிக் கொண்டிருப்பதுமாகிய உன்னுடைய எல்லா மாமிசங்களும் தேவர்களுக்குள் ஆகுதி செய்யப் பெற்றதாகுக என்பது.

இது, கட்டுங்கயிறுகளைத் தேவர்கட்குச் சமர்ப்பிக்கதுபோல், மாமிசங்களைத் தேவர்கட்குச் சமர்ப்பிக்கின்றதாம்.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்திரண்டாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டும்.

---

## இருபத்து மூன்றாவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**यदूवध्यमुदरस्यापवाति य आमस्य क्रविषो गन्धो अस्ति । सुकृता तच्छमितारः कृण्वन्तूत मेधꣳ श्रृतपाकं पचन्तु ।**

### உரை.

வயிற்றின் நடுவில், பாதி சீர்ணமாகும்போது வாயுவினால் தீ நாற்றமாக வருவதும், பாகம் பண்ணாத மாமிசத்தின் தீநாற்றமும், குதிரையைக் கொல்லுவோனால் உள்ளவாறு உண்டாக்கப்படுக. மிகவேகுதலும் மிக வேகாமையும் இன்றி வேள்விக்குரியபடி நன்கு மாமிசத்தைப் பக்குவஞ் செய்வார்களாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்து மூன்றாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## இருபத்து நான்காவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**यत्ते गात्रादग्निना पच्यमानादभिशूलं निहतस्यावधावति । मा तद्भूम्या माश्रिषन्मा तृणेषु देवेभ्यस्तदुशद्भ्यो रातमस्तु ।**

### உரை.

குதிரையே! வெந்து கொண்டிருக்கும் உன்னுடைய அவயவங்களிலிருந்து தெறித்துவிழும் மாமிசத்துளியும், கொல்லப்பட்டதின், சூலத்தில் பிடித்துக் கொண்டிருக்கும் அவையவமாமிசமும், பூமியிலும், புல்லிலும் தங்காததாகுக. மற்றது விருப்பமுள்ள தேவர்களின் பொருட்டு அர்ப்பணஞ் செய்ததாகுக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் இருபத்துநான்காவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

பதினேழாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காம் காண்டம் ஏழாம் பிரபாடகம்.

### பதினெட்டாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்கு மேல் ஒன்பது பதங்களைக் கொண்டது.

---

அசுவமேத ஹோமங்கட்குரிய எஞ்சிய மந்திரங்கள்

ये वाजिनं परि पश्यन्ति पक्वं य ईमाहुः सुरभिर्निर्हरेति । ये चार्वतोमाꣳसभिक्षामुपासत उतोतेषामभिगूर्तिर्न इन्वतु । यन्नीक्षणंमाꣳस्पचन्या उखायाया पात्राणि यूष्ण आसेचनानि । ऊष्मण्यापि धाना चरूणामङ्का सूनाः परिभूषन्त्यश्वम् । निक्रमणन्निषदनं विवर्तनंयच्च पड्बीशमर्वतः । यच्चपपौ यच्चवासि ॥ १ ॥ जघास सर्वाता ते अपि देवेष्वस्तु । मात्वाग्नि र्ध्वनयिद्धूमगन्धिर्मोखा भ्राजन्त्यभिपित्तजघ्रिः । इष्टंवीतमभिगूर्तं वषट्कृतं तं देवासः प्रति गृभ्णन्त्यश्वं । यदश्वाय वास उपस्तृणन्त्यधीवासंया हिरण्यान्यस्मै । संदानमर्वन्तं पड्बीशं प्रिया देवेष्वायामयन्ति । यत्तेसा देमहंसा शूकृतस्य पार्ष्ण्यां या धाकशंया ॥ २ ॥ यातुतोद । सुचेवता हविषो अध्वरेषु सर्वातात ब्रह्मणा सूदयामि । चतुस्त्रिꣳशद्वाजिनो देवबन्धोर्वङ्क्रीरश्वस्य स्वधितिः समेति । अच्छिद्रागात्रा वयुना कृणोत परुष्परु रनुघुष्या विशस्त । एकस्त्वष्टुरश्वस्या विशस्ताद्वायंतारांभवत स्तथर्तुः । याते गात्राणा मृतुधा कृणोमिताता पिंडानां प्रजुहोम्यग्नौ । मात्वाऽऽतपत् ॥ ३ ॥ प्रिय आत्मापियं तं मास्वधितिस्तनुव आतिष्ठिपत्ते । मातेगृध्नुरविशस्तातिहाय छिद्रागात्राण्यसिनामि थूकः । नवाउवेतन्म्रियसे नरिष्यसि देवाꣳ इदेषिपथिभिस्सुगेभिः । हरीते

युञ्जापृषंती अभूतामुपांस्थाद्वाजी धुरिरासंभस्य। सुगव्यं न्नोवाजी स्वश्वियं पुꣳसः पुत्राꣳ उतविंश्वापुषꣳ रयिम्। आनागास्त्वन्नो अदिंतिः कृणोतुक्षत्रन्नो अश्वों वनताꣳ हविष्मान् ॥ ४ ॥

பதினேழாவது அநுவாகத்தில் சில அசுவஸ்தோமீய மந்திரங்கள் கூறப்பட்டன. இப் பதினெட்டாவது அநுவாகத்தில் எஞ்சியவைகள் கூறப்படுகின்றன. அநுவாக பேதம் முன்போன்றது.

---

### இருபத்தைந்தாவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்:

ये वाजिनं परिपश्यन्ति पक्कं य ईमाहुः सुरभिर्निर्हरेति। ये चार्वतोमाꣳ समिक्षामुपासतउतोतेषामभिगूर्तिर्नइन्वतु।

#### உரை

பக்குவமாகின்ற குதிரையின் மாமிசத்தை அன்போடு வந்து பார்க்கின்ற பேர்களும், நறுமணமுடைய இக்குதிரை எம்மைச் சிறிது இழுத்துக்கொள்க என்கின்றவர்களும், குதிரையின் மாமிசத்தை யிரக்கின்றவர்களுமான, இவர்கள் எண்ணுகின்ற எண்ணம் எமது நன்மையின் பொருட்டாகுக என்பது.

#### சாயாணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்தைந்தாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

### இருபத்தாறுவது இருக்கு மந்திர ஹோமம்

மந்திரம்:

यन्नीक्षणंमाꣳस्पचन्या उखायायापात्राणि यूष्ण आसेचनानि। ऊष्मण्यापिधाना चरूणामंकाःसूनाः परिभूषन्त्यश्वम्।

#### உரை.

கறிசமைக்கும் பாண்டம், அப் பாண்டத்தை அன்போடு பார்க்கின்றவன், இரசத்தை வார்க்கும் பாத்திரம், கறியை மூடிவைக்கும் மூடி மாமிசத்துளி ஒட்டிக் கொண்டிருக்கும் கத்தி, கிளைகள் முதலியவைகள் என்னும் இவ்வனைத்தும், குதிரைக்குச் செய்ய வேண்டிய காரியத்தையே செய்கின்றன என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இருபத்தாறுவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## இருபத்தேழாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**निक्रमणं निषदनं विवर्तनं यच्च पड्बीश मर्वतः । यच्चपपौयच्च घासिं जघास सर्वाता ते अपि देवेष्वस्तु ।**

### உரை

குதிரை அடிவைக்கு மிடம், கட்டியிருக்குமிடம், மாற்றிக்கட்டுமிடம், காலைக்கட்டுமிடம், அல்லது, காலால்எழுப்பும் தூளி, நீர்குடித்தல், புல்தின்றல், என்னுமிவை யனைத்தும் தேவர்களிடத்திற் சமர்ப்பிக்கப்பட்டன என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இருபத்தேழாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## இருபத்தேட்டாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**मात्वाग्निर्ध्वनयिद्धूम गन्धिर्मोखा भ्राजन्त्यभिपित्तजघ्रिः । इष्टंवीतमभिगूर्तं वषट्कृतं तं देवासः प्रतिगृणभंत्यश्वम् ।**

### உரை.

குதிரையே! உன்னை, அக்கினி, புகைநாற்ற முடையதாகச் செய்யாதொழிக. பக்குவங் கெட்டுப்போகும்படியுஞ் செய்யா தொழிக. நன்றாய்க் காய்ந்துபோன பானை உடைந்து போகாதிருக்குக. இவ்வாறு கெடுதலின்றி நன்றாய்ச் சமைக்கப் பெற்றதாய் தேவர்கட் குரியதாகுக என்று வேள்வித் தலைவனால் எண்ணப் பட்டு, வஷட்காரத்தால் அவிர்ப்பாகங் கொடுக்கப்பட்ட குதிரை அவியைத் தேவர்கள் ஏற்றுக் கொள்வர்களாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்தெட்டாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## இருபத்தொன்பதாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**यदश्वाय वास उपस्तृणंत्यधीवासं या हिरण्यान्यस्मै । संदानमर्वन्तं पड्बीशं प्रिया देवेष्वाया मयन्ति ।**

### உரை.

கொல்லப்படும் குதிரைக்குக் கீழும் மேலும் விரிக்கின்ற துணிகளும், குதிரையின் பொருட்டுத் தேடி வைத்திருக்கின்ற பொன்பணி முதலானவைகளும், குதிரையைக் கட்டுங்கயிறும், காலேக்கட்டுங்கயிறும், தேவர்கட்குப் பிரியமுடையனவாய் விரிந்துவிடுக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்தொன்பதாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

## முப்பதாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**यत्तेसादेमहसा शूकृतस्यपार्ष्णिया वाक शया वातुतोद । स्रुचेवता हविषो अध्वरेषु सर्वाताते ब्रह्मणा सूदयामि ।**

### உரை.

குதிரையே! நீ, ஒலியெழும்படி ஓடுவதற்குக் காரணமாயிருக்கின்ற சாட்டையால், பின்புறத்தில் புறங்காலே வைப்பதற்கு உண்டாக்குகின்ற பீடைகளனைத்தையும், வேள்வியில் முக்கியமாகிய சுருவத்தால் ஹோமஞ் செய்வது போல் ஹோமஞ் செய்கின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முப்பதாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

## முப்பத்தோராவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**चतुस्त्रिꣳशद्वाजिनोदेव बन्धोर्वङ्क्रीरश्वस्य स्वधितिः समेति । अच्छिद्रा गात्रा वयुना कृणोत परुष्परुरनुघुष्या विशस्त ।**

### உரை.

அன்னத்தின் சாதனமும், தேவர்கட்கு மிகப்பிரியமுமாகிய குதிரையின் விலாப்புறத் தெலும்பு பதினேழாகையால், அதாவது முப்பத்து நான்காகையால் கத்தி வைத்தறுத்தல் மிகச் சாக்கிரதையாயிருத்தல் வேண்டும். குதிரையொழிந்த ஏனைய விலங்குகட்கு விலாபுறத் தெலும்பு பன்னிரண்டாம், அதாவது இருபத்து நான்காம். இதனால், மாமிசத்துடன் எலும்புகள் சேர்ந்து

விடாமல் கவனமாய் அறுத்தெடுத்தல் வேண்டு மென்பது பெறப்பட்டது. குதிரையைக் கொல்வோர்காள்? நீவிர், இருதய முதலான அங்கங்களை உணர்ந்து அறுபட்டுப் போகாமல் மெதுவாகக் கொல்வீர்களாக என்பதாம்.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முப்பத்தோராவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

### முப்பத்திரண்டாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**एकस्त्वष्टुरश्वस्या विशस्ताद्वायंतारा भवतस्तथर्तुः । यातेगात्राणा मृतुथा**
**कृणोमिता ता पिण्डानां प्रजुहोम्यग्नौ ।**

### உரை.

குதிரையைக் கொல்லுகின்றவருள் ஒருவன் கொல்கின்றான். இருவர், அங்குமிங்கு மசையாமல் பிடித்துக் கொள்கின்றார்கள். குதிரையே! இருது வால் உபலக்ஷிதமாகக் கொண்ட அவ்வக்காலத்தில் உன்னுடைய அங்கங்களை அறுக்கின்றேன். மாமிசத்தின் நடுவிலிருக்கும் அவ்வங்ககங்களை அக்கினியில் இனிது ஹோமஞ் செய்கின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முப்பத்திரண்டாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

### முப்பத்து மூன்றாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**मात्वातपत्प्रिय आत्मापि यं तं मास्वधिति स्तनुव आतिष्ठिपत्ते । माते**
**गृन्धुरविशस्तातिहाय छिद्रागा त्राण्यसिनामिथूकः ।**

### உரை.

குதிரையே! இவ்வுடம்பை விட்டு தேவர்களை அடையும் உன்னை, விருப்பமுடைய ஆன்மா துன்புறுத்தாததாகுக. கத்தி, உனது அவயவங்களை விட்டு விடாமல் அறுக்குக. உன்னைக் கொன்று அறுக்கின்ற வல்லுநர்கள், அறுக்கும் வகையைத் தவிர்த்து அறுக்காதவர்களாகுக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முப்பத்து மூன்றாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

## முப்பத்து நான்காவது இருக்கு மந்திர ஹோமம்

**மந்திரம் :**

**नवा उवेतन्म्रियसे नरिष्यसि देवा इदेषिपथिभिस्सुगेभिः। हरीते युञ्जा पृषती अभूतामुपास्थाद्वाजी धुरि रासभस्य।**

### உரை.

சாத்திர நோக்கால், குதிரையே! நீ இறப்பதில்லை. கொல்லப்படுவது மல்ல. உலக நோக்கால் இறப்பதென்பதாம். மற்றே, நீ, புண்ணியமார்க்கத் தால் தேவர்களை யடைகின்றாய். அங்கு, இந்திரனாகிய உனக்கு 'ஹரீ' என்னும் குதிரைகள் இரதத்தில் பூட்டப் பெற்றுத் தயாராய் நிற்கும். அங்ஙனமே, மருத்து வடிவை யடைந்த உனக்கு மூன்று குதிரைகள் பூட்டிய தேர் உண்டு. இப்போது, கழுதையைப் போல் பாரத்தைச் சுமக்கும் வன்மையுடைய மற் றொரு குதிரை உன்னைச் சுமக்கும் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முப்பத்து நான்காவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

## முப்பத்தைந்தாவது இருக்கு மந்திர ஹோமம்.

**மந்திரம் :**

**सुगव्य न्नोवाजी स्वश्वियंपुंसः पुत्रां उतविश्वापुषं रयिम्। अनागास्त्वं न्नो अदितिः कृणोतु क्षत्रन्नो अश्वोवनतां हविष्मान्।**

### உரை

இக்குதிரை, எமக்கு, மங்களமான பசுக்கூட்டங்களையும், குதிரைக் கூட் டங்களையும், உலகைப் புரக்கும் தனத்தையுங் கொடுக்குக. அவியாகிய இக் குதிரை, அரசர்கட்கு ஆற்றலை யளிக்குக. இப்பூமி, என்னை பிழையிலாதவ னாகச் செய்க என்பதாம்.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முப்பத்தைந்தாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, சூத்திரப்படி 'क्मैरत्यक्रमीत्' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரத்தால் முப்பத்தாறாவது ஹோமத்தைச் செய்தல் வேண்டும்.

இவ்வாறு மூன்று அநுவாக மந்திரங்கள் முப்பத்தைந்தும், சூத்திரப்படி ஐந்தாங் காண்ட மந்திரம் ஒன்றும் ஆக முப்பத்தாறு மந்திரங்களாலும், முப் பத்தாறு ஆகுதிகளும், குதிரையைக் கொல்வதற்கு முன் அசுவமேத யாகத் திற் செய்ய வேண்டியவைகள் என்பதை யுணர்க.

பதினெட்டாம் அநுவாகம் முடிந்தது.

## பத்தொன்பதாவது அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

अग्नयेऽंहोमुचेऽष्टाकपाल इत्यादिनेरिताः ।
इष्टयोऽग्नेर्मन्वयुक्ता याज्यास्तासु क्रमादिमाः ॥ १ ॥
अग्नेरामेयके द्वी (ही) न्द्रस्यैन्दे मन्वेह्यनन्तरे ।
मैत्रावरुणके वायो वायोसावित्रके रथी ॥ २ ॥
आश्विने मरुतां मारुते देवावैश्वदेविके ।
अनद्वयोश्वाऽ (यंचा) नुमते वैश्वा वैश्वानरेतथा ॥ ३ ॥
द्यावा पृथिव्यके येतु यत्ते स्विष्ट कृतीयते ।
अनुवाके पञ्चदशेमन्त्रा द्वाविंशतिर्मताः ॥ ४ ॥

அசுவமேதம் முடிந்ததும், அதன் அங்கமான பசுவின் சித்ராபிதாணியில், அன்வாயாத்யமாகச் செய்யவேண்டிய அவிகளின் யாஜ்யாபுரோநுவாக்கியங்கள் கூறுகின்றன. அதாவது, அக்கின் அம்ஹோமுக், இந்திராம்ஹோமுக், மித்திராவருணவாகோமுக், வாயு ஸாவித்ர. ஆகோமுக், அசுவினி ஆகோமுக், மருத்ஏனோமுக், விசுவே தேவாஏனோமுக், அநுமதி, அக்கினிவைசுவாநரன், தியாவாபிருதிவி, ஆகோமுக், சுவிஷ்டகிருது, என்னும், 11, தேவதைகளுக்கு, இரண்டிரண்டுகளாகவுள்ள யாஜ்யாபுரோநுவாக்கியங்கள் என்பதாம்.

---

## நான்காங் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பத்தொன்பதாவது அநுவாகம்.

ஆறு பஞ்சாதிக்குமேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது

---

**அசுவமேத சம்பந்தமான யாஜ்யா புரோநு வாக்கியங்களைக் கூறு மந்திரங்கள்.**

अग्नेर्मन्वे प्रथमस्य प्रचेतसोयं पाञ्चजन्यं बहवस्समिन्धते । विश्वस्यां विशि प्रविविशिवांसं समीमहे सनो मुञ्चत्वंहसः । यस्येदं प्राणं निमिषद्यदेजति यस्य जातञ्जनमानञ्च केवलम् । स्तौम्यग्निन्नाथितो जोहवीमि सनो मुञ्चत्वंहसः । इन्द्रस्य मन्ये प्रथमस्य प्रचेतसो वृत्रघ्नस्स्तोमा उपमामुपागुः । यो दाशुषस्सुकृतोहवमुप-

गन्ता ॥ १ ॥ सनो मुञ्चत्वꣳहसः । यस्सङ्ग्राममनयति संवशीयुधेयः पुष्टानि सꣳसृजातित्रयाणि । स्तौमीन्द्रन्नाथितो जोहवीमि सनो मुञ्चत्वꣳहसः । मन्वेवां मित्रा वरुणातस्य वित्तꣳ सत्यौजसा दृꣳहणायन्नुदेथे । या राजानꣳसरथं याथ उग्रातानो मुञ्चतमागसः । यो वाꣳ रथं ऋजुरश्मिस्सत्यधर्मा मिथुश्चरन्त मुपयाति दूषयन् स्तौमि ॥ २ ॥ मित्रा वरुणानाथितो जोहवीमितौ नो मुञ्चतमागसः । वायोस्सवितुर्विदथानि मन्महे यावात्मन्वद्विभृतोयौच रक्षतः । यौ विश्वस्य परिभू बभूवतु स्तौनो मुञ्चतमागसः । उपश्रेष्ठान आशिषां देवयोर्धर्मे अस्थिरन् । स्तौमि वायुꣳ सवितारन्नाथितो जोहवीमितौ नो मुञ्चतमागसः । रथीतमौरथीनामह्व ऊतये शुभङ्गमिष्ठौ सुयमेभिरश्वैः । ययोः ॥ ३ ॥ वान्देवौ देवेष्वनिशितमोजस्तौ नो मुञ्चतमागसः । यदयातं वहतुꣳ सूर्यायास्त्रिचक्रेण सꣳसदमिच्छमानौ । स्तौमि देवावश्विनौ नाथितो जोहवीमितौ नो मुञ्चतमागसः । मरुतां मन्वे अधिनो ब्रुववन्तु प्रेमां वाचं विश्वामवन्तु विश्वे । आशून् हुवे सुयमानूतये तेनो मुञ्चन्त्वेनसः । तिग्ममायुधं वीडितꣳ सहस्वद्दिव्यꣳ शर्धः ॥ ४ ॥ पृतनासु जिष्णु । स्तौमि देवान्मरुतो नाथितो जोहवीमि तेनो मुञ्चन्त्वेनसः । देवानां मन्वे अधिनो ब्रुवन्तु प्रेमां वाचं विश्वामवन्तु विश्वे । आशून् हुवे सुयमानूतये तेनो मुञ्चन्त्वेनसः । यदिदं माऽभिशोचति पौरुषेयेण दैव्येन । स्तौमि विश्वान्देवान्नाथितो जोहवीमि तेनो मुञ्चन्त्वेनसः । अनुनोऽद्यानुमतिरनु ॥ ५ ॥ इदनुमतेत्वं वैश्वानरोन ऊत्या पृष्टो दिवि । ये अप्रथेतामामितेभिरोजा-

भिये प्रतिष्ठे अभवतां वसूनाम् । स्तौमि द्यावापृथिवी नाथितो जोह-
वीमि तेनो मुञ्चतमꣳहसः । उर्वी रोदसी वरिवः कृणोतं क्षेत्रस्य पत्नी
अधिनो ब्रूयातम् । स्तौमि द्यावापृथिवी नाथितो जोहवीमि तेनो
मुञ्चतमꣳहसः । यत्ते वयं पुरुषत्रा यविष्ठाऽविद्वाꣳसश्चकृमा कच्चन ॥६॥
आगः । कृधी स्वस्मान् अदितेरनागाव्येनाꣳसि शिश्रथो विष्वगग्ने ।
यथाहतद्वसवो गौर्यंश्चित्पदि षिता ममुञ्चता यजत्राः । एवात्वमस्मत्
प्रमुञ्चाव्यꣳहः प्रातार्यग्ने प்रतरान्न आयुः ॥ ७ ॥

ஈண்டு, 'अग्नयेऽꣳहो मुचेऽष्टाकपाल' என்னும் பத்து அவிகளையுடைய மிருகா ரேஷ்டியைக் குறித்த நிர்வாபம், (நெல்லெடுத்தல்) சுவிஷ்டகிருத் இடாவைக் குறித்துஞ் சமமாம்.

எடுத்துக்காட்டிய முதலாவது அவிக்குப் புரோநுவாக்கியம்.

---

முதலாவது மந்திரம்

**अग्नेर्मन्वे प्रथमस्य प्रचेतसोयं पाञ्चजन्यं बहवस्समिन्धते । विश्वस्यं विशि प्रविविशिवाꣳसमीमहे सनोमुञ्चत्वꣳहसः ।**

**உரை.**

வேடரை ஐந்தாவதாகவுள்ள குலத்தர்கட்கு இனிமைசெய்யும் எவ்வக் கினியை வேள்வித்தலைவர்கள் வளர்க்கின்றார்களோ? படைப்பின் முதலில் நல் லறிவையுடைய அவ்வக்கினியை மனதாற் சிந்திக்கின்றேன். எல்லாவுயிர்களி டத்தும் சாடராக்கினி வடிவாய்ப் புகுந்துள்ள அவ்வக்கினியை யாம் அடைகின் றோம். அவ்வக்கினி அசுவமேதத்தைப் பற்றிய யாஜ்யாநுவாக்கியங்களால் எம்முடைய பாவத்தை நன்கு போக்குவதாகுக.

---

இரண்டாவது மந்திரம்.

அதற்கே யாஜ்யா வாக்கியம்

**यस्येदम्प्राणं निमिषद्यदेजति यस्य जातञ्जनमानञ्च केवलम् । स्तौम्यग्निं नाथितो जोहवीमि सनो मुञ्चत्वꣳहसः ।**

**உரை.**

மூச்சுக் காற்றுடனும், நிமிட நேரத்துடனுங் கூடியதாய் அசைந்துகொண் டிருக்கின்ற உலகனைத்திற்கும் ஆதாரமாயுள்ள அதாவது, உண்டானவை

களும், மேல் உண்டாகப் போகின்றவைகளும் பிறவற்றைப்பற்றி நிற்கின்றவைகளாதலின் அவைகள் எதனுடைய ஆதீனத்தில் இருக்கின்றனவோ, அவ்வக்கினியைத் துதிக்கின்றேன். பயனை விரும்பிய யான், மீண்டும் மீண்டும் ஆகுதி செய்கின்றேன்; எனது பாவத்தை அவ்வக்கினி நீக்குக என்பது,

---

மூன்றாவது மந்திரம்

'इन्द्रायाꣳहोमुच एकादश कपालं' என்பதற்குப் புரோநுவாக்கியம்.

**इन्द्रस्य मन्ये प्रथमस्य प्रचेतसो वृत्रघ्नस्स्तोमा उपमामुपागुः। यो दाशुषस्सुकृतो हवमुपगन्ता सनो मुञ्चत्वꣳहसः।**

உரை.

படைப்பின் முதலில் உண்டாகியவனும், மிகுந்த வுணர்ச்சியையுடையவனுமாகிய இந்திரனுடைய மூர்த்தியை மனத்தாற் சிந்திக்கின்றேன். பகைவரையழிக்கும் இந்திரனை யணுகின துதிகள் எசமானனாகிய என்னை யடைந்தன. அதாவது, இந்திரனுடைய குணங்களை யெடுத்துத் துதிக்குந் துதிகள் எமது நாவில் இருக்கின்றன வென்பதாம். எவ்விந்திரன், அவி யளித்தவனும், நன்கு கருமத்தை அநுட்டானஞ் செய்தவனுமாகிய எசமானனால் அழைத்தற்குரியானோ, அவ்விந்திரன் எனது பாவத்தைப் போக்குவானாக என்பது.

---

நான்காவது மந்திரம்.

மேற்கூறியதற்கே யாஜ்யா வாக்கியம்

**यस्संग्राममनयति संवशीयुधेयः पुष्टानि सꣳसृजति त्रयाणि। स्तौमीन्द्रन्नाथितो जोहवीमि सनो मुञ्चत्वꣳहसः।**

உரை.

எவ் விந்திரன் போரிடுதற்பொருட்டு சைன்யங்களைத் தன் வசப்படுத்திக்கொண்டு போரிடு மிடத்தை யடைகின்றானோ, எவ் விந்திரன், முடிவான பசு, குதிரை, புருடன் என்பவர்களை எசமானனுடன் சேர்க்கின்றானோ! என்பது விசேடம்; மற்றவை முன்போன்றன என்பது.

---

ஐந்தாவது மந்திரம்.

'मित्रावरुणाभ्यामागो मुग्भ्यां पयस्या' என்பதற்குப் புரோநுவாக்கியம்.

**मन्वेवां मित्रा वरुणा तस्य वित्तꣳ सत्यौजसा दृꣳहणायन्नुदेथे। या राजानꣳ सरथं याथ उग्रातानो मुञ्चतमागसः।**

**உரை.**

மித்திரா வருணர்களே! உங்களுடைய வடிவை மனத்தால் சிந்திக்கின்றேன். இயற்கையில் போற்றுதலையுடையவர்களும், எமது பகைவனுடைய தீய புத்தியை யுணர்ந்தவர்களும், உலக வுபகாரத்தின் பொருட்டு மழையை யுண்டாக்குவதற்கு இரதத்துடன் விளங்கும் சூரியனை யடைந்தவர்களும், வேண்டாதவற்றை விலக்குவதில் மிக வல்லுநர்களுமான நீவிர் இருவரும் எமது பாவத்தைப் போக்குவீர்களாக என்பது.

ஆறுவது மந்திரம்

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்

**यो वां रथ ऋजुरश्मिस्सत्यधर्मा मिथुश्चरन्त मुपयाति दूषयन्। स्तौमि मित्रा वरुणानाथितो जोहवीमितौ नो मुञ्चतमागसः।**

**உரை.**

மித்திர வருணர்களே! உங்களுடைய தேர், நேரான மார்க்கத்திற் செல்வதும், சத்திய தருமமுடையதும், மெய்மையைத் தாங்குவதுமாம். அத்தகைய தேர், அநியாயஞ் செய்யும் பகைவரைப் பழித்துத் தள்ளி விட்டு வந்து சேர்கின்றது எனல் விசேடம். மற்றவை முன்போன்றன என்பது.

ஏழாவது மந்திரம்

'**वायो सावित्र आगो मुग्भ्यां चरुः**' என்பதற்குப் புரோநுவாக்கியம்,

**वायोस्सवितुर्विदथानि मन्महे यावात्मन्वद्विभृतोयौच रक्षतः। यौ विश्वस्य परिभू बभूवतु स्तौनो मुञ्चतमागसः।**

**உரை.**

வாயு, சவிதா, என்னுமிருவர்களின் உண்மைக் கருத்தை யாம் உணர்கின்றோம். எவ் வாயு சவிதாக்கள், தமது உடம்புபோல் உலகைத் தாங்குகின்றார்களோ, மற்றும், எவர்கள் உலகைப் பரிபாலிக்கின்றார்களோ, எவர்கள் உலக முழுதும் வியாபித்திருக்கின்றார்களோ, அவர்கள், எனல் விசேடம். மற்றவை முன்போன்றன என்பது.

எட்டாவது மந்திரம்

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்

**उपश्रेष्ठान आशिषो देवयोर्धर्मे अस्थिरन्। स्तौमि वायुं सवितारं नाथितो जोहवीमि तौनो मुञ्चतमागसः।**

புரோநுவாக்கியம்)

உரை.

பெருமை பொருந்திய எமது பயன்கள், வாயு, சவிதா என்னும் இருவர்களின் சம்பந்தமாகிய கருமத்தின் ஆதீனமா யிருக்கின்றன எனல் விசேடம். மற்றவை முன்போன்றன என்பது.

---

ஒன்பதாவது மந்திரம்

'अश्विभ्यामागो मुग्भ्यां धानाः' என்பதற்குப் புரோநுவாக்கியம்.

**रथीतमौ रथीनामह्व ऊतये शुभङ्गमिष्ठौ सुयमेभिरश्वैः। ययो र्वान्देवौ देवेष्वनिशितमोजस्तौनो मुञ्चतमागसः।**

உரை

அசுவினிகள், தேருடைய தேவர்களுக்குள் அதிசயமான தேர்களையுடையவர்களும், நன்கு செலுத்துங் குதிரைகளால் நல்ல விடத்தை அதிசயமாய்ப் போய்ச் சேர்கின்றவர்களும் ஆவார்கள். அசுவினிகாள்! தேவர்களுக்குள்ளே! உங்களுடைய ஆற்றல் மாத்திரம் மற்றொருவராலும் உறுதிப்படுத்தப்படாதது. அதாவது, இயற்கையிலேயே உங்களுடைய ஆற்றல் மிகக் கூரியது எனல் விசேடம். மற்றவை முன்போன்றன என்பது.

---

பத்தாவது மந்திரம்

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்

**यदयातं वहतुꣳ सूर्यायास्त्रिचक्रेण सꣳसदमिच्छमानौ। स्तौमि देवावश्विनौ नाथितो जोहवीमितौ नो मुञ्चतमागसः।**

உரை.

சூரியனுடைய பத்தினியாகிய தமது மாதாவை விரும்புகின்றவர்களும், உண்மையான இடத்தை விரும்புகின்றவர்களுமான அசுவினிகள், மூன்று சக்கரங்களுடன் கூடிய தேரை நடாத்துதற் பொருட்டு தேரின் மேல் இருக்கின்றவர்களாதலின், அவர்களைத் துதிக்கின்றேன் எனல் முதலியன முன்போன்றன என்பது.

---

பதினோராவது மந்திரம்.

'मरुद्भ्य एनो मुग्भ्यः सप्तकपालः' என்பதற்குப் புரோநுவாக்கியம்.

**मरुतां मन्वे अधिनो ब्रुवन्तु प्रेमां वाचंविश्वामवन्तु विश्वे। आशून्हुव सुयमानूतये तेनो मुञ्चन्त्वेनसः।**

உரை.

மருத்துக்கள் என்னுந் தேவதைகளின் வடிவை மனத்தால் தியானிக்கின்றேன். அதனால், அவர்கள் எம்மைப் பெருமைப்படுத்திப் பேசுவார்களாக. அவர்கள் எமது பிரார்த்தனைகளைப் பாதுகாப்பார்களாக. விரைவிற் செல்கின்றவர்களும், நன்கு நியமனஞ் செய்கின்றவர்களுமான மருத்துக்கள் என்னுந் தேவர்களை எனது பாதுகாப்பின் பொருட்டு அழைக்கின்றேன், எனல் விசேடம். அதனால் எனல் முதலியன முன்போன்றன என்பது.

---

பன்னிரண்டாவது மந்திரம்.

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்.

**तिग्ममायुधं वीडितꣳसहस्व द्दिव्यꣳशर्धः पृतनासु जिष्णु । स्तौमि देवान्मरुतो नाथितो जोहवीमि तेनो मुञ्चन्त्वेनसः ।**

உரை.

மருத்துக்கள் என்னுந் தேவதைகளுடைய ஆயுதங்கள், கூரியவைகளும், உறுதியுடையவைகளும், பேராற்றலுடையவைகளும், உரிய வழக்குக்கட்குத் தக்கவைகளும், இதனால், பிறருடைய சேனைகளுள் வெற்றிச்சீல முடையவைகளுமாகின்றன, எனல் விசேடம் துதிக்கின்றேன் என்பது முதலியன முன்போன்றன என்பது.

---

பதின்மூன்றாவது மந்திரம்.

'विश्वेभ्यो देवेभ्य एनो मुग्भ्यो द्वादशकपालः' என்பதற்குப் புரோநுவாக்கியம்.

**देवानां मन्वे अधिनो ब्रुवन्तु प्रेमां वाचं विश्वामवन्तु विश्वे । आशून्हुवे सुयमानूतये तेनो मुञ्चन्त्वेनसः ।**

உரை

தேவர்களுக்குட் சிறந்த மருத்துக்களை மனத்தால் தியானிக்கின்றேன். அவர்கள் எம்மைப் பெருமைப்படுத்தி நன்மொழி கூறுவார்களாக. பாதுகாப்பின் பொருட்டு விசுவேதேவர்களை அழைக்கின்றேன். ஆதலின், அவர்கள் எமது பாவத்தைப் போக்குவர்களாக என்பது.

இந்த, முற்கூறிய மருத்துக்கட்குப் புரோநுவாக்கியமாகவும், எல்லாத் தேவர்களுடைய புரோநுவாக்கியமாகவுஞ் சேர்த்துக்கொள்க.

---

பதினான்காவது மந்திரம்.

மேற்கூறியதற்கே யாஜ்யா வாக்கியம்.

**यदिदं माभिशोचति पौरुषेयेण दैव्येन। स्तौमि विश्वान्देवान्नाथितो जोहवीमि तेनो मुञ्चन्त्वेनसः।**

உரை.

மனிதர்களின் செய்கையாலும், தேவதைகளின் செய்கையாலும் தேடிய இத்துன்பம், என்னை எல்லா வகையாலும் பீடிக்கின்றது. என்பது விசேடம். அத்துன்பைப் போக்குவதற்குத் துதிக்கின்றேன் எனல் முதலியன முன் போன்றன என்பது.

---

பதினைந்தாவது மந்திரம்.

அநுமத்யை சரு:, என்பதற்கு, யாஜ்யாநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள்.

**अनुनोऽद्यानुमतिरन्विदनुमतेत्वं।**

உரை.

'அநுநோ அத்யாநுமதிர்யக்ஞம்' என்பது புரோநுவாக்கியமாம். அந்விதநுமதேத்வம் மந்யஸா' என்பது யாஜ்யா வாக்கியமாம். இவ் விரண்டிற்கும், 'இதம் வாமஸ்யே ஹவி:' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பது.

---

பதினாறுவது மந்திரம்.

'अग्नये वैश्वानराय द्वादशकपाल:' என்பதற்கு, யாஜ்யாநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள்.

**वैश्वानरो नऊत्या पृष्टो दिवि।**

உரை.

'வைசுவாநரோந ஊத்யா' என்பது புரோநுவாக்கியம். 'ப்ருஷ்டோதிவி ப்ருஷ்டோ அக்கினி:' என்பது யாஜ்யாவாக்கியம். இவ்விரண்டிற்கும், வைசுவாநரோந ஊத்யா' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பது.

---

பதினேழாவது மந்திரம்.

'द्यावापृथिवीभ्यामं होमुग्भ्यां द्विकपाल:' என்பதற்குப் புரோநுவாக்கியம்.

**ये अप्रथेताममितेभिरोजोभिर्ये प्रतिष्ठे अभवतां वसूनाम्। स्तौमि द्यावापृथिवी नाथितो जोहवीमि तेनो मुञ्चत मंहसः।**

உரை.

இவ்வளவென்று கணக்கிட முடியாத ஆற்றல்களாற் புகழ்பெற்றவைகளும், தனங்கட்கு ஆதாரங்களுமான மண் விண் என்னும் இரண்டையுந் துதிக்கின்றேன் எனல் விசேடம். ஏனையவை முன்போன்றன என்பது.

---

பதினெட்டாவது மந்திரம்.

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

**उर्वीरोदसी वरिवः कृणोतं क्षेत्रस्य पत्नी अधिनो ब्रूयातम्। स्तौमियावापृथिवी नाथितो जोहवीमि तेनो मुञ्चतमꣳहसः।**

உரை.

மிகப் பரந்துள்ள மண் விண்களே! நீவிர், தனத்தை, அல்லது, பூஜை (பெருமை)யைச் செய்வீர்களாக. க்ஷேத்திரத்தின் பத்திகளான மண் விண்களே! நீவிர் எம்மைப் பெருமைப்படுத்திப் பேசுவீர்களாக எனல் விசேடம். துதிக்கின்றேன் என்பது முதலியன முன்போன்றன.

---

பத்தொன்பதாவது மந்திரம்

ஸ்விஷ்டகிருதிற்குப் புரோநுவாக்கியம்

**यत्ते वयं पुरुषत्रायविष्ठाविद्वाꣳसश्चकृमा कच्चनाऽऽगः। कृधीस्वस्माꣳ अदिते रनागाव्येनाꣳसि शिश्रथो विष्वगग्ने।**

உரை.

கட்டிளமையுடைய அக்கினியே! யாம் ஞானமில்லாதவர்களாக இருக்கின்றோம். ஆதலின் உன்னுடைய மனிதர்கட்கு சிறிது யாதோ ஒரு பிழை செய்திருக்கின்றோம். விரிந்த தன்மையையுடையோய் அப் பிழையைப் பொறுத்துக் கொள்வாயாக. அக்கினியே! நீ எமது பாவத்தை விலக்குவாயாக என்பது.

---

இருபதாவது மந்திரம்.

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

**यथाहतद्वसवो गौर्यं चित्पदिषिता ममुञ्चतायजत्राः। एवात्वमस्मत्प्रमुञ्चाव्यꣳहः प्रातार्यग्ने प्रतरान्न आयुः।**

**உரை.**

உலக வாழ்விற்குக் காரணமாகிய அக்கினியுடன் கூடிய தேவர்களே, நீவிர், கட்டுப்பட்ட வெள்ளைப் பசுவை அவிழ்த்து விட்டீர்கள். அக்கினியே! நீ! அதுபோல் எமது பாவத்தை விடுவிப்பாயாக, எமது ஆயுளை அதிகமாகும்படி செய்தருள்வாயாக என்பது,

---

இப் பிரபாடகத்தின் அநுவாக எண்களைக்காட்டும் தலைப்புச் சொற்கள் :—

अग्ना विष्णू ज्यैष्ठ्यं॰ शंचोक्चाश्मा चाग्निश्चांशुश्चेध्मश्चअग्निश्च घर्मो
गर्भाश्चैकाच वाजो नोऽग्निं युनज्मि ममाग्नेऽग्नेर्मन्वे ॥ १५ ॥

பஞ்சாதிகளின் எண்ணைக் காட்டுந் தலைப்புச் சொற்கள் :—

अग्ना विष्णू अग्निश्च वाजो नो अदब्धो गोपा ॥ ३९ ॥

பத்தொன்பதாவது அநுவாகம் முற்றிற்று.

நான்காங் காண்டம் முடிந்தது.

சுப்ரமண்யோம் சுப்ரமண்யோம் சுப்ரமண்யோம்

